# ஒளிவளர் திருப்புகழ் மதாணி




ஸ்ரீ அருணகிரிநாதர்

அ. தணிகைவேலன்

# ஒளிவளர் திருப்புகழ் மதாணி



## ஸ்ரீ வள்ளிமலை
## திருப்புகழ்ச் சச்சிதானந்த சுவாமிகள்

திருப்புகழைப் பரப்பியவர்

# ஒளிவளர் திருப்புகழ் மதாணி

ELIVALAR TIRUPPUGAZH MADANI

by

A. THANIGAIVELAN

ஆசிரியர் :

**அ. தணிகைவேலன்**

புத்தகம் கிடைக்குமிடம் :

**அருணகிரி பதிப்பகம்**

நெ.26, கந்தசாமி கோவில் தெரு,

பெரம்பூர் பேரக்ஸ், சென்னை-600 012.

தொலைபேசி : 2662 2849

# நூல் விவர அட்டவணை


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | ஒளிவளர் திருப்புகழ் மதாணி |
| ஆசிரியர் | : | அ. தணிகைவேலன் |
| மொழி | : | தமிழ் |
| முதற்பதிப்பு | : | ஆகஸ்ட், 2007 |
| தாள் | : | 11.6 கி.கி. வெள்ளைத்தாள் |
| நூல் அளவு | : | 1 X 8 கிரவுன் |
| பக்கங்கள் | : | 192 பக்கங்கள் |
| விலை | : | ரூ.75.00 |
| எழுத்து | : | 11.5 புள்ளி |
| கணினி | : | சாய் விஷ்ணு ஜெராக்ஸ்<br>சூளை, சென்னை-112.<br>தொலைபேசி : 2669 0272 |
| வெளியிடுபவர் & உரிமை | | மு.அருணகிரி<br>அருணகிரி பதிப்பகம்<br>நெ.26, கந்தசாமி கோயில் தெரு,<br>பெரம்பூர் பேரக்ஸ், சென்னை-600 012.<br>தொலைபேசி : 2662 2849 |
| அச்சிட்டோர் | : | மூவேந்தர் அச்சகம்<br>இராயப்பேட்டை, சென்னை-14.<br>தொலைபேசி : 2835 1189 |



இந்நூல்
திருமலை - திருப்பதி தேவஸ்தான
நிதி உதவியுடன் அச்சிட்டு வெளியிடப்படுகிறது.
- நன்றி! -

This Book
is Printed and Published with the Financial Assistance
of Tirumala - Tirupati Devasthanams.
Thanks and Hail to
LORD VENKATESWARA.

**டாக்டர் ஔவை நடராசன்**
முன்னாள் துணைவேந்தர்

## திருப்புகழுக்குத் திறன் மிளிரும் அணிகலம்

"ஒளிவளர் திருப்புகழ் மதாணி" என்னும் அருமையான அணிகலனை உருவாக்கி இருக்கிறார் நூலாசிரியர் அ. தணிகைவேலன் அவர்கள்.

மதாணி என்பது மார்பிலணியும் ஓர் அணிகலன். திருப்புகழ் மதாணிக்ருபாகரன் என்பது திருவகுப்பு. ஆடவர் பெண்டிர் யாவராயினும் அவருக்கு அழகு தருவது மார்பும், மார்பிலணிந்த அணிகலன்களுமேயாம்; ஆகையால் அணிகலன்களில் மதாணி மாட்சியுடையதாகும்.

தமிழ்க் கடவுள் எனப் போற்றும் முருகனுக்கு வேறு எந்தக் கடவுளருக்கும் இல்லாத அளவுக்குச் சிற்றிலக்கியங்களைப் படைத்துச் சூட்டியுள்ளனர் பைந்தமிழ புலவர் பெருமக்கள்.

பிள்ளைத் தமிழ், பள்ளு, அந்தாதி, கலம்பகம், குறவஞ்சி என அந்தப் பட்டியல் நீண்டு செல்கின்றது. அவற்றில் சிந்தை கவரும் சந்தம் மலிந்த பாக்களால் முந்தி நிற்பது திருப்புகழ் ஒன்றே என்பதில் ஐயமில்லை. தாம் வாய் மலர்ந்த தமிழைத் திருப்புகழ என்று அருணகிரி வள்ளலே, வயலூர் கணபதி வாயிலாக பெற்றவராவார். திருப்புகழின் பெருமையினையும் அதனையோதுபவர் பெறும் கீர்த்தியினையும் பல இடங்களில் அருணகிரிநாதரே எடுத்து ஓதினார். எடுத்துக்காட்டாக,

*"நினைத்ததும் அளிக்கும் மனத்தையும் உருக்கும் நிசிக்கரு அறுக்கும் - பிறவாமல்*
*நெருப்பையும் எரிக்கும் பொருப்பையும் இடிக்கும்*
*நிறைப்புகழ் உரைக்கும் செயல்தாராய்"*

என்று திருத்தணிகைத் திருப்புகழ்த் தொடர்களைக் கூறலாம்.

முத்து, பவளம், மாணிக்கம், நீலம், வைரம் முதலிய மணிகள் ஏற்றபெற்றி பொன்னில் அழுத்திச் செய்த பரல்கள் அமைந்திருத்தல் போன்று, இந்த நூலும் பல்வகைக் கருத்துக்களை ஏற்றபெற்றியே அமைத்துத் திருப்புகழில் நம்மைத் திளைக்கச் செய்கிறது.

ஆாவலரும் நூலாசிரியருமாகிய திரு அ. தணிகைவேலனாரின் கட்டுரைகள் திருப்புகழ்ச் சொல்லாட்சிகளை நயம் பெற விளக்குகின்றன. சில கட்டுரைகள் திருப்புகழ்க் கருத்துக்களைப் பிற இலக்கியங்களோடு ஒப்பிட்டு மகிழ்கின்றன. சில கட்டுரைகள் திருப்புகழ்ப் பாடலேற்ற தலங்களைப் பற்றிய வர்ணனைப் படப்பிடிப்புகளாக வடிவெடுக்கின்றன. சில கட்டுரைகள் இலக்கியக் காட்சிகளின் இன்னோவியமாய் திகழ்கின்றன. சில கட்டுரைகள் பத்தி எனும் பழத்தைப் பிழிந்த தேம்பிழி மதுரச் செழுஞ்சுவைச் சாறாக ஊற்றெடுக்கின்றன.

கம்பராமாயணம், சீவகசிந்தாமணி, திருக்குறள், பெரியபுராணம், கந்தபுராணம், திருவிளையாடல் முதலிய பல இலக்கியங்களின் செழுந்தமிழ்ப் பாக்கள் இடையிடையே எடுத்துக்காட்டாய் இன்முகம் காட்டுகின்றன.

நூலாசிரியரின் தந்தையார் திருப்புகழ் மாமணி திரு மு. அருணகிரி அவர்களைப் போலவே, அவர் தம் அருமந்த மைந்தரும் பிறமொழிப் புலமையும், பக்தியூட்டமும் பெற்று கட்டுரைகளை கவின்பெற வரைந்துள்ளார். இந்நூல் திருப்புகழ் பற்றிய விரிவுரை நூல்களில் ஒன்றாய் இப்போது உலா வருகிறது. தேவார திருவாசகங்களுக்கு ஒளிநெறிக் கட்டுரைகளைச் சான்றோர்கள் அக்காலத்து எழுதியுதவினர். தமிழ்த்திரு தணிகைமணியார், தவத்திரு வாரியாரடிகள், வாகீச கலாநிதி கி.வா.ஜ. போலும் மிகச் சிலரே திருப்புகழ்க் கடல் கடந்த மிகு புலமை மீகாமர் எனப்படுவர். அவர்களைப் பின்தொடர்ந்து வரும் நிலையில் திருப்புகழ் மாமணி அருணகிரியின் மகனாகிய அ. தணிகைவேலன் தனி பாராட்டுக்குரியவராவர்.

சிவகாசியின் தொன்மை பற்றிய ஆசிரியரின் கருத்து போற்றத்தக்கது. ஆயின் அவ்வூராரது மனம் வருந்தா வண்ணம் எடுத்தியம்பியுள்ளார். அருணகிரியார் பாட்டில் சிவகாசி என்பது கங்கைக் கரையில் சிவம் பெருக்கும் காசியாகிய வாரணாசியேயாதல் தெளிவு. அச்சுக்கலைக்கும் அதிர்வெடிக்கும் அளப்பெரும் புகழ் பெற்ற இற்றைய சிவகாசி அண்மையில் உருவான தொழில் நகரமாகும். தென்காசியைக் கொண்டு சிவகாசியையும் புனைந்தனர் போலும்.

திருப்பத்தூராயினும் திருவரங்கமாயினும் அவ்வத்தலங்களைப் பற்றிய கையேடு போலப் பல்வகைச் செய்திகளைப் பாங்குறத்திரட்டித் தரும் ஆசிரியரது கருத்து பாராட்டுக்குரியது.

அருணகிரியார் வரலாற்றை அன்பர் அ. தணிகைவேலன் மக்கள் புனைந்து வழங்கும் முறையிலேயே வரைந்திருக்கிறார். புலவர் புராணம் வரைந்த வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் மக்களின் வாய்வழிக்கேட்ட வண்ணம் எழுதினேன், எனது கற்பனை ஏதுமில்லை என்று உரைப்பதை அன்பர்கள் உணர்வது நல்லது.

அருணகிரியார் பிரபுடதேவராயர் காலத்தவர் தாம் என்பதில் ஐயமில்லை. அருணகிரியார் பிரபுடதேவராயர் வேண்டுகோளின்படி இறந்த ஒரு கிளியின் உடலில் புகுந்து, விண்ணுலகு பறந்து பாரிசாத மலரைக் கொணர்ந்தார் என்றும் அதற்குள் சம்பந்தாண்டான் அவரது உடலை எரித்து விட்டான் என்றும் கிளியுருவிலேயே அமர்ந்து அருணகிரியார் திருப்புகழ், அநுபூதி முதலியன பாடினார் என்றும் கதை வழங்குகிறது. அருணகிரி வள்ளல் சுகசொரூபம் என்றும் சுகபதம் என்றும் அருளிச் செய்வது தாம் அடைந்த அனுபூதி நிலையாகிய பேரின்ப நிலையே ஆகும். மோனம் என்னும் கூண்டில் இருந்து அநுபூதி நிலை பழகும் பேரின்பத்தைக் கூண்டிலிருக்கும் கிளி என்பதாகச் சிலர் பொருள் கொண்டனர். திருவண்ணாமலையில் சம்பந்தாண்டான் ஒரு சைன மடத் தலைவர் ஆவார். (அருணகிரியாருக்கும் வில்லிபுத்தூராருக்கும் இடையே நிகழ்ந்ததாகச் சொல்லப்படும் வாதங்களும் கற்பனையேயாம்)

ஏழையின் இரட்டை வினையாயது ஒரு உடற்சிறை இராமல் விடுத்தருள் நியாயக்காரன் என்னும் திருவகுப்புத் தொடர் மீண்டும் சிந்திக்கற்பாலதாம். இரட்டை வினை என்பது புண்ணிய பாவங்கள் என யாவரும் அறிவர். இந்த நல்வினை தீவினைகளே ஒருவனுக்கு ஏற்றபெற்று ஓர் உடலில் சிறைப்படும் நிலையை உருவாக்குகின்றன. அருணகிரி போலும் அருளாளருக்கெல்லாம் முருகவேள் உடற்சிறை வீடு இராது செய்கிறான். நல்வினை தீவினையாகிய இரட்டைக் கட்டினை அறுத்து விடுகிறான் என்பது பொருளாகும். இவ்வாறு எந்தையார் கூறியது நினைவில் நிற்கிறது. பாரிசாதக் கதையைப் புனைந்து மகிழ்ந்தவர் எல்லோரும் இரட்டையுடல் என்பது கிளியுடல், மறைத்து வைத்த பூத உடல்களைக் குறிப்பது என வலிந்தும் நலிந்தும் பொருள் கொள்வாராயினர். அருணகிரிநாத வள்ளலின் வரலாற்றைப் பலவாறு பலரும் திரித்து வழங்குவதை அறிந்து அதில் மனம் பற்றாது, புலவர்களும் ஆர்வலர்களும் திருப்புகழ் அருளமுதத்தில் தோய்தல் மட்டுமே செய்ய முன்வர வேண்டும் என்பது என் உள்ளக்கிடை.

சுந்தரருக்குச் சடங்கவி சிவாச்சாரியர் என்பாருடைய மகளை மணம் பேசினர், திருமணத்தன்று சிவபெருமான் குறுக்கிட்டுத் திருமணம் நடைபெற ஒட்டாது தடுத்தாட் கொண்டார் என்பதை அறிவோம். ஆசிரியர் தணிகைவேலன் இங்கு ஒரு வினா எழுப்புகிறார். தந்தை பெயரைக் குறிப்பிடும் சேக்கிழார் அப்பெண்ணின் பெயரை எக்காரணங்கொண்டும் குறிப்பிடாமல் விட்டாரே என்று ஆராய்கிறார். திருமணம் நின்று போனதால் நற்பேறிழந்தவள் இவள் என்று பெயர் சொல்லி உலகம் பேசும் நிலைமைக்கு அவரை ஆளாக்கலாகாது என்னும் இரக்க உணர்வில் அவரைப் பெயர் குறிப்பிடாது போனார் சேக்கிழார் என்பது திரு. தணிகைவேலரின் துணிவு. இது எதிர்மறையினால் பெண்மையைப் பாராட்டும் புலமை என்கிறார்.

திருஞான சம்பந்தர் மணந்த மகளாரின் பெயரையும் சேக்கிழார் குறிப்பிடவில்லை. நாயன்மார் பலரின் இல்லத்தரசியாரின் பெயரையும் அவர் குறிப்பிடவில்லை. இயற்பகையார், ஏயர்கோன் கலிக்காமர், நீலநக்கர், அரிவாட்டாயர் போலும் நாயன்மாரின் தொண்டுகள் அவர்தம் மனைவியாராலேயே ஒளி செய்கின்றனவேனும் அவர்களுடைய திருப்பெயர்களை நாம் அறிந்து கொள்ளுமாறு இல்லை. அக்காலத்தார் இயல்பமைந்தவாறு கணவர் பெயரினும் புகழினும் மனையிருடைய மாட்சி அடங்கியிருந்ததெனக் கருதலாம். எனவே தனித்து மனைவியர் பெயரைக் குறிக்கவில்லை போலும்!

"அன்பர் திரு. தணிகைவேலன் தந்துள்ள மதாணி நன்கு சிந்தித்து நவமணி இழைத்துச் செய்த அணிகலமாக மிகப் பொலிகின்றது". திருப்புகழ்ப் பாக்களை இசையோடு பாடுதற்கு ஆயிரமாயிரம் மக்கள் உண்டு. அதனைச் சிந்தித்து நயங்காணும் அறிஞர்கள் ஆயிரத்தொருவர்கூட நம் கண்ணுக்கெட்டிய தொலைவில் காண்பதற்கில்லை. திருப்புகழில் தோய்வதற்குப் புலமையும் துணிவும் ஆற்றலும் கொண்டு தந்தையாரோடு ஒப்பத் தணிகைவேலர் எழுதியதை வரவேற்றுப் போற்றுகின்றேன். திருப்புகழில் மேலும் மூழ்கி முத்தெடுப்பாராக என அவரை வாழ்த்துகிறேன்.

அன்புள்ள,

**டாக்டர். ஔவை நடராசன்**

***முனைவர் வி.சி. சசிவல்லி***
*தமிழ்ப்பேராசிரியர், (ஓய்வு)*
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*
*சென்னை-600 113.*

# அணிந்துரை

*"அவனருளாலே அவன்தாள் வணங்கிச்*
*சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை*
*முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்யான்"*

என்றருளினார் மணிவாசகப் பெருமான். அதுபோன்று அருணகிரிநாதரும், திருவண்ணாமலை மேவும் தமிழ்க்குமரனாம் கந்தவேளின் திருவருள் பெற்று அவனது அருமை பெருமைகளைத் திருப்புகழாகிய நூல்களாகப் பாடிய மகிழ்ந்தார்.

அருணகிரிநாதர் பாடியருளிய திருப்புகழ்ப் பாடல்களால் மனம் ஈர்க்கப்பட்டுப் பாடிப்பரவிய பரம பக்தர்களுள் ஒருவர் திருப்புகழடிமை கா.ரா. முருகேசம் பிள்ளை ஆவார். அவர் தன் குருவின் கட்டளைக்கிணங்கித் தணிகைமணி வ.சு.செ. பிள்ளையிடம் திருப்புகழ்ப் பாடம் கேட்டு வரலானார். அப்பொழுது அவருடைய மகனார் அருணகிரி என்பவரும் உடன் செல்வது வழக்கம். திருப்புகழ்ப் பாடற் பொருளால் பெரிதும் ஈர்க்கப்பட்ட அருணகிரி சிறுவயது முதற்கொண்டே ஆன்மிகத்தில் தம் சிந்தனையைச் செலுத்தினார். "தொட்டனைத் தூறும் மணற்கேணி" போல் அருணகிரி அவர்களின் சிந்தையில் திருப்புகழ்ப் பாடல்களில் பொதிந்துள்ள முத்தனைய அரிய கருத்துக்கள் அனைத்தும் முகிழ்த்தெழுந்தன. அவற்றின் பயனாய் அருணகிரி அவர்கள் முருகபிரானின் பெருமைகளை எடுத்தியம்பும் பல்வேறு சிறந்த கட்டுரைகளை எழுதி அவற்றை நூல்களாகவும் வெளியிட்டுள்ளார்.

இன்றும் அவர் தமது வயது முதிர்ந்த நிலையிலும் ஆர்வங்குன்றாது திருப்புகழ் மாமணி மு. அருணகிரி என்ற திருப்பெயருடன் தொண்டாற்றி வருகின்றார். அதுமட்டுமன்றித் தம் மகனார் திரு. அ. தணிகைவேலன் அவர்களையும் தம் வழியைப் பின்பற்றச் செய்தது போற்றுதற்குரியது.

திரு. அ. தணிகைவேலன் அவர்கள் எழுதியுள்ள, "ஒளிவளர் திருப்புகழ் மதாணி" என்ற இந்த அருள்நூலில் 51 கட்டுரைகள் உள்ளன. தற்காலத்தில் மக்களால் ஈர்க்கப்பட்டு படிக்கப் பெறும் தொடர் கதைகள் போன்று இந்நூலில் எழுதப்பட்டுள்ள ஒவ்வொரு கட்டுரையும் பெரிதும் விறுவிறுப்புடன் படிக்கத் தூண்டும் வகையில் அமைந்துள்ளது பாராட்டிற்குரியது. ஒவ்வொரு தலைப்பிலும் ஒவ்வொரு புதுப்புது செய்தி. அவற்றுள் சில அறிந்தவை என்றாலும் பல செய்திகள் ஆசிரியர் கண்டறிந்து கூறியுள்ளது வியக்க வைக்கின்றது.

இந்த நூலில் தலங்களின் பெயர்களால் பல கட்டுரைகள் உள்ளன. ஒவ்வொரு தலத்தின் சிறப்பையும் எடுத்துரைப்பது அற்புதம். ஒவ்வொரு தலமும் அமைந்துள்ள இடம், வரலாறு, பெயர்க்காரணம், அங்கு இறைவன் நடத்திய திருவிளையாடல், அங்கு வாழ்ந்த ஊர்ப் பெருமக்கள் போன்ற அருஞ்செய்திகளைத் தாங்கி அமைந்துள்ளது. 'சிவகாசியா? வடகாசியா?' என்ற தலப்பெயர் ஆய்வு. 'மாணி', தபோதினி, ஐயாறு, அப்படி இப்படி', போன்ற சொல்லாய்வுகள், ஆசிரியரின் ஆராய்ச்சித் திறனுக்கு நல்ல சான்றுகளாக அமைந்துள்ளன.

இன்றைய நாளில் பெண்களுக்குச் சம உரிமை வழங்க வேண்டும் எனப் பேச்சோடு அறிவிப்பதோடு எந்த பயனும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால் பழங்காலத்தில் பெண்கள் ஆடவர்களுக்குச் சமமாகப் போற்றப் பெற்றனர் என்பதை நந்திவர்ம

பல்லவன் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்த பெருங்கருணை நாச்சியார் எனும் அம்மையார் வரலாறு மூலம் விளக்கியுள்ள பாங்கு படித்துப் பெருமிதம் கொள்ளச் செய்கின்றது.

'கம்பனைக் கவர்ந்த இராமன்' என்ற தலைப்பில் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற தமிழ்ப் பண்பாட்டிற்கு ஏற்ப இந்திய மக்களின் பண்பாட்டை இணைக்கவே வடக்கே இராமனையும் தெற்கே இராவணனையும் மூலப்பொருளாகக் கொண்டு பரஸ்பரம் ஏற்படுத்தவே இக்காவியத்தின் நோக்கம் எனக் கருதுவதில் என்ன பிழை என்று ஆசிரியர் வினவுவது நமது சிந்தனைக்கு விருந்து.

'ஒளிவளர் திருப்புகழ் மதாணி' என்ற இந்த ஆன்மிக நூல் உண்மையில் அருணகிரிநாத சுவாமிகளின் அருட்பாடல்களில் புதைந்து கிடக்கும் அரும்பெருஞ் செய்திகளைச் சுடர்விட்டுப் பிரகாசிக்கச் செய்யும் மதாணியாய் அமைந்துள்ளது என்பதில் ஐயமில்லை.

"*தஞ்சமாகிய வழிவழி யருள்பெறும்*
*அன்பினாலுன தடிபுகழ் அடிமை*" (*திருப்புகழ்-79*)

என்பது அருணகிரிநாதர் வாக்கு. திரு. கா.ரா. முருகேசம் பிள்ளை அவர்கள் குடும்பத்தாரும் அருணகிரிநாதரின் வழிவழி அடியார்களாய் இருந்து, அவரது அருட்பாடல்களை இன்றைய இளந்தலைமுறையினரும் விரும்பிப் படிக்கும் வகையில் ஆன்மிக நூல்களை எழுதி வருவது அரும்பெருந்தொண்டாகும். அவர்கள் என்றென்றும் வளம்பல பெற்று நலமுடன் வாழத் திருத்தணிகேசன் அருள்புரிவாராக, வேலும் மயிலும் துணை.

அன்புள்ள,

**முனைவர் வி.சி. சசிவல்லி**

உ

அன்பே சிவம்

"திருமுறை மாமணி" "மதுரச் சொல்மணி"

**ஜெ. மகாதேவன்**

(தலைவர். சேக்கிழார் மன்றம்)

இராயபுரம், சென்னை-13.

"திருக்கயிலை"

பாலவாக்கம்,

சென்னை-41.

# அணிந்துரை

*"உரைபெற வகுத்தருணை நகரில் ஒரு பத்தனிடும்*
*ஒளிவளர் திருப்புகழ் மதாணி க்ருபாகரனும்" - திருவகுப்பு*

"திருப்புகழ் மாமணி" குகத்திரு. மு. அருணகிரி ஐயா அவர்களை சமயவுலகம் நன்கறியும். அவர்தம் அன்புத்திரு மகனார் திருமிகு. அ. தணிகைவேலன் அவர்கள் எழுதியுள்ள அரிய உரைநடை நூல் "ஒளிவளர் திருப்புகழ் மதாணி" குருவருளும், திருவருளும் துணை புரிய இப்போது வெளிவருகின்றது.

இந்நூல், வாக்கிற்கு அருணகிரி என்று ஆரம்பித்து திருவாசகத்தின் சாரங்கள் என்று நிறைவு பெறுகிறது. 51 தலைப்புகளில் நூலாசிரியர் பல அரிய பெரிய கருத்துக்களை எளிமையாக விளக்கியுள்ளத் திறம் போற்றுதற்குரியது. ஆசிரியரின் பன்முக ஞானம், இலக்கியப் பயிற்சி, திருமுறைகள் திருப்புகழ் முதலான அருள் நூல்களில் ஆழங்கால் பட்டநிலை ஆகியன இந்நூல் மூலம் வெளிப்பட்டு, நம்மை பரவசத்தில் ஆழ்த்துகின்றன.

ஒரு சில அரிய செய்திகளைச் கீழேத் தருகின்றேன். அவற்றை, நூலின் விரிவாகப் படித்துச் சுவைக்க வேண்டுகிறேன்.

1. இறவாப்பனை, பிறவாப்புளி உள்ள திருத்தலம் பேரூர் பட்டீஸ்வரர் திருக்கோயில்.
2. மநுநீதிச் சோழன் நெறியில் தன் கணவனைத் திருத்திய பெருங்கருணை நாச்சியார் – குடியைத் தடுத்த தெள்ளாறு நாச்சியார் என்று கல்வெட்டுக்களில் போற்றப்படுகிறார்.

3. பெரியபுராணத்தில் காணாத சம்பந்தரது செய்திகள் (மிக அருமை)
4. பழியஞ்சிய படலம் – திருவிளையாடல்புராணம்.
5. வனமுறை வேடன் அருளிய பூசை மகிழ் கதிர்காமம் உடையோன் – திருப்புகழ் விளக்கம்.
6. மதுரையின் மாண்பு.
7. சிவகாசி என்பதின் உட்பொருள் – அந்நகர் சிவனடியார் திருக்கூட்டத்தின் பேரன்பு.
8. பெண்மையைப் போற்றும் சேக்கிழார் பெருமான்.
9. கல்வி கரை கண்ட புலவோன் – திருப்புகழ் விளக்கம்.
10. வலைமகள் எனும் பதத்தின் பொருள்.
11. பழநியாண்டவர் அருள் வரலாறு.
12. பங்குனி உத்திரத்தின் சிறப்பு.
13. திருவோத்தூர் (திருவந்திபுரம் – செய்யாறு) தலச்சிறப்பு.
14. திருவல்லிக்கேணி அ/மி பார்த்தசாரதி திருக்கோயில் வரலாறு.
15. முழுதும் அழகிய குமரன் – திருப்புகழ் விளக்கம்.
16. திருச்செங்காட்டங்குடியின் சிறப்பு (மாலை வழிபாடு சிறந்தது – பிறவித் துன்பத்தைப் போக்கும்)
17. நாலாயிர திவ்விய பிரபந்தம் தோன்றிய வரலாறு.

இந்நூலாசிரியர் எளிய தமிழில் இனிமையாக, படிப்பவர்க்குச் சோர்வு ஏற்படா வண்ணம் கட்டுரைகளை வழங்கியுள்ளார்; இந்நூலைப் படித்தாலே பல நூல்களைப் படித்த பயன்களைப் பெறுகின்றோம். ஆசிரியர்க்கு நன்றி செலுத்த தமிழ், சமயச் உலகம் கடமைப்பட்டுள்ளது.

ஆசிரியர் இதுபோன்ற ஆய்வு நூல்கள் பல எழுதி வெளியிட வேண்டும். மக்களும் படித்தும், படிப்பித்தும், நூல்களை வாங்கியும், வாங்குவித்தும், வழங்கியும் பயன்பெறவேண்டுகிறேன். எல்லாம் வல்ல முருகப் பெருமான் திருவருள் துணை புரியும் என்பதில் ஐயமில்லை.

மிக்க நன்றி!

அன்புள்ள;

**ஜெ. மகாதேவன்**

# முகவுரை

"அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது
அதனின் அரிது கூன் குருடு செவிடு இன்றி நீங்கி
பிறத்தல் அரிது"

என்பது ஆன்றோர்கள் வாக்கு. அத்தகு பிறவி எடுத்ததின் வாய்ப்பு அடியேனது பெற்றோர்கள் செய்த தவப்பயனே, மேலும் இப்பிறவியில் ஆற்றிய இறைபணிகளே துணை புரிந்தது என்றால் மிகையாகாது.

மாதா, பிதா, குரு, தெய்வம் என்பது யாவராலும் ஏற்றுக் கொண்ட போதிலும், நான்கும் ஒரு சேர ஒருவருக்கு அமைவது இன்றியமையாதது ஆகும். ஒருவருக்கு மூன்றுமே துணை கிடைக்காது போனாலும், தெய்வத்தின் துணை கிடைக்கும். அடியேனுக்கு மேற்கூறிய நான்குமே அமைந்தது என் வாழ்நாளில் கிடைத்தது ஒரு நல் அறிகுறியாகும். தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளையின் ஆசியோடு, எனது தந்தையார், "தணிகைவேலன்" எனும் பெயரை எனக்கு வைத்தது, சோடைபோகவில்லை.

அடியேன் வாழ்நாளில், இரைதேடுவதோடு இறையையும் தேடும் மார்க்கத்தில் ஈடுபடச் செய்தது தேவாரமும் திருப்புகழ் போன்ற அருட்பாடல்களே என்றால் மிகையாகாது.

அடியேன், அரசாங்க வங்கியில் துணை அதிகாரியாக பணிபுரிந்த நாளிலிருந்தே, தேவாரம் திருப்புகழ் பாடல்களால் மிகவும் ஈர்க்கப்பட்டு தந்தையாருடன் பல திருப்புகழ் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் வாய்ப்பு கிட்டியதால், நல்லாரிணக்கமும் வாய்க்கப் பேருதவியாயிருந்தது.

அடியேன், தந்தையாரையே கண்கண்ட குருவாக கருதியதோடு, தந்தையார் மூலமாக வள்ளிமலை திருப்புகழ் சச்சிதானந்த சுவாமிகளை மானசீக பரமகுருவாக ஏற்கும் பாக்யம் பெற்றேன். இத்தொடர்பே அடியேன் திருப்புகழ், தேவாரம் பாடல்கள் பாடும் பணிக்கு வித்திட்டது போலானது.

என்றென்றும், அடியேன் தந்தையின் அறிவுரைகளை இமயத்திற்கு மேலாகவும், தாயின் அன்பு கடலினும் ஆழமாகவும் கருதி வாழ்ந்து வருகிறேன்.

என் தந்தையார் போல், வாழையடிவாழையாக, அன்னாரது சந்ததிகளாகிய நாங்களும் இறைசம்பந்தமாக பல அரிய கருத்துக்களை அருளாளர்களின் பாடல்களிலிருந்தே பல

கட்டுரைகளை ஒரு புத்தகமாக தொகுத்து வழங்க என் மனதில் வெகுநாட்களாகவே நாட்டமிருந்தது. இதனை அறிந்த எனது தந்தையார் மேலும் ஊக்கமளித்தது எனக்கு பேருதவியாயிருந்தது.

"ஒளிவளர் திருப்புகழ் மதாணி" எனும் தலைப்பில் கட்டுரைகள் எழுதி முடித்தேன். திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரை, நிதி உதவி அளிக்க விண்ணப்பித்தேன். மாலோன் மருகனின் பெருமைகளை கேட்டு மகிழ, அ/மி. வெங்கடாசலபதியே விருப்பம் கொண்டான் போலும். அடியேனது கட்டுரைகளை புத்தகமாக வெளியிட, திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரும் அனுமதி அளித்தது, வாழைப்பழம் நழுவி பாலில் விழுந்தது போல் தோன்றிற்று.

இன்றைய நாளில் சைவப் பயிர் செழித்திட உரமூட்டும் வகையில் தொண்டாற்றிவரும் முன்னாள் துணைவேந்தர் **டாக்டர். ஔவை நடராசன்** அவர்களது கருத்துக்கள் நெஞ்சகனக்கல்லும் நெகிழச் செய்கிறது. விஞ்ஞானம் பெருகிவரும் காலகட்டத்தில் மெய்ஞானத்தை உறுதியாக பற்றிக்கொண்டு **முனைவர் வி.சி. சசிவல்லி**, தமிழ்ப்பேராசிரியர், (ஓய்வு) உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-113, அம்மையாரின் கருத்துக்கள் யாவும் கடலைவிட ஆழமாக விளங்குகிறது. நண்பர், "திருமுறை மாமணி" "மதுரச் சொல்மணி" ஜெ. மகாதேவன், (தலைவர், சேக்கிழார் மன்றம்) இராயபுரம், சென்னை-13, அவர்களின் சொல்லோவியம் பேனாவின் துளி மையிலிருந்து பிறக்கும் அரிய கருத்துக்கள் வாசகர்களை சிந்திக்க வைக்கிறது.

கட்டுரைகள் யாவையும் பிழை திருத்தி தக்க முறையில் பொருத்தி தந்த **திரு. காவிரி நாடன்** தமிழாசிரியர், உயர்நிலை பள்ளி, புரசை அவர்களுக்கு என் நன்றி உரித்தாகுக. கட்டுரைகளை கணினி மூலம் ஊக்கத்துடன் பதிவு செய்து தந்த சாய் விஷ்ணு ஜெராக்ஸ் நிறுவனத்தாருக்கு என் இதயப் பூர்வமான அன்பு உரித்தாகுக. யாவராலும் படித்து பாராட்டும் விதத்தில் சிறப்பான முறையில் கட்டுரைகளை புத்தக வடிவில் குறித்த நேரத்தில் அச்சிட்டுத் தந்த **திரு. மூவேந்தர் முத்து** அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். அன்னாரது நிறுவனம் மென்மேலும் பயனுள்ள கருத்துக்களை புத்தக வாயிலாக வெளியிட இறைவனிடம் இறைஞ்சுகிறேன்.

ஆகஸ்டு 2007,
சென்னை-12.

**அ. தணிகைவேலன்**
(நூல் ஆசிரியர்)

# பொருளடக்கம்

# 1. வாக்கிற்கு அருணகிரி

ஒரு சமயம் எனது நெருங்கிய திருப்புகழ் அன்பர்கள், திருத்தணியில் நிகழவுள்ள "திருத்தணித் திருப்புகழ் திருவிழா"வில் கலந்து கொள்ள அழைத்தனர். ஆங்கில வருட டிசம்பர் 31-ம் தேதியன்று திருப்புகழ் பாடல்களை படிகள் தோறும் மெய் மறந்து பாடிக் கொண்டே கூட்டமாகச் செல்லும் அடியார்களின் ஆர்வமும், பக்தியும் அடியேனை மிகவும் ஈர்த்து விட்டதில் ஆச்சர்யமில்லை. மேலும் அருணகிரியாரது பாடல்களுக்கு இன்றளவும் உள்ள ஜீவனை உணர முடிந்தது.

திருப்புகழ்ச் சபையினரில் ஒருவர், திருத்தணிப் பாடலாகிய, "வினைக்கினமாகும்" எனும் பாடலின் கடைசி அடியான,

> *"திருப்புகழ் ஓதும் கருத்தினர் சேரும்*
> *திருத்தணி மேவும் - பெருமாளே"*

என்பதனை பின்னிப்பின்னி மடக்குப் போட்டு, கண்ணீர் மல்க பாடியதை, என்னுடன் வந்த நண்பர்கள் கவனித்தனர். அருணகிரியார் காலத்திலேயே, அன்னாரது பாடலைப் பாடிக் கொண்டு திருத்தணிக்குச் சென்றிருப்பதற்கு வாய்ப்பே இல்லை. மாறாக, திருப்புகழை வருங்காலத்தில் திருத்தணி சென்று பாடித் தொழ அருள்வாயே எனும் கருத்தில் பாடியிருப்பின், ஒருவேளை பொருந்தும் என தன் நண்பரிடம் வினவினார்.

அருணகிரியார் போன்ற தீர்க்கதரிசிகள் ஏதாவது உட்கருத்தோடு பாடி இருக்கலாம் என அன்னாரின் நண்பர் கூறினார். இருவருடைய கருத்தும் மனதுக்கு ஒத்துப் போகாததால், இவர்கள் என்னிடமே முறையிட்டனர். அருணகிரியாரோ, திருவருணையில் முருகப் பெருமானால் திருவடி தீட்சை பெற்று, அவனருளால் பாடல்கள்பாடினவர் ஆயிற்றே, அருணகிரியாரை உன் நிலைக்கு வைத்துப் பார்க்காதே.

மேலே கூறப்பட்டப் பாடலைப் பாடும்பொழுது, அவரது உள்ளம் வேறு நிலையில் இருந்திருக்க வேண்டும். அந்த நிலைக்கு உன்னை உயர்த்திக் கொள்ள வேண்டும். அப்போது தான், பாடலின் விளக்கத்தினை அறிய இயலும். அதனால் அன்னார் வாக்கிலிருந்து வரும் பாடல்களுக்கு காரணமின்றி பாடியிருக்க மாட்டார்.

*"அவசிய முன்வேண்டிப் - பலகாலும்*
*அறிவினுணர்ந்தாண்டுக் - கொருநாளில்*
*தவசெபமுந்துண்டிக் - கனிவாகிச்*
*சரணமதும்பூண்டற் - கருள்வாயே*
*சவதமொடுந்தாண்டித் - தகரூர்வாய்*
*சடுசமயங்காண்டற் - கரியானே*
*சிவகுமரன் பீண்டிற் - பெயரானே*
*திருமுருகன் பூண்டிப் - பெருமானே"*

இத்திருப்புகழ் பாடல், மேற்கூறிய பாடலுக்கு காப்புச் செய்யுளாக அமைந்துள்ளது. அடியேனுக்கு இவரது பாடல்களில் உறுதியான நம்பிக்கையுண்டு எனக் கூறினேன். சுமார் 500 ஆண்டுகளுக்கு முன்னரே தீர்க்கதரிசியான அருணகிரியாரது பாடலின் கருத்துப்

பொய்க்காதபடி, இன்றைய நாளிலும் (வருடக்கடைசி நாளான) அடியார் பெருமக்கள் திரளாகக் கூடி, திருத்தணிச் சென்று, திருப்புகழால் முருகனைப் புகழ்ந்து பாடி பணிகின்றதை உங்கள் கண்ணாலேயே காண முடிகிறதே.

ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் எனும் முதுமொழிக்கேற்ப, அன்னாரது பாடல்கள் அனைத்துக்கும் இப்பாடல் ஒன்றே அணி சேர்கிறதை காணமுடிகிறது.

ஆழ்வார்களும் இவருக்கு சோடை போகவில்லை. திவ்ய பிரபந்தத்தில், நம்மாழ்வார் கலியுகத்தில் பிறந்ததாக, அதிலுள்ள எம்பெருமானாரின் வாழ்த்துப்பா கூறுகிறதே. அதே நம்மாழ்வாரின் பாசுரம் 3130-ல் கலியுகம் நீங்கி கிருதயுகம் வந்துள்ளதே எனக் கூறுகிறது.

அவரை நாம் கி.பி. 9-ம் நூற்றாண்டில் தோன்றியவராக கருதும்போது, அந்த 9-ம் நூற்றாண்டில் கலியுகம் நீங்கி, கிருதயுகம் வந்ததர்க்கு ஆதாரம் ஏதேனும் இருப்பதாக தெரியவில்லை.

பொலிக, பொலிக, பொலிக என்றும், கண்டோம் கண்டோம், கண்டோம் என்றும் திரியும் கலியுகம் நீங்க என்பதாக நம்மாழ்வார் ஆனந்த பரவசத்தில் கூறுவதெல்லாம், அவரது உள்ளத்தில் பிறந்து, அவரால் அனுபவிக்கும் ஒரு அற்புதமான உணர்ச்சியை காண்பிக்கிறது என நண்பர்களுக்கு கூறினேன்.

தேவி உபாசகராகிய, அபிராம பட்டரும், தன்னையும் மறந்து தேவியை தியானித்திருந்த சமயம், அரசன், இவரைச் சோதிக்க எண்ணினான். இன்று என்ன திதி எனக் கேட்டார். சிறிதும் யோசியாது, இன்று பவுர்ணமி திதி எனப்

பிழையாகக் கூறினார். அன்னை அபிராமியோ, தம் பக்தனின் வாக்கினை பொய்க்காதிருக்க திருவுளம் கொண்டாள். அரசன் முன்னிலையில் அன்று முழுச் சந்திரனாக விளங்கச் செய்தது யாவரும் அறிந்ததொன்றே.

மேற்கூறிய வரலாறுகளை, இன்றைய நாளில் புராணக் கதை எனக் கூறுவாருமுளர். இதனை சரித்திர வாயிலாக நம்மோடு வாழ்ந்த பாரதியார் பாடிய பாடல் ஒன்று உறுதி செய்துள்ளதை பார்க்கலாம்.

*"ஆடுவோமே, பள்ளுப்பாடுவோமே*
*ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம்"*

என்று ஆடுவோம்! ஆடுவோம்! எனப்பாடியுள்ளதை யாவரும் அறிந்ததே. ஆனந்த சுதந்திரம் கிடைப்பதற்கு முன்னமேயே, அடைந்து விட்டோம் என இறந்த காலத்தில் பாடியுள்ளாரே. இதனை யாவரும் ஏற்றுக் கொள்ள வில்லையா, மறுப்பு தெரிவிக்காது, அருணகிரியார்

*"திருப்புகழோதும் கருத்தினர் சேரும்*
*திருத்தணி மேவும் - பெருமாளே"*

என்று பாடியது பாரதியார் பாடலுக்கு உரம் ஊட்டுவதாக திகழ்கிறது. இதுபோன்று, அருணகிரியார் வேறு எந்த தலப்பாடல்களிலோ, பொதுப்பாடல்களிலோ பாடியுள்ளதாக தெரியவில்லை. இதனால் இவரது வாக்கினை, "வாக்கிற்கு அருணகிரி" என ஆன்றோர்கள் பாராட்டியுள்ளதில் பிழையொன்றுமில்லை எனலாம்.

# 2. அருணகிரியாரும் அவர் பெற்ற உபதேசமும்

அருணகிரியாரது பாடல்களை ஆராய்ச்சி செய்ததில் யாவராலும் ஏற்கும் விதத்தில் அமைந்துள்ளதை காண முடிகிறது. அருளாளர்கள் இறைவனைக் குறித்து பாடியதோடு, தனக்கென சில வேண்டுதல்களையும் குறித்து பாடியுள்ளதை காணலாம். அருணகிரியாரும் இக்கருத்துக்கு மாறுபட்டவர் அல்ல. இவரது பாடல்களிலும் இது போன்று கருத்துக்கள் வந்துள்ளதை கவனிக் கலானேன்.

திருடனுக்கு புதையல் கிடைத்தாற் போல், அருணகிரியார் முருகனிடம் தனக்கு என்று விரும்பிக் கேட்டதாக இரு வேண்டுகோள்கள் அடங்கிய பாடல்களை அடியேனால் காண முடிந்தது.

பாற்கடல் முழுவதையும் நாய் நக்கிக் குடித்து விட முற்பட்டது போன்று, ஆசை வெட்கமறியாது எனும் முதுமொழிக்கேற்ப பாடல்களை ஆராய என் மனம் விழைந்தது. இவரது முதல் வேண்டுகோள் : சிவனுக்கு முருகன் உபதேசித்த ரகசியப் பொருளை அடியேனுக்கும் உபதேசித்தருள வேண்டும் எனும் பேராசை. இவ்வேண்டுகோளை முருகனிடம் இறைஞ்சிக் கேட்டுள்ளதை, இவரது பாடல்களில் மூலம் அறிய முடிகிறது. "வங்காரமார்பிலணி" எனத்துவங்கும் திருப்புகழில், 4-வது அடியில்,

*"சங்கோதை நாதமொடு கூடி வெகுமாயையிருள்*
*வெந்தோட மூல அழல் வீச உபதேசமது*
*கண்காகிலோகியிருபாகமலர் சேர-அருள்புரிவாயே"*

எனவும், 'கொண்டாடிக்" எனத்துவங்கும் திருப்புகழில் 4வது அடியில் -

*"உமை பங்காளர்க்கு அன்று பகர் பொருள்-அருள்வாயே"*

எனவும், மற்றோர் திருப்புகழ் - "அகரமுதலெனவுரை செய்" பாடலில்

*"திருபகுருபரகுமர என்றென்று பக்திகொடு*
*பரவ அருளிய மவுனமந்தரந்தனை பழைய*
*நினது வழியடிமையும் விளங்கும்படி உணர்த்தி -*
*அருள்வாயே"*

என்பன போன்றும்.

*"சத்யவாசகம் புற்புதபிராணனுக்கு - அருள்வாயே"*

போன்று பல பாடல்களில் இறைஞ்சி யுள்ளதை அறிய முடிகிறது. இத்தனைக்கும் முருகன் மவுனமாகவே இருந்தார். வேறு தந்திரங்களையும் கையாண்டு பார்த்தார் - பலிக்கவில்லை. முருகா, உன் தந்தைக்கு உபதேசித்த ரகசியப் பொருளை, அடியேனுக்கு உபதேசிக்க மனம் இல்லையேல் "வேண்டாமை" என்கின்ற ஒன்றை (நிராசையை) அடைந்து உள்ளம் ஒடுங்கும் அன்புப் பேற்றினையாவது தந்தருளுக என வேறு வரம் கேட்பது போன்று கருத்தமைய பாடிய பாடலைப் பார்ப்போம். "மாண்டார் எலும்பணி" எனும் திருப்புகழில்

*"சடையாண்டார் இறைஞ்ச மொழிந்ததை ..... யருளாயேல்*
*வேண்டாமை, ஒன்றை அடைந்துள*
*மீண்டாறி நின் சரணங்களில்*
*வீழ்ந்தாவல் கொண்டுருகன்பினை-யுடையேனாய்"*

இத்தந்திரத்துக்கும் முருகன் மனம் இரங்கவில்லை போலும் மனம் வெறுத்து, நீ கங்கை சூடிக்குச் செய்த உபதேசத்தை

எனக்கு உரை செய்தால், உன் குருத்துவம் சற்றேனும் குறையுமோ தான்,

> *"கங்கைவைத்தநம்பர் . . . . . . . பெறப்பகர்ந்த*
> *உபதேசம் சிறியேன் தனக்கும் உரைசெயிற் சற்றும்*
> *குருத்துவம் குறையுமோ தான்"*

என "சயிலாங்கனைக் குருகி" எனும் பாடலில் இரண்டாவது அடியில், தனது மனக்கிலேசத்தை வெளிப்படுத்தினார். கடைசியில், அருணகிரியாருக்கு முருகர் உபதேசித்ததை - "சூலுமெனவொடு" எனும் திருப்புகழில் 6வது அடியில்

> *"ஓது குறமான் வனத்தில் மேவியவள் கால்*
> *பிடித்துளோமெனும் உபதேச வித்தொ-டணை வோனே"*

**கருத்து** : வள்ளியின் (குறமான்) வனத்தில் திணைப்புனக் காட்டிற் சென்று அவளுடைய காலை வருடி (அன்பு காட்டி) அவளது உள்ளத்தே பதிய (ஓம்) எனும் பிரணவ உபதேசமாகிய (வித்தொடு) மூலப் பொருளோடு அவள் உள்ளத்தே பதிய ஓம் எனும் பிரணவ உபதேசம் செய்து அணைந்தவனே - என்பதாகும். இதைத்தான் முருகன் சிவபிரானுக்கு உபதேசித்தார். "மகரகேதனத்த" எனும் கடைசி அடியில்

> *"விரையஞானவித்தையருள் செய்தாதை கற்க*
> *வினவவோதுவித்த - பெருமாளே"*

**கருத்து** : விரைவில் ஞான மூலப் பொருளை (பிரணவப் பொருளை (அடியார்க்கு) அருள் செய்கின்ற பிதா (சிவபிரான்) அறிய - வேண்டிக் கேட்க அதை அவருக்கு உபதேசித்த சிவபிரான் ஒரு (க்ஷணநேரம்) தியானத்திருக்க, முருகன் அவருக்கு பிரணவப் பொருளை

திருத்தணிகையில் உபதேசித்தனர் என்றும், அதனால் தணிகைக்கு **க்ஷணிகாசலம்** எனப் பெயர் போந்ததென்றும் தணிகைப்புராணம் கூறுகிறது.

இங்கு தான் அருணகிரியாரும், முருகனிடம் கேட்ட வரத்தை பெற்றனர். இதனை அருணகிரியார் தாம் பாடிய பாடல் "கள்ளக்குவாற்பை" எனத்துவங்கும் திருப்புகழில், கடைசி அடியில் தெள்ளத் தெளிவாக பாடியுள்ளதிலிருந்து அறிய முடிகிறது.

*"வள்ளிச்சன்மார்க்கம் விள்ஐக்குநோக்க*
*வல்லைக்குளேற்றும் - இளையோனே"*

**கருத்து** : விள்ஐக்கு - ரகசிய உபதேசம் எதுவென வினவிய தந்தைக்கு, வள்ளிச்சன்மார்க்கம் - வள்ளி அநுட்டித்தநல் - வழியே தலைவனை (கடவுளை) வசப்படுத்தும் மார்க்கம் என்று, நோக்கவல்லைக்குள் - ஒரு நொடிப் பொழுதில் ஏற்றும் - அவர் செவியில் ஏற்றிய உபதேசத்தருளிய இளையோனே - குழந்தை குருநாதனே - என்பதாகும்.



# 3. அருணகிரியார் சுகச் (கிளிச்) சொரூபத்தை விரும்பியது

பொதுவாகவே, அருளாளர்கள் தாங்கள் இயற்றிய கவிகளுக்கு தாங்களே தலைப்பு கொடுப்பது உண்டு. அன்றி புலவர் பெருமக்களால், தலைப்பு வழங்காத கவிகளுக்கு தலைப்பு வழங்குவதுண்டு.

**உதா** :- ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் பாடிய பாடல்களுக்கு பொதுவாக தேவாரம் எனக் கூறியபோதிலும், சம்பந்தர் கவிகளுக்கு திருக்கடைக்காப்பு எனவும், நாவுக்கரசர் கவிகளுக்கு தேவாரம் எனவும், சுந்தரர் கவிகளுக்கு திருப்பாசுரம் எனவும் ஆன்றோர்களால் வழங்கப்பட்டது.

அருணகிரியார் பாடல்களுக்கு, வயலூர் பொய்யாப் பிள்ளையாரே தலைப்பு தந்தது அன்னாரது கவிகளுக்கு கிடைக்காத வரப்பிரசாதமாகும். அதனால் இவரது பாடல்களுக்கு ஏற்றமும் தோற்றமும் உண்டாயிற்று.

அருணகிரியார் வயலூர் சென்ற போது, அங்கு பொய்யாக்கணபதி, இவரை ஆட்கொண்டு "என் தம்பி முருகனையும், மயிலையும், கடப்ப மலர் மாலையையும், வடிவேலையும், குக்குடத்தையும், சிற்றடியையும், பன்னிருதோளையும், செய்ப்பதி (வயலூர்)யையும் உயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பு என அனுக்ரகம் செய்தார். இதனைக் குறித்து, அருணகிரியார்,

"......... *பக்ஷியெனு முக்ரதுர - கமுநீபப்*
*பக்குவமலர்த்தொடையும் அக்குவடுபட்டொழிய*
*பட்டுருவ விட்டருள்கை-வடிவேலும்*

*திக்கதுமதிக்கவருக்குடமும் ரக்ஷதரு*
*சிற்றடியுமுற்றியப-னிருதோளும்*
*செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு*
*செப்பெனஎனக்கருள்கை - மறவேனே"*

எனும் பாடலால் அறியப்படுகிறது. பிறகு சந்தப்பாக்கள் தடையின்றி வருவதைக் கண்டு ஆனந்தபரவசமுற்றார். இதனைக் குறித்து,

*"பச்சிமதட்சிண வுத்தரதிக்குள*
*பத்தர்கள் அற்புதமென வோதும்*
*சித்ரகவித்துவ சத்தமிகுத்ததி*
*ருப்புகழைச் சிறி-தடியேனுஞ்*
*செப்பென வைத்துலகிற் பரவுதெரி*
*சித்தவநுக்ரக - மறவேனே"*

என இவர் பாடிய பாடல் ஒன்றினால் அறியப்படுகிறது.

சந்தக்கவிபாடும் பாடல்கள வயலூரில் பாடப் பெற்றதால், பெரும்பாலும் அவரால் பாடிய பாடல்களில் வயலூரை மறவாது பாடியுள்ளது இவரது நன்றி மறவாமையை உணர்த்துகிறது. அருணகிரியார் வயலூரில் தங்கியிருந்த நாளில், அவ்வாலயத்தில் கூடுகட்டி வளரும் கிளிகள், ஐந்துகரபண்டிதன் தம்பி எனும் வயலூரா என கொஞ்சும் வகையில் உச்சரிப்பதைக் கேட்டு ஆச்சர்யமுற்று, கிளிகளின் மேல் ஆசையுண்டாயிற்று. இந்தக் கிளி சொரூபம் புண்ணிய சொரூபம் என மிகவும் மனம் விரும்பியது. இதனை வெளிப்படையாக திருப்பரங் குன்றம் சென்றபோது, பாடிய பாடலில்

*"பஞ்சரம் கொஞ்சுகிளி வந்து வந்து ஐந்துகர*
*பண்டிதன் தம்பியெனும் - வயலூரா"*

என கிளியின் நினைவு வரவே, பாடியுள்ளது கவனிக்கற்பாலது, தன்னை மறுபிறவி (மானிட)

தொடராது, சுகஜீவியாக வாழ எனக்கு வரமருள வேண்டும் என முருகனிடம் வேண்டினார். இதுதான் இவரது இரண்டாவது வேண்டுகோள் ஆகும். இவ்வேண்டு கோளை எங்கு சென்றாலும், கிளிகள் ஞாபகம் நினைவுக்கு வரும்போதெல்லாம், தமது பாடல்களில் குறிப்பிட் டுள்ளதைப் பார்க்கலாம்.



*"துகளில் சாயுச்சியக் கதியையீறற்றசொற்*
*சுகசொரூபத்தையுற்றடைவேனோ" என்றும்*

*"பரவ சந்த ணிந்து உனையுணர்ந்தொரு*
*மவுனபஞ்சரம் பயில்தருஞ்சுக*
*பதமடைந்திருந்து அருள் பொருந்தும - தொருநாளே"*

என்றும் பிரார்த்தித்து பாடியுள்ளார். "இறைவா எதுதா, அதுதா - இணைநாகையில் வாழ் - பெருமாளே" பாடி பலவாறாக விண்ணப்பித்துள்ளதை, இவரது பாடலில் காண முடிகிறது. முன்னர் வாதில் தோற்று நாணமுற்ற சம்பந்தாண்டான் சூழ்ச்சியால், பிரபுடதேவராஜனது வேண்டுகோளுக்கிணங்கி, பரகாய பிரவேசம் அறிந்திருந்த அருணகிரியார், தமது உடலை அருணை நகர்கோபுரத்தே சேமித்து விட்டு, அங்கு இறந்து கிடந்த ஒரு கிளியின் உடலில் பிரவேசித்து விண்ணுலகு சென்றார். இவரது உடலைக் கண்ட சம்பந்தாண்டான், அருணகிரியார் இறந்து விட்டார் எனக் கூறி, உடலை எரித்து விட அரசனிடம் கூறியதும் எரித்து விட உத்தரவிட்டார். பின்னர் அருணகிரியார் பாரிஜாத பூவுடன் திரும்பிவரக் கண்ட அரசன் மிகவும் வருந்தினான். தனது மானுட உடல் எரிபட்டு போனதை அறிந்த அருணகிரியார், எம் உடற்சிறையை இறைவன் அழிப்பித்தது நியாயமே என மகிழ்ந்து,

*"ஏழையின் இரட்டைவினையாய தொருடற்சிறை*
*யிராமல் விடுவித்தருள் - நியாயக்காரன்"*

என வேளைக்கார வகுப்பில் குறிப்பிட்டுள்ளதை பார்க்கலாம். வேண்டியபோதடியர் வேண்டிய போகமது, வேண்டவெறாதுதவும் பெருமான் அல்லவா.

அருணகிரியாரை நோக்கி, சுகம்பதம், சுகசொரூபம் தானே விரும்பினாய். சுகம் என்பதற்கு "கிளி" என்று ஒரு பொருள் உண்டு. அது கொண்டு பேரின்ப சுக நிலையை நீ கருதி கேட்டுள்ளதால், இரண்டு நிலைகளும் பொருந்த உமக்கு பேரின்பம் நிலைத்துள்ள கிளி வடிவத்தை தந்தோம்.

*"உனது சித்தம் களி கூறு தவக்கடல்*
*குளித்திங்குணக்க கடிமையுற்றுன் தலத்தில்*
*இருக்கும்படி பாராய் - திருத்தணி இருக்கும் பெருமானே"*

என வேண்டியதால், தணிகைக்கு வந்து, நின் பதயுகப் பிரசித்தி என்பன வகுத்துரைக்க நின் பணி தமிழ்த்ரயத்தை அருளும்படி - வேண்டி சீர்பாத வகுப்பு பாடி ஆனந்த நிலையில், எமது திருக்கரத்திலும், எமது தாயின் திருக்கரத்திலும் இருந்து பாடியும் பேரின்பத்தில் மூழ்கியிருக்க அருள்புரிந்தார்.



# 4. பட்டியாள்பவர் கொட்டியாடிய பேரூர்

ஒரு சமயம் எனது நெருங்கிய நண்பருடன் கோவை சென்றதும், அங்கிருந்து பேரூர் செல்ல முற்பட்டோம். இத்தலம் சமயக் குரவர்களால் பாடல் பெற்ற ஊர் அல்ல. இருப்பினும் சுந்தரர் வரலாறோடு தொடர்புடையது என்பது, அருணகிரியாரது பாடலின் வாயிலாக அறிந்துள்ளேன். ஊரைப் பார்த்தால் பேரூர் என்று சொல்வதற்கே லாயக்கற்றது. இருப்பினும் முத்திபேற்றை அளிக்க வல்ல இறைவன் பட்டீசர் பச்சை நாயகியுடன் கோயில் கொண்டிருக்கும் தலமாதலால் பேரூர் எனப் பெயர் பெற்றது பொருத்தமேயாகும். மேலைச் சிதம்பரம் என்னும் பேரூரில், சுந்தரருக்காக பட்டீசர் ஒரு திருவிளையாடலையே நிகழ்த்தியிருக்கிறார். ஆலயத்துள்ளே இறைவனைத் தரிசித்தோம். என்னையும் அறியாமல் அருணகிரியாரது பேரூர் பாடல் ஒன்றைப் பாடலானேன்.

"மைச்சரோருக" எனத்துவங்கும் பாடல். இதில் கடைசி அடியில்,

*"பட்டியாள்பவர் கொட்டியாடினர்*
*பாரூர் ஆசூழ் பேரூராள்பவர் - பெருமாளே"*

என பாடி முடித்ததும், எனது நண்பர் இதன் கருத்தை தெரிவிக்கும்படி கேட்டார்.

(பட்டியாள்பவர்) பிரம்மனாகிய பட்டி முனிக்கு அருள் செய்தவர். பாரூர் - பூமியில் ஊராகத் திகழும் (பேரூரை) ஆ - காமதேனு. சூழ் - வலம் செய்து பூஜித்த பேரூரை

ஆள்வார் - ஆண்டருள்பவராகிய சிவனுக்குப் பெருமாளே என்பதாகும் எனக் கூறினேன்.. இதற்கு ஆதாரம்,

*"திரிபுரம் எரியத் தேவர்வேண்ட, இமையவன்*
*ஆடிய கெடுகொட்டி ஆடல்"*

(சிலப்பதிகாரம் 6-40)

கூறுகிறதே என்றேன்.

*"படுமறைபல இயம்பப்பல்லுருவம் பெயர்த்து நீ*
*கொடுகொட்டியாடுங்கால்"*

(கலித்தொகை கடவுள் வாழ்த்து)

பாடல் உறுதி செய்துள்ளதை கூறினேன்.

பேரூரில் வீற்றிருக்கும் இறைவரோ, அடியார்களின் அன்பெனும் பிடியில் அகப்படுவன் ஆயிற்றே. பிறவாமை, இறவாமை இரண்டையும் அளிக்க தெரிந்து வைத்திருக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம் அல்லவா.

பிறவாமையை ஒரு புளியமரம் மூலமாகவும், இறவாமையை ஒரு பனை மரம் மூலமாகவும் நிரூபித்து காட்டும் அதிசயத்தைத் தெரிந்து கொள்ள பேரூர் எனும் ஊருக்கே புறப்படுவோம் வாருங்கள்.

பேரூர் பட்டீசர் கோயில் வாயிலிலேயே நல்ல மேடை கட்டி ஒரு புளியமரத்தைப் பாதுகாத்து வைத்திருப்பதைப் பார்க்கலாம். அதுதான் பிறவாப்புளி, அதாவது அம்மரத்தின் கொட்டைகளை முளைக்கப் போட்டால் முளைப் பதில்லையாம். அந்த புளியமரத்துக்கு இனி பிறவியே கிடையாது என்பது இறைவனது ஆக்ஞை போலும். கோயிலுக்கு வடக்கே ஆற்றங்கரையிலுள்ள வடகயிலாயம் எனும் சிற்றலாயத்துக்கு வந்தால், அங்கு வெளி முற்றத்தில்

ஒரு பனை மரம் நிற்கிறது. அதற்கு இறவாப்பனை மரம் என வழங்கப்படுகிறது. இந்த பனையின் பட்டையை இடித்துக் கஷாயம் போட்டுக் குடித்தால் தீராத வியாதியெல்லாம் தீருகிறது. இப்படி மக்களுக்கு வரும் நோயினின்றும் காப்பாற்றி இறவாது காக்கும் பெருமை உடையது. இந்த இறவாப்பனை, பிறவாப்புளி இருக்கும் கோயிலே பேரூர் பட்டீசர் கோயில்.

இந்த சுந்தரது வரலாற்றுச் செய்தி, பெரிய புராணத்தில் குறிப்பிட்டதாகத் தெரியவில்லை. தலபுராணம் தெரிவிக்கிறது. இத்தலம், கோவையிலிருந்து, 3 மைல் தொலைவில் உள்ளது. பேருந்து வசதிவுள்ளது. வசதியுள்ளவர்கள் காரில் சென்று வரலாம்.



# 5. மநுநெறி கண்ட சோணாடர்கோன் (திருப்புகழ்)

இறைவழிபாடு தமிழர்கள் உள்ளத்தில் தோன்றியது எப்படி? வளர்ச்சியடைந்தது எவ்விதம்? புரிந்து கொள்வது அவசியம். இறைவனது அருட்திறத்தை, தபோதனர்களின் அருட்கவிகளின் வாயிலாக உணர முடிகிறது. நீதிநெறியுடன் அரசர்கள் ஆட்சி செய்ததைக் குறித்து ஒரு சில வரலாறுகள் கூறுகிறது. மநுநீதிகண்ட சோழனது வரலாறு ஓர் எடுத்துக்காட்டு. ஏனைய அரசர்கள் எல்லாம், தருமம் போன வழியே சென்றார்கள். ஆனால் மனுவேந்தன் போன வழியில் தருமம் சென்றது. இதனையேதான் கம்பர், "விதிமுன் செல்ல தருமம் பினிறங்கியே" என பாடியுள்ளார்.

கிரேக்க இலக்கியத்தில் ஒரு செய்தியுண்டு. சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன்னர், ஆதென்ஸ் நகரத்தில் டயோஜினஸ்ரோ என்பவர், பட்டப்பகலில் ஒரு விளக்கை ஏற்றி வைத்துக் கொண்டு, வீதிகள் தோறும் எதையோ தேடிக் கொண்டிருந்தார். மக்கள் இவரை புத்திசுவாதீனம் இல்லாதவர் எனக் கருதலாயினர். அவர் தேட நினைத்ததோ, ஏதோ உருவினால் தான் மனிதனாக தோன்றினாலும், உள்ளத்தால் நீதிக்கு தலை வணங்கி வாழ்பவர்களாக தோன்றவில்லை என்பது தான். உண்மை தானே.

இவர்கள் கூறுவது போல், நீதிநெறிகளைப் பின்பற்றி வாழ்ந்தவர்களை காண்பது அரிதே. அறிய வேண்டுமானால் அவர்களை விரல் விட்டு எண்ணிடலாம் தானே!

நாட்டில் அத்தகையோர்களின் வரிசையில் முதலிடம் பெறுபவனே மநுநீதிச் சோழன் என்பான். இவனது வரலாறு சரித்திரத்தில் மட்டுமின்றி, திருத்தொண்டர் புராணத்திலேயும் இடம் பெற்று விடுகிறது.

இதனை உணர்த்தவே அருணகிரியாரும் தவறவில்லை. "அவகுணவிரகனை" எனத்துவங்கும் திருப்புகழில் 5-வவது அடியில்"

*"மவுலியில் அழகிய பாதாளலோகனும்*
*மரகத முழுகிய காகோதராஜனும்*
*மநுநெறியுடன வளர்சோணாடர்கோன்"*

எனப் பாடியதிலிருந்து, மநுநீதிச் சோழனது நீதியின் நேர்மையை அறியப்படுகிறது. பாடலில் கோடிட்டு காட்டிய பதத்துக்கு உள்ள வரலாற்று கருத்தைப் பார்ப்போம்.

தன்மகன் தேரை ஓட்டிச் செல்லும் சமயம், தேர்க் காலில் சிக்கி கன்று ஒன்று இறந்து போனது. அதற்கு பரிகாரமாக தன் மகன் என்றும் பாராது, நிலத்தில் மகனை கிடத்தி, தானே அவன் மீது தேரைச் செலுத்தி, நீதியை நிலை நாட்டிய பெருமை போற்றத்தக்கது.

விஞ்ஞானம் முன்னேறி வரும் இந்நாளில், இதுபோன்ற நீதிகளை ஏற்றுக் கொள்ள மக்கள் செவி சாய்ப்பார்களா என்பது கேள்விக்குறியே!

இன்றைய காலகட்டத்தில், கொலையோ, கொள்ளையோ, லஞ்சமோ, கற்பழிப்போ போன்ற குற்றங்கள் செய்பவர்களை, அதிகார பலத்தாலும், பணச் செல்வாக்காளும் திசை திருப்ப வாய்ப்புகள் நிறைந்த காலம் இது.

அன்றைய காலத்தில் பதவியிலிருக்கும் சான்றோர்கள், மக்களுக்கு நன்மை செய்வதிலேயே நாட்டம் கொண்டிருந்தனர். அதனால்தான் அந்நாட்களில் இது போன்ற குற்றங்கள் நேர வாய்ப்பு இராது போயிற்று.

இன்றைய நாளில் பெண்களுக்கு சம உரிமை வழங்க வேண்டும் என பேச்சோடு, உயர் பதவியில் இருப்பவர்கள் அறிவிப்பதோடு சரி, எவ்வித பயனும் ஏற்பட்டதாக தெரியவில்லை. இதற்கு முற்றுப்புள்ளி வைக்கவே, அந்நாளிலேயே, பெண்கள் ஆடவர்களுக்கு சளைத்தவர் கள் அல்ல என்னும் உண்மையை செயலில் செய்து காட்டியுள்ளனர் என்றதும், மூக்கின்மேல் விரலை வைத்து, கண்களை அகல விரித்து ஆச்சர்யப்படுபவர்களை, என்னால் காண முடிகிறது.

இதனை உறுதி செய்ய, புறப்படுவோம் தெள்ளாறு எனும் ஊருக்கே. இவ்வூர், திண்டிவனத்துக்கும் செஞ்சிக்கும் செல்லும் பாதையில் உள்ளது. பேரூந்து சாதனமும் உள்ளது.

பல்லவ மன்னர்கள் இலக்கிய பெருமை பெற்றவர்கள். இவ்வூர் நந்திவர்மனது ஆளுகைக்கு உட்பட்டது. நந்திவர்மன் தொண்டை மண்டலத்தை ஆண்டதினால் நந்தியம்பெருமான் தொண்டைமான் எனப் பெயரைப் பெறுகிறான். இவனது ஆட்சிட்குட்பட்ட தெள்ளாறு எனும் பகுதிக்கு, பெருங்கருணை நாச்சியார் எனும் அம்மையார் ஊராட்சி தலைவியாக பணியாற்றி வந்தார். இவரது கணவனோ சதா குடித்து விட்டு, ஊர் மக்களிடம் வம்பு இழைப்பதே தொழிலாக கொண்டிருந்தான்.

ஊர் மக்கள் இவனுக்கு பலமுறை புத்தி புகட்டியும் கண்டித்தும் வந்தனர். ஆனால் திருந்தினானில்லை.

இதனைக் குறித்து தலைவியிடம், அவளது கணவனைப் புற்றி புகார் செய்வது நாகரீகமாகாது என நினைக்கவே, மக்கள் ஒன்று சேர்ந்து, பொதுப்படையாக தொல்லை கொடுக்கும் குடிகாரர்களுக்கு என்ன தண்டனை விதிக்கலாம் எனக் கேட்டனர்.

இதற்கு பொறுப்பு தன் கணவன் என்பதை உணராத தலைவி, அத்தகையோனை, மூலட்டானீஸ்வரர் ஆலயத்தில் 48 நாட்கள் (ஒரு மண்டலம்) திருப்பணி செய்ய வேண்டும் என தீர்ப்பு வழங்கினார்.

பின்னர் மக்கள் கூறிய புகார் தன் கணவனைப் பற்றிய செய்தி என்பதனை அறிந்ததும், மறுநாள் முதற் கொண்டு தலைவியே ஆலயத்திற்கு சென்று பணி செய்யலானார்.

இதனைக் கண்ட ஊர் மக்கள் ஆச்சர்யத்துடன் அம்மையாரை நோக்கி, நீங்கள் ஏன் இப்பணியை செய்ய வேண்டும் என முறையிட்டனர். கணவனது தண்டனையை நிறைவேற்றுவது உத்தம மனைவியின் கடமையல்லவா? அதனால் நான் செய்து வருவதில் என்ன பிழை. ஊர் மக்கள் தலைவியின் நேர்மையை பாராட்டினார்கள். அன்று தொட்டு பெருங்கருணை நாச்சியாரை, "குடியைத் தடுத்த தெள்ளாறு நாச்சியார்" என அழைக்கலாயினர். இதனை உறுதிபடுத்த, தெள்ளாறு கல்வெட்டுகள் கூறுகின்றன். கணவனும் குடிக்கு மகனாக வாழாது, ஊர்க் குடிமகனாக வாழ்ந்து வரலானான்.



# 6. சிக்கெனப் பிடித்த திருப்பெருந்துறையான்

அடியேன், என் இரு முருக பக்தர்களோடு முருகன் சந்நிதானத்தில், கந்தரலங்காரப்பாடல் ஒன்றை உள்ளம் உருக பாடினேன். இப்பாடல் அருணகிரியாரால் பாடப் பெற்றது.

*"படிக்கும் திருப்புகழ் போற்றுவன், கூற்றுவன் பாசத்தினால்*
*பிடிக்கும் பொழுது வந்து அஞ்சல் என்பாய்*
*பெரும்பாம்பினின்று*
*நடிக்கும் பிரான் மருகா, கொடுஞ் சூரனடுங்க வெற்பை*
*இடிக்கும் கலாபத்தனி மயிலேறும் ராவுத்தனே"*

இப்பாடலைக் கேட்டதும் இருவருக்குமிடையே என்ன கருத்து தோன்றியதோ! ஏன் முருகனை ராவுத்தனே எனப்பாடியுள்ளார் என ஒருவர் கேட்டார். அப்படி அல்லாம் முருகனை முஸ்லீம் ஆக்கிடவில்லை அருணகிரியார். சர்வ சமய சமரஸ நோக்கிலே அருணகிரியார் தன் மனோபாவத்தை வெளியிட்டிருக்கிறார் அவ்வளவு தான் என மற்றொருவர் விளக்கமளித்தார்.

இருந்தும், இருவருக்குமே மனச்சங்கடம் இருந்தது. இருவருமே என்னிடம் வந்து இதற்கு விளக்கம் அளிக்க கோரினர். அவ்ர்களிடம் நான், ராவுத்தன் மகன் ராவுத்தன் என அழைக்காது எப்படி அழைப்பது என்றேன்.

இதனைக் கேட்ட இருவரும் அதிர்ந்து போனார்கள். என்ன இப்படி சொல்கிறீர்கள் என என்னிடமே வாதிட்டனர்.

உங்களுக்கு தெரியும், யானையை நடத்துபவன் மாவுத்தன் என்றும், அதே போன்று குதிரையை ஓட்டுபவனை ராவுத்தன் என அழைத்தனர்.

சிவன், அன்று திருப்பெருந்துறையில் இருந்து மணிவாசகர் பொருட்டு, குதிரைகளை, மதுரைக்கு ஓட்டி வந்தாரல்லவா. அதனால் சிவன் ராவுத்தன் தானே, ராவுத்தர் மகன் தானே முருகன். அதனால் முருகனை ராவுத்தன் எனக் கூறியதில் என்ன பிழை? இதனைக் கேட்டதும் இருவரும் அமைதியாயினர்.

இத்தகு புகழ்பெற்ற திருப்பெருந்துறைக்கே செல்வோம் வாரீர் என அழைத்தேன். இத்தலத்தை திருப்பெருந்துறை என்று கேட்டால் அங்குள்ளோருக்கு புரியாது. ஆவுடையார் கோயில் என்று தான் கேட்க வேண்டும். இத்தலத்துக்கு, திருவாரூர் - காரைக்குடி ரயில் பாதையில் வரும் அறந்தாங்கி எனும் ரயில் நிலையத்தில் இறங்கிட வேண்டும். அங்கிருந்து 9 மைல் பேரூந்தில் செல்ல வேண்டும்.

திருப்பெந்துறையில், மூலவருக்கு வெறும் அடிபீடமே இருக்கும். அடுத்து ஆலயத்தை வலம் வந்தால், சிவனே முனிவராகி, குருந்த மரத்தடியில் சனகாதி முனிவர்களுக்கு உபதேசிப்பது போன்று கற்சிலை வடிவில் இருப்பதைக் காணலாம்.

எதிரே, வாதவூரர் நின்ற கோலத்தில் வடித்திருக்கிறார்கள். அதுசமயம் வாதவூரர் பாடிய பாடல் ஒன்று நினைவுக்கு வரவே,

*"பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்*
*பரிந்து நீ பாவியேனுடைய*
*ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி*
*உலப்பிலா ஆனந்தமாய*
*தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த*
*செல்வமே, சிவபெருமானே*
*யான் உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்*
*எங்கு எழுந்து அருளுவது இனியே"*

என நெஞ்சக்கனகல்லும் நெகிழ்ந்து உருக என்னோடு வந்த இரு நண்பர்கள் பாடினர். இப்பாடலைப் பாடி முடித்ததும், எனக்கொரு சந்தேகம் தோன்றிற்று. மணிவாசகர், மன்னன் பொருட்டு குதிரை வாங்க போன இடத்தில். இவரை வந்து இறைவன் அல்லவா சிக்கெனப் பிடித்திருக்கிறான். வாதவூரர் போய் இறைவனைப் பிடித்ததாக இல்லையே என என் மனம் அசை போட்டது.

இறைவனுக்கும், அடியார்களுக்கும் உள்ள தொடர்புகளில் தான் எத்தனை எத்தனை வகைகள்.

இதில் குரங்குப் பிடியும், பூனைப் பிடியும் அல்லவா இருக்கின்றன. மேலே கூறிய பாடலில், குரங்கு தன் குட்டியைப் பற்றி ஒரு சிறிதும் கவலைப்படாது குட்டி தான் தாயை விடாப் பிடியாக கட்டிப் பிடித்துக் கொள்ளும். குரங்கு மரத்துக்கு மரம், குன்றுக்கு குன்று தாவும் இருந்தும், குட்டி தன் தாயை விடாது பிடித்துக் கொள்ளும்.

பூனை இருக்கிறதே, தன் குட்டிகளிடம் மிகவும் பாசமாயிருக்கும். எங்கு இடம் மாறினாலோ, சென்றாலோ, தன் குட்டியை தானே எடுத்துச் செல்லும். குட்டியின் முதுகில் வாயை வைத்து கொஞ்சமும் பற்கள் உறுத்தாமல் கடித்து எடுத்துச் செல்லும்.

இது போன்றே இறைவனும் அடியவர்களிடம் காட்டிக் கொள்கிறான். குரங்கு குட்டியைப் போல் நாம் அவனை விடாது பற்றிக் கொள்ள வேண்டும். அப்போது தான் அவனருள் கிட்டும்.

இன்னும் சிலருக்கோ, இறைவன் பூனையைப் போல் பரிவு காட்டி, வலிய வந்து அரவணைத்து எடுத்து தன்னோடு அரவணைத்து அருள் புரிவான்.

இந்த உறவு முறையையே "மர்க்கடநியாயம்", "மார்ஜால நியாயம்" எனக்கூறுவர் சமயவாதிகள். இரண்டு வகையிலும் பிடிப்பு என்பதுண்டு. ஒன்று, நாம் அவனைப் பிடித்துக்கொள்ள வேண்டும் அல்லது சிவன் நம்மை பிடித்துக் கொள்ள வேண்டும். மணிவாசகரை சிவன் சிக்கெனப் பிடித்ததோடு சரி. அந்தப் பிடியின் வலிமை உணர்ந்தே நானும் உன்னைத்தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்து அருளுவது இனியே என இறைவனிடமே முறையிடுகிறார். அவர் என்ன சொல்வார் நானும் உம் பொருட்டு பல சிக்கல்களில் மாட்டிக் கொண்டுள்ளேன். உனக்காக, நரிகளை பரியாக்க நேர்ந்தது மறுபடியும், பரிகளை நரியாக்கினேன். இன்னும் என்னென்ன செய்து, எவனிடமெல்லாம் பிரம்படி பட வேண்டியுள்ளதோ? யார் கண்டது என்று தானே மனம் வேதனைப்பட்டிருப்பார்.

அடியேனும், மேலும் ஆன்மீக தத்துவங்களை கூற முற்படும்போது, என்னுடன் வந்த இரு நண்பர்களும் என்னென்ன குதர்க்கவாதம் பேசி மனவேதனைக் குள்ளாக்கப் போகிறாரகளோ? யார் கண்டது! இவர்களது குறிக்கோள்.

# 7. பெரிய புராணத்தில் காணாத சம்பந்தரது செய்திகள்

பாண்டியனுக்கு முன்னும் பின்னும் கூன் இருந்ததை, சம்பந்தர் திருநீற்றால் திருத்தினார். இதனைக் குறித்து,

*"ஒரு கூன்மிசை வைத்தத்திருக்கைப்புறத்*
*தொரு கூன்மிசை வைத்தனர் - வைத்தலுமே*
*இருகூனும் நிமிர்ந்தன தென்னவர்கோன்*
*முதுகும்தடமார்புமிடம் பெறவே"*

பாடல் 216-ல் தக்கயாக பரணி - கோயிலைப் பாடியது தெரிவிக்கிறது. இதனையே சம்பந்தருக்கு பின்னால் வாழ்ந்த அருணகிரியாரும், தாம் பாடிய 'தென்னவ" எனும் கந்தரந்தாதியில் :

*"முன்பின் தென்னவன் அங்கம் நன்னீற்றால்*
*திருத்ததென்ன"*

என பாடியதிலிருந்து அறியலாம். முன்பின் தென்னவன் அங்கம் என்பதற்கு முன்னிடத்து மார்பிலும், பின் இடத்து முதுகிலும் கூன் உள்ளதாக கூறுகிறது.

சம்பந்தர் உமாதேவியிடம் பாலுண்டதுமல்லாமல் உபதேசமும் பெற்றார். இதனைக் குறித்து அருணகிரியார் பாடிய திருப்புகழில், 'பகர்தற்கரிதான' 5-வது அடியில்

*"நுகர்வித்தகமாகும் என்று உமை மொழியில்*
*பொழிபாலையுண்டிடு நுவல்மெய்புள-பாலன்"*

என ஞானசம்பந்தரைக் குறித்து பாடியுள்ளது நோக்கற் பாலது.

**பாடலின் கருத்து :** உண்ணுக, இது ஞானம் தரும் என்று உமையம்மை மொழிந்து (பொற் கிண்ணத்தில்) தந்த பாலை உண்டவனும், சொல்லப்படும் மெய்ப்பு (வாய்மை, புகழ்ச்சி) நிறைந்தவனுமான - குழந்தை என்பதாகும். ஞானப்பால் உண்டதன்றி, உபதேசமும் அன்னையிடம் பெற்றார். அதனாலே முருகன் தாயிடம் உபதேசம் பெற்று விட்டதால், தந்தையான சிவனுக்கு மட்டும் உபதேசித்தார். உமையவளுக்கும் உபதேசித்தார் என எங்கும் பாடல்கள் புனைந்ததாக தெரியவில்லை.



திருஞானசம்பந்தர்

# 8. "பழியஞ்சி" என்பதில் உள்அடங்கிய வரலாறு

அருணகிரியார், "திரைவஞ்ச இருவினைகள்" எனும் திருப்புகழில் 6-வது அடியில் "பழியஞ்சி" எனும் வார்த்தையிலேயே, திருவிளையாடல் புராணத்தில் வரும் பழியஞ்சிய படலத்தின் வரலாற்றினை புரிய வைத்ததில் இவரது கவித்திறனை எவ்வாறு போற்றுவது.

பழியஞ்சி : குலோத்துங்க பாண்டியன் மதுரையில் ஆட்சி செய்யும் நாளில் நிகழ்ந்த வரலாற்றைப் பார்ப்போம். ஒரு பிராமணனும், ஒரு வேடனும் அரசவைக்கு வந்தனர். மன்னனிடம் அரசே, நான் என் மனைவியை ஒரு ஆலமர நிழலில் இருத்தி விட்டு தண்ணீர் வரச் கொண்டு சென்றேன். திரும்பி வந்ததும், இவ்வேடன் அம்பெய்தி அவளைக் கொன்று விட்டு, அயலிலே நின்றான் என முறையிட்டான்.

வேடனோ, மன்னவா, நான் இவளைக் கொன்றவனல்லேன். அப்படியே அம்பெய்தி கொன்றிருந்தால் கணவன் எதிரில் நின்றிருப்பேனா இவர் மனைவியைக் கொல்வதில் எனக்கு யாதொரு பயனுமில்லை என்றான். இதற்கு தீர்ப்புக் கூற அமைச்சரையும் கலந்து யோசித்தான். இருவர் வாதமும் ஏற்றுக் கொள்ளும் விதத்தில் அமைந்துள்ளதால், அரசன், வேடனை சிறையிலிட்டு, திருக்கோயிலுக்குச் சென்று, இறைவா! இதென்ன சோதனை, இதற்கு தீர்ப்புக் கூற எனக்கு ஒரு வழியும் தோன்றவில்லை.

தாங்கள் தான் உண்மையை உணர்த்த வேண்டும் என மனம் உருக துதித்தனன்.

அப்பொழுது ஒரு அசரீரி வாக்கு, "செட்டித் தெருவில் இன்று ஒரு திருமணம் நிகழவுள்ளது அங்கே பிராமணனுடன் வா உண்மை தெரிவிப்போம்" என்றது.

இன்றைய காலகட்டத்தில், இது போன்று நிகழ்ந்து இருப்பினும், கணவன் சார்பில் வழக்கறிஞரும் வேடன் சார்பில் சில வழக்கறிஞர்களும் சேர்ந்து வழக்கை நீதிமன்றத்தில் வாதாடுவர். தீர்ப்பு ஒருவர் பக்கம் சாதகமாயிருந்தால், எதிரி வழக்கறிஞர், சுப்ரீம் கோர்ட்டுக்கு சென்று வழக்கு தொடருவார். தீர்ப்பு வருவதற்குள், வழக்கு சம்பந்தப் பட்டவர்கள் பொறுத்திருக்க நேரிடும்.

இப்பொழுது அரசன் மாறு வேடம் பூண்டு பிராமணனுடன் அந்த கல்யாண மண்டபத்திற்கு போய், ஒரு ஒதுக்குப்புறத்தில் இருந்தான்.

அது சமயம் மணமகனின் வாழ்நாள் முடிந்து விட்டதால் அவனது உயிரை பறிக்க எண்ணி யம தூதர்கள் வந்தனர். எப்படி காலம் கடத்தாது மணமகனின் உயிரை கொண்டு போக வேண்டும். மணமகன் ஆரோக்கியத்துடன் இருப்பதால் எப்படி இவன் உயிரை பறிப்பது என யோசிக்கலாயினர். ஒரு தூதன் அன்று ஆலமரத்தில் ஏறுண்டு கிடந்த அம்பு, காற்றினால் அசைய வைத்து, மரத்தடியில் இருந்த பார்பணி மீது விழும்படி செய்து அவளுடைய உயிரை கவர்ந்தோமே, அதே போன்று புறத்தே கட்டி வைத்துள்ள காளையை கட்டவிழ்த்து வெருட்டி, மணப்பந்தலில் புகுந்து மணமகனின் மார்பில் முட்டச் செய்து அவனது உயிரைக் கவர்வோம் என்றான்.

இதனைக் கேட்டுக் கொண்டிருந்த பிராமணன் "இந்த மணமகன் அப்படி இறந்தால் என் மனைவி இறந்ததும் அவ்விதமே" என தெளியலாம் என்றான். சற்று நேரத்துக்கெல்லாம் அவ்விதமே கொல்லைபுறத்து எருது வெருண்டு ஓடிவந்து மணமகனை முட்டி பிணமாக்கியது.

பிராமணனும் அரசனும், ஐயோ வேடன் கொன்றான் என அவனை துன்புறுத்தினோமே என வருந்தினர். பிறகு அரசன் வேடனை சிறையினின்று நீக்கி, என் பிழையைப் பொறுத்துக் கொள் எனக் கூறி, அவனுக்கு வேண்டுவன கொடுத்து அனுப்பினான்.

பின்னர் ஆலயத்துக்குச் சென்று, ஆதரம் பெறுக பாவியேன் பொருட்டு எம் அடிகள் நீர் அரும்பழியஞ்சி நாதராயிருந்தீர் என நெஞ்சக்கனகல்லும் நெகிழ்ந்து உருக துதித்தான்.

இத்தகு விரிவான வரலாற்றினை "பழியஞ்சி" எனும் வார்த்தையாலேயே குறித்துக் காட்டிய பெருமை அருணகிரியார் ஒருவருக்குத் தான் கை வந்தகலை. இதனைக் குறித்து,

*"அத்தன் அப்படுபழிக்கே அஞ்சிய கணத்துத் தோன்ற*
*உத்தமப்பத்தி மாறற்கு உணர்வுற உணர்தலாலே*
*பத்தர்கள் பத்தனுக்கு பழியஞ்சும் சொக்கன் என்றோர்*
*வித்தக பெரிய நாமம் விளங்கியது அவனிமீது"*

திருஆலவாயுடையார் திருவிளையாடல் பழியஞ்சி படலம் 29-ல் கூறப்பட்டுள்ளது.

# 9. கதிர்காமச் சிலவு (இலங்கை)

அருணகிரிநாதர், தாம் பாடிய 'அகரமுகமாகி' எனும் திருப்புகழில்,

*"வனமுறை வேடன் அருளிய பூசை*
*மகிழ் கதிர் காமம் - உடையோனே"*

என 6-வது அடியில் பாடியுள்ளது என் மனதை ஈர்த்ததினால், கதிர்காமத்தை பற்றி எழுத விழைந்தது.

வேடர் குலத்தைச் சார்ந்த ஒரு வேடனின் பக்தியை கண்டிருக்கிறது. இவ்வூரைச் சேர்ந்த வேடன் தினமும் தவறாது மாணிக்க கங்கையில் நீராடி, இறைவன் திருமஞ்சனத்துக்கு நீரை எடுத்துச் செல்வது வழக்கம். ஒரு சமயம் திருமஞ்சனத்துக்கு நீர் கொண்டு வரும்போது, சிங்கம் ஒன்று எதிர்த்து வருவதைக் கண்டு திடுக்கிட்டான். நிச்சயம் நம்மைச் கொல்லும் என நினைத்து கதிர்காம முருகனை தியானம் செய்து, சிங்கத்திடம், இது சமயம் விட்டுவிடு, பூஜைகளை முடித்துக் கொண்டு திரும்பு கையில் உன்னிடம் வலிய வந்ததும், உன் இஷ்டம் போல் என்னை கொன்று தின்றுவிடு என அன்புடன் கேட்டுக் கொண்டான். சிங்கமும் மண்டியிட்டு அவ்விடத்திலேயே இருந்தது. வேடன் பூஜைகளை நிறைவேற்றிவிட்டு, சிங்கத்திடம் வந்து, உன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள் எனக் கூறி தன் இரு கண்களையும் மூடிக் கொண்டு, முருகனையே துதி செய்து கொண்டிருந்தான். சிங்கமோ தன் பாதங்களால் வருடியதைக் கண் திறந்து பார்த்தான். சிங்க உருவில் வந்த கதிர்காம முருகனே அவனுடைய

பக்தியையும் நேர்மையையும் வியந்து கொல்லாது மறைந்து விட்டது. இவ்வரலாற்றினைக் குறித்து தான் அருணகிரி யார், மேலே கூறிய விதத்தில் பாடியருளியதை நினைக்கும் தோறும் மெயிர் சிலிர்க்கிறது.

கதிர்காமம் எனும் சொல் கதிராகாமா எனும் சிங்கள மொழியிலிருந்து மருவி வழங்கப்படுகிறது. கதிரா - கருவேல மரங்கள் காமா - கிராமம் எனும் பொருள்படும். ஆங்கிலத்தில் KATARAGAMA என வழங்கப்படுகிறது.

அயல்நாடான இலங்கையில் உள்ள கொழும்புவுக்கு விமானம் மூலம் செல்ல வேண்டும். அங்கிருந்து மாத்தறை வரை புகைவண்டி மூலம் செல்லலாம். அங்கிருந்து கதிர்காமத்துக்குப் பேருந்து மூலமாகவோ கார் மூலமாகவோ மாணிக்க கங்கை எனும் நதிவரையில் தான் செல்ல முடியும். அங்குள்ள பாலம் மிகவும் குறுகியதாய் இருந்ததால், அங்கிருந்து 4 பர்லாங் நடந்தே செல்ல வேண்டும்.

கூடக் கோபுரங்கள் அமைந்த பெரிய கட்டிட அமைப்பை உடைய கோயில் என நினைத்து சென்றால் ஒரே ஏமாற்றம். மிகவும் சாதாரண ஓட்டுக்கூரை அமைந்த கட்டிடத்தில் ஆலயத்தைக் கண்டதும் வியப்பாக தோன்றும்.

மூலத்தனத்தில் 7 திரைகள் தொங்கவிடப்படுள்ளன. திரைகளுக்கு அப்பால் எவரையும் செல்ல அனுமதிப்பதில்லை. பூசாரி மட்டும், பூஜை நேரத்தில் உள்ளே நுழைகிறார்கள் கண் எதிரில் காணப்படும் திரைச் சீலையில், வள்ளி, தேவசேனையுடன் கந்தக்கடவுள் மயில் மேல் அமர்ந்த கோலத்தில், வர்ணங்களால் ஓவியமாக வரையப்பட்டு காட்சியளிக்கிறது. திரைக்கு பின்னால் ஒரு பேழையில் கல்யாணகிரி எனும் முத்துலிங்க சுவாமிகள்

சமாதி அடைவதற்கு முன், தங்கத்தகட்டில் யந்திரத்தை ஸ்தாபித்து வைத்துள்ளார். இவரது சமாதியும் ஆலயத்துக்கு அருகிலேயே அமைத்துள்ளனர். இவரது காலம் 16-ம் நூற்றாண்டின் பிற்பகுதியும் 17-ம் நூற்றாண்டின் முற் பகுதியுமாகும்.

சூரனை முருகப் பெருமான் சம்ஹாரம் முடிந்தபின், கதிர்காமத்திலேயே தங்க விருப்பங் கொண்டு, விஸ்வகர்மாவைக் கொண்டு சிந்தாமணி எனும் ஹேம கூடத்தை நிர்மாணிக்கச் செய்தார். சூரனை வதைத்து முடிந்ததும், கோபமான சூரனை நிக்ரகம் செய்த சக்தியாகிய ஞானவேலை வேல மரங்கள் நிறைந்த காட்டின் நடுவே ஸ்தாபனம்செய்து விட்டு வந்தார்.

இதனால் சூரசம்ஹாரம் திருச்செந்தூரில் நிகழ்ந்ததாகக் கருதுவதற்கு, திருமுருகாற்றுப் படையிலோ, திருப்புகழிலோ எங்கும் குறிப்புகள் காணவில்லை.

கதிர்காமத்தில் ஆடி மாதத்தில் ஆடி வேல் உற்சவம் 15 நாட்கள் நிகழ்கிறது. வடஇலங்கை யாழ்ப்பாண பகுதியிலிருந்து, பக்தர்கள் உண்ணாவிரதம் பூண்டு காவடியுடன் கால்நடையாக பயணம் மேற் கொள்வர். நீண்ட தூரம் வரை காவடிகளைச் சுமந்து ஆடியும் பாடியும் வருவது மெய் சிலிர்க்க வைக்கும் காட்சிகளாகும். கடைசி நாள் தீமிதி விழாவும் நடக்கும். இதனை பூக்குழி என்பர். கோயிலிலிருந்து இயந்திரத்தை யானை மேல் எடுத்து வரப்பட்டு, பின்னர் திரைக்குப்பின் கொண்டு செல்லப் படுகிறது. இங்குள்ள மாணிக்க கங்கையில் நீராடினால் மனநோயை நீக்கி விடும் என்பது ஐதீகம்.

1933-ல் விஜயம் செய்த RICHARD SPITTIN எனும் ஆங்கிலேயர், இங்கு கூடும் பக்தர்களின் பரவசநிலையைக்

கண்டு, இவர்கள் ஜாதி மதம் வகுப்பு வேறுபாடு பார்க்காது "ஹர, ஹர தேவா" என மனமுறுகி கோஷமிடுவதைப் பார்க்கையில், என்னை புல்லரிக்கச் செய்தது என எழுதியுள்ளார்.

அருணகிரி தாம் பாடிய திருப்புகழில் கதிர்காமத்தைப் பற்றி 14 பாடல்கள் கிடைத்துள்ளன. இதுவன்றி காஞ்சி, பழநி, பழமுதிர்சோலை, சுவாமி மலை போன்ற தலப் பாடல்களிலும், பொதுப்பாடல்களிலும் அற்புதமாக வர்ணித்து பாடியுள்ளதில் இருந்து அருணகிரியார் முருகனின் அருளைப் பெற்றவராவார் என தெரிகிறது.

*"கதிர் காம மாநகர்க்குள் எதிரிலா வேல் தரித்த*
*கடவுளே கலாப சித்ர மயில் வீரா"*

எனவும், நின்றபத அடியார் காண வந்த - கதிர்காமா என்றும், கனகமாணிக்க வடிவனே, மிக்க கதிர்காமத்தில் - உறைவோனே எனவும், "சொந்தக் குறமகள் கணவா திறல்சேர்கதிர்காமா" எனவும் கதிர்விடுவேலைக் கதிரினில் மேவிக் கலைபலதேர் முத்தமிழ் நாடா" எனவும் பலவாறாக பாடியுள்ளதைக் காணமுடிகிறது.

அனுமார் தென் திசையில் சீதையைக் கண்டு கணையாழியைக் கொடுத்து விட்டு, இலங்கையை எரியூட்டி திரும்புகையில் தென்திசையிலுள்ள கதிர்காமம் சென்று, மாணிக்க கங்கையில் மூழ்கி, கதிர்காம வேலனை, வழிபட்டுள்ளதைக் குறித்து அருணகிரியார்,

*"அருட்பொற்றிருவாழிமோதிரம்*
*அளித்துள்ளவர் மேல் மனோகரம்*
*அளித்து, கதிர்காம மேவிய - பெருமாளே"*

என திருப்புகழில் பாடியுள்ளதிலிருந்து அறிய முடிகிறது.

அடியேன் பல வருடங்களுக்கு முன் ஹாங்காங் சென்றிருந்த சமயம், அங்கு சூரியனாரின் ஆலயத்தை புணருத்தாரணம் செய்ய முற்படுகையில், சுவர்களை சுரண்டும் பொழுது சுவரில் வடித்த அறுமுகப் பெருமானின் வடிவம் புலப்பட்டதாகக் கேள்விப்பட்டேன். கடல் கடந்த அக்கரைச் சீமையிலும், இந்துமத ஆன்மிகம் பரவி இருந்ததற்கு இதைவிட வேறுசான்று தேவையா!

கனடா நாட்டில் இலங்கைத் தமிழர்கள் ஒன்று சேர்ந்து, கதிர்காம முருகனுக்கு “மொன்றியன்” எனும் ஊரில் ஆலயம் அமைத்து, அதற்கு மேலைக் கதிர்காமம் எனப்பெயரிட்டு வணங்கி வருகின்றனர்.



திரைச் சீலையில், வள்ளி, தேவசேனையுடன் கந்தக்கடவுள் மயில் மேல் அமர்ந்த கோலத்தில், வர்ணங்களால் ஓவியமாக வரையப்பட்டு காட்சியளிக்கிறது.

# 10. மதுரை மாநகரம்

சென்னை அரசாங்கத்தின் சார்பில், அமெரிக்காவிற்கு 6 நிபுணர்களை இந்தியாவிலிருநது அனுப்பி, அந்நாட்டின் அமைப்பைப் பற்றி தெரிந்து வர தீர்மானம் கொண்டு வரப்பட்டது. எதற்குத் தெரியுமா? இப்போது எதற் கெடுத்தாலும் வெளிநாடுகளுக்கு நிபுணர்களை அனுப்பி, அந்நாட்டின் புணரமைப்பைப் பற்றி அறிந்து வரவே, அப்படி அவர்கள் அங்கு கற்றுணர்ந்ததைக் கொண்டு நம் நாட்டில் நகரங்களை அழகுபடுத்த அவர்களது திறமை உதவும் என நினைத்தனர்.

இதற்காக, 6 நிபுணர்களை தேர்ந்தெடுக்க 6 வருடங்கள் ஆயின எவ்வளவோ போட்டி, யார் யாரெல்லாமோ சிபாரிசு. இவ்வளவும் நடந்த 6 பேரை தேர்ந்து எடுத்தாயிற்று. இதுபற்றிய கோப்புகளை ஆராய்ந்து உத்தரவு போட வேண்டியவர் முதல் மந்திரியாவார். கடைசியில், சம்பந்தப்பட்ட கோப்புகளை, முதல்வரது கவனத்திற்கு வைக்கப்பட்டது.

அனுப்பப்பட்ட எல்லா கடிதங்களையும் பார்த்தார். நடந்திருக்கும் விஷயங்களையும் கவனித்தார் முதல்வர். கடைசியில் குறிப்பு எழுதினார். அதன் விவரம்.

"தமிழ்நாட்டில் நகர நிர்மாணம் எப்படி இருக்க வேணும் என்று தெரிந்து கொள்ள, அமெரிக்கா போய் தெரிய வேணுமா? இந்த 6 நிபுணர்களும் மதுரைக்கு செல்லட்டும். அங்கு நகரம் அமைந்திருக்கும் முறையை காணட்டும். நகர நிர்மாணம் எவ்விதம் இருக்க வேண்டும் எனபதை தெரிந்து கொள்ளட்டும்"

இதனால் 6 நபர்களும் ஏமாற்றமடைந்தார்கள். அவர்களை அனுப்ப கங்கணம் கட்டிக் கொண்டு நின்றவர்களும் ஏமாற்றமடைந்தனர். உண்மை தானே.

நகர நிர்மாணம், அதிலும் தமிழ்நாட்டின் நகர நிர்மாணம் எவ்விதம் அமைய வேண்டும் என்பதை அமெரிக்கா சென்று தானா தெரிந்து கொள்ள வேண்டுமா? மதுரைக்குச் சென்றால் தெரிந்து கொள்ள முடியாதா? நல்ல நகர நிர்மாணத்துக்கு எடுத்துக்காட்டாக அல்லவா மதுரை நகரம் பண்டைய நாளிலேயே மூவேந்தர்களில் ஒருவரான பாண்டிய மன்னரால் அமைக்கப்பட்டுள்ளதே. இத்தகைய சிறப்பு வாய்ந்த பழம் பெருமையை நிலை நாட்டவே, மதுரை தமிழகத்தின் ராஜதானி எனப் போற்றப்பட்டுள்ளதே. மேலும் இறைவனே 64 திருவிளை யாடல்களையும் இங்கு தானே நிகழ்த்தியிருக்கிறான்.

சிவபெருமான் தன் சடையில் பிறையில் உள்ள அமுதத்தைத் தெளித்து, இந்நகரை நிர்மாணித்ததால் இந்நகரம் மதுரமாக இருந்திருக்கிறது. அதனாலே இந்நகரை மதுரை மாநகரம் என அழைக்கலாயிற்று. மேலும் மதுரையில் மாதந்தோறும் விழாக்கள் கொண்டாடினர். அதனால் “விழா அறாமூதூர்” என சிறப்பித்துச் சொல்வர். நகரத்தின் நடுவே மீனாட்சியம்மன் கோயிலை நிறுவியதோடு, கோயிலை சுற்றியுள்ள வீதிகளை விழாக்களின் பெயராலேயே அமைத்துள்ளது வேறு எந்த நகரத்துக்கும் இல்லா சிறப்பு.

சித்திரைத் திருவிழா கொண்டாடுவதால், சித்திரை வீதி எனவும், ஆடியில் விழா கொண்டாடுவதால் ஆடி வீதி எனவும், ஆவணி மூலத்தில் விழா கொண்டாடுவதால், ஆவணி மூல வீதி எனவும், மாசி மாதத்தில் திருவிழா கொண்டாடுவதால் மாசி வீதி எனவும் வழங்கப்படுவதைப் பார்க்கலாம்.

# 11. சிவகாசியா? வடகாசியா?

அடியேன், சுமார் 10 ஆண்டுகளுக்கு முன்னர் தமிழ்நாடு ஓதுவார் சங்கத்தினர் மூலம் தேவாரம் பாடல் பெற்ற தலங்களுக்குச் செல்ல நேர்ந்தது.

பல அற்புத தலங்களையும் தரிசித்து விட்டு, சிவகாசி எனும் ஊருக்கு திரும்புகையில் இருட்டி விட்டது. அன்றிரவு அங்கு தங்கினோம். அங்குள்ள சிவனடியார்கள் எங்களை அன்புடன் வரவேற்று உபசரித்தனர். அன்றிரவு அங்குள்ள தேவார சபையில் பாடல்களைப் பாடினோம். நண்பர் ஒருவர், எங்களது ஊரைப் பற்றி தேவாரப் பாடல்கள் உள்ளதா எனக் கேட்டார், இல்லை என்றோம். அதே நண்பர், எங்களது ஊரைப் பற்றி அருணகிரியார் பாடியுள்ளாரே எனக் கூறக் கேட்டதும், அடியேனுக்கு நாடி நரம்பெல்லாம் ஸ்தம்பித்து விட்டது போன்ற உணர்வு ஏற்பட்டது. பாடல் எதுவென்று வினவினேன். அதோடு பாடலை முழுதும் பாடிக் காட்டும் படியும் கேட்டுக் கொண்டேன். பாடியும் காட்டினார் அந்த நண்பர். பாடலின் முதலடி இதுதான்,

> *"கும்பகோணமோடாரூர்சிதம்பர*
> *உம்பர்வாழ்வுறு சீகாழிநின்றிடு*
> *கொன்றைவேணியர் மாயூரமம்பெறு-சிவகாசி"*

இதில் சிவகாசி என வந்துள்ளதை சுட்டிக் காட்டினர். இவ்வூர் அருணகிரியாருக்கு முந்தியுள்ளதாக இருந்திருக்க வேண்டும் என நண்பர் கருதியதில் பிழையொன்றுமில்லை. Encyclopedia எனும் புத்தகத்தில் இவ்வூர் அண்மையில்

தோன்றியதாகவே கூறப்பட்டுள்ளது என நண்பரிடம் கூறினேன்.

அரிகேசு பராக்ரம பாண்டியன், தென்காசியில் சிவாலயம் ஒன்றை நிறுவினான். கர்ப்பக்கிரகத்தில் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்ய எண்ணினான். காசிக்கு சென்று சிவலிங்கம் ஒன்று கொண்டு வரும் சமயம் இருட்டி விட்டதால், இன்றுள்ள சிவகாசி வெறும் காடாக இருந்ததால், அன்றிரவு தங்கியிருந்தான்.

இறைவன் திருவருள் கூட்ட, கொண்டு வந்த சிவலிங்கத்தை இவ்விடத்திலேயே பிரதிஷ்டை செய்து ஆலயமும் கட்டுவித்தான். இதனைக் குறித்து தென் காசியில் சிவாலயத்திலுள்ள கல்வெட்டு தெரிவிக்கின்றது. இதனால் இவ்வூருக்கு சிவகாசி என பெயர் வழங்கலாயிற்று.

அருணகிரியார் காலத்தில் இவ்வூர் சிவகாசி என வழங்கியதற்கு எங்கும் அன்னாரது பாடல்களில் குறிப்புகள் காணவில்லை. அருணகிரியாரது காலமே ஏறத்தாழ 500 ஆண்டுகளுக்கு முன்னர் இருக்கலாமென ஆய்வாளர்கள் கூறுகின்றனர். அன்னாருக்கு பிறகே இவ்வூர் உண்டானதால், நண்பர் கூறியது போன்று அருணகிரியார் பாடி உள்ளதாக கருத வாய்ப்பேயில்லை.

அருணகிரியார் க்ஷேத்திரக் கோவைக்கு நிகராக அனைத்து தலங்களையும் ஒரு சேர நினைத்து பாடியதாகவே கருத வேண்டும். நண்பர் கோடிட்டு காட்டிய சிவகாசி எனும் பதத்தை கூர்ந்து, பொருள் கொளல் வேண்டும்.

*"கும்பகோணமோடாரூர்சிதம்பரம்*
*உம்பர்வாழ்வுறு சீகாழிநின்றிடு*
*கொன்றைவேணியர் மாயூர*<u>*மம்பெறு சிவகாசி*</u>*"*

அம்பெறு சிவகாசி எனும் பதத்துக்கு,

அம்பெறு - அழகோடு பொருந்தி, சிவம் - மங்களகரமான, காசி - காசி தலத்தைக் குறித்து தான் பாடியிருத்தல் வேண்டும்.

திருப்புகழ் பாடல்களுக்கு உரை கண்ட, தணிகை மணி வ.சு. செங்கல்வராய பிள்ளையும், மேலே கூறப்பட்ட கருத்தையே தான் கூறியிருக்கிறார்.

சிவகாசி மழையேயில்லாத வறட்சி நிலப் பகுதியாகவே இருந்துள்ளது விவசாயம் செய்யவும் முடியாத பகுதியாகவும் இருந்தது.

மழை நீரையோ ஆற்றுப் பாய்ச்சலோ எதிர்பாராது மக்கள் வளமோடு வாழ, திரு. ஷண்முக நாடாரும், திரு. அய்யா நாடாரும், கலந்தாலோசித்து, மழையே எதிர்பாராத வறண்ட இவ்வூருக்கு, தீப்பெட்டிகள் செய்யும் தொழிலை ஆரம்பித்தனர். இத்தொழில் சூடுபிடிக்கவே, போட்டிகள் தோன்றலாயின. அதனால் தீக்குச்சிகள் செய்ய பயன்படுத்தும் ரசாயன பொருள்களைக் கொண்டே, பலவிதமான வெடிப் பொருள்களாகிய பட்டாசு போன்றவைகளை தயாரிப்பதில் ஈடுபட்டனர். அதே சமயம் ஜனத்தொகையும் கூடிற்று.

இதனைக் கருத்தில் கொண்ட, திரு. ஞானகிரிநாடார் மழையின்றி வருடம் பூராவும் மாற்றுத் தொழிலாகிய அச்சுத் தொழிலை தேர்ந்தெடுத்து முதன் முதலாக தொடங்கி வைத்தவராவார்.

இதனால் சிவகாசி மேலும் பிரபலமடைந்தது. அண்டை நாடுகள் எல்லாம் இவ்வூரின் முன்னேற்றத்தை பிரமிக்கலாயினர்.

இவ்வூர் செழிப்புடன் வாழ்வதற்கு, அன்றை நாளில் காசி விஸ்வனாதரே, நிலைத்து நின்று கருணை புரியவே

திருவுள்ளம் கொண்டான் போலும் என நினைக்கத் தோன்றுகிறது.

அருளமிகு சிவகாசி விஸ்வநாதருக்கு தேனும், பாலும், பஞ்சாமிர்தமும் சேர்த்து திருமஞ்சனம் செய்து, பூமாலையோடு பாமாலையாகிய தேவாரம் திருப்புகழ், போன்ற அருட்பாடல்களைப் பாடி கண் மலராலும், மனமலராலும், கைம்மலராலும் போற்றி செய்து வருவோமாக.



விஸ்வநாதர்

# 12. பெண்மைக்குப் பெருமை சேர்த்த தெய்வச் சேக்கிழார்

சைவ சமயம் சிவனையே முழுமுதற் கடவுளாகப் பாவித்து வந்தது. அதனடிப்படையில் தான் நாயன்மார்கள் அருட்கவிகளை இயற்றியுள்ளனர். அன்னை சிவகாமியைக் குறித்து பாடல்கள் புனைந்ததாக தெரியவில்லை.

பெரிய புராணம் இயற்றிய சேக்கிழாரோ, காஞ்சியில் வீற்றிருக்கும் காமாட்சி அன்னையையே சதாகாலமும் போற்றி வந்தவராவார். தாம் இயற்றிய பெரியபுராணத்தில் பெண்மைக்கு, பெருமை சேர்த்த வரலாற்றினை அங்கங்கே கோடிட்டு காட்டியுள்ளது பாராட்டத்தக்கது.

சோழ நாட்டு அரசனுக்கு திருமகளாகப் பிறந்த இவரது இயற்பெயர் மானி என்பதாகும். இளமையில் இருந்தே சிவனடியை சிந்திந்து போற்றியவராவார். கூன் பாண்டியனுக்கு வாழ்க்கைப் பட்டவராவார். பாண்டியனும், பாண்டிய நாடும் சமண இருளில் மூழ்கிய சமயத்தில், ஞானசம்பந்தரை வரவழைத்து சைவத்திற்கு இவ் வம்மையாரே உரமூட்டியவராவார்.

ஞானசம்பந்தரால் மங்கையர்க்கரசி எனச் சிறப்பிக்கப் பட்டவர். மங்கையர்க்குத் தனியரசி எனச் சேக்கிழாரால் மேலும் பாராட்டப்பட்டவர்.

மங்கையர்க்கரசியாரைக் குறித்து பாட வந்த ஞான சம்பந்தர், முதற்பாட்டிலேயே,

*"மங்கையர்க்கரசி வளவர் கோன்பாவை*
*வரிவளைக்கைம்மடமானி"*

எனப் பாடியதிலிருந்தே அரசியாரின் இயற்பெயர் மானி என்பதை சம்பந்தருக்கு மதுரைக்கு வரும் முன்னமேயே அறிந்திருக்க கூடுமென நினைக்கத் தோன்றுகிறது.

மானி எனும் இலக்கியச் சொல் ஆண்களில் சிறந்தவர் களையே குறிக்கப்படுவது வழக்கம். அது போன்றே பெண்பால் இனத்தைச் சேர்ந்தவர்களில் சிறந்தவர்கள் மானினி எனும் இலக்கியச் சொல் வழங்கப்பட்டுள்ளது.

ஒரு சிலர், ஞானசம்பந்தர் தமது பாடலில்,

வரிவளைக்கைம்மட மானி எனப் பாடியுள்ளதிலிருந்து ஆண்பாலுக்கு உரிய சொல்லை பெண் பாலுக்கும் பொருத்தி பாடியுள்ளதை ஒரு புரட்சியாக கருதுவாருமுளர். சேக்கிழாரும் பெண்பாலுக்கு பெருமை சேர்க்கக் கருதி ஒரு புரட்சி செய்துள்ளதை, அன்னாரது பாடலிலிருந்தே அறிய முடிகிறது.

தபோதனர் எனும் சொல் தவச்சீலர்களைக் குறிப்ப தாகவே கருதிய போதிலும் பெண்களுக்கு பெருமை சேர்க்கக் கருதி, தபோதினி இச்சொல் பிரயோகம் சேக்கிழாருக்கு முன்பு இலக்கியத்தில் வந்துள்ளதாக எங்கும் குறிப்புகள் காணவில்லை.

சேக்கிழார், பெண்மைக்கு பெருமை சேர்க்கக் கருதியே, ஆடவர்களைப் போல் தவத்தில் சிறந்து விளங்க முடியும் என்பதை எடுத்துக்காட்டவே,

"நின்ற தபோதினியாரும் நின்மலன் பேரருள் நினைத்து"

என திலகவதியாரை தபோதினி எனும் சொல்லாட்சியை உருவாக்குகிறார்.

சேக்கிழாருக்கு முன்னம் ஒருவருக்கு சிவதீட்சை செய்யும் உரிமை ஆண்களுக்கு மட்டுமே உரியதாக இருந்தது.

சைவ சமயத்தை விட்டு சமண மதத்தைத் தழுவிய நாவுக்கரசருக்கு அவரது தமக்கையான திலகவதியாரே அஞ்செழுத்தோதி, (பஞ்சாட்சரம்) திருநீற்றைக் கொடுத்து சிவதீட்சைச் செய்தது யாவரும் மறுக்க இயலாது. உயரிய நோக்கமாகவே கருத வேண்டும், பெண்களும் சிவதீட்சை செய்யும் உரிமை பெற்றவர்கள் என்பதை உணர முடிகிறது.

பெண்களும் ஆண்களுக்கு நிகராக, உள்ளத்தாலும், உடலாலும்நிகரானவர்கள் என்பதை உணர்த்தும் வகையில் சேக்கிழார், திருவாரூரில் நாற்று நடுகிற பெண்களுக்கும் மாட்சியுண்டு என்கிறார். "மாதர் நாற்று பறிப்பவர் மாட்சியும்" என்பது பெரியபுராணம் தரும் விளக்கமாகும்.

அண்மைக் காலத்தில் "கைவருத்திக் உழைப்பவர் தெய்வம்" என பாரதியாரும், "நாடிப் புலன்கள் உழுவார்கரமும்" என தேசிக விநாயகம் பிள்ளையும், "உழைக்கும் வர்க்கம் பெருந்தன்மையான வர்க்கம்" என கார்ல்மார்க்ஸ் என்பாரும் பெண்களின் பெருமையை புகழ்வதற்கு முன்பே, சேக்கிழார் பாராட்டியுள்ளது கவனிக்கற்பாலது. இதனால் பெண்மைக்குப் பெருமை சேர்த்த மூலபுருடர் சேக்கிழார் எனக்கருதுவதில் பிழையொன்றுமில்லை.

மேலும், பெண்மையின் பெருமை உறுதிப்படுத்த தெய்வத்தையே காட்சியாக அழைக்கிறது பெரிய புராணம்.

நீலநக்கநாயனாரின் மனைவி, திருவயந்திபுரத்தில் வீற்றிருக்கும் இறைவனை வழிபட்ட சமயம் மூலவர் மேல் ஒரு சிலந்தி விழுவதைக்கண்டாள். உடனே இவ்வம்மையார் மூலவரின் மேல் வாயினால் ஊதினார். இதைக்கண்ட நீலநக்கர், மனைவியிடம் ஒன்றும் கூறாது கோபத்துடன் வீட்டுக்குச் சென்று படுத்துறங்கிவிட்டார். கனவில் இறைவன் தோன்றி தன் திருமேனியில் ஓர் இடம் தவிர மற்ற பாகங்களில் கொப்பளங்கள் தோன்றியுள்ளதை நீலநக்கருக்கு காண்பித்து அந்த ஒரு இடம் மட்டும் உன் மனைவியால் என் மேல் ஊதித்துமிழ்ந்த இடமாகும் என்றார் பெண்ணின் பெருமையைப் பறை சாற்ற மூலப் பொருளே வந்து உணர்த்தியுள்ளதைப் பெரியபுராணம் பகர்கிறது.

காரைக்காலம்மையார் பேயுருவம் கொண்டு கையிலைக்குச் சென்றதும், "வரும் இவள் எம்மை பேணும் அம்மை காண்" என உமாதேவியாருக்குக் கூறியது, ஒரு பெண்ணின் பெருமையை இன்னொரு பெண்ணுக்கு எடுத்துச் சொல்கின்ற உத்தியை சேக்கிழார் கையாள்கிறார் உமையவளுக்குக் காரைக்காலம்மையார் என்பது பொருளுள்ளது. ஒரு பெண்ணின் ஆற்றல் இன்னொரு பெண்ணுக்குத் தெரியவில்லை என்பதே உள் கருத்தாகும்.

அடுத்து, பூம்பாவை உயிர் பெற்று எழுந்ததும் சம்பந்தர் அப்பெண்ணை மணம் செய்து கொள்ளாது தம் மகளாக பாவித்து மணம் செய்ய ஏற்கவில்லை. இதற்கு மாறாக பிரம்மா தாம் படைத்த பெண் திலோத்தமையின் அழகில் மயங்கி வயதையும் கருதாது மணந்து கொண்ட அப கீர்த்தி நாடு அறிந்தது.

ஆண்களுக்குப் பெண்கள் சளைத்தவர்கள் அல்ல என்பது சேக்கிழார் கூறும் விளக்கத்தைப் பார்ப்போம்.

சோழநாட்டில் சுபதேவர் எனும் மன்னருக்கு கமலவதி எனும் மனைவி இருந்தாள். கருவுற்று பிரசவ நேரம் வந்தது. ஒரு நிமித்தகர் இன்னும் ஒரு நாழிகை கழித்து குழந்தைப் பிறந்தால் அக்குழந்தை குவலயத்தையே ஆளும் என்று சொன்னதைக் கேட்ட கமலவதி, தமது கால்களைக் கட்டி தலைகீழாக மேலே தூக்கி கட்டச் சொல்லி ஒரு நாழிகை, கழித்து, குழந்தையை ஈன்றெடுத்தாள். எதிர்காலத்தில் அப்பிள்ளையே பல ஆலயங்களை நிறுவிய கோச் செங்கட்சோழன் எனும் நாமத்தோடு விளங்கினராவார். இதனால் பொது நலம் கருதி, ஒரு தாயின் மனவலிமை எத்தன்மையது எனத் தெரிகின்றது.

அது மட்டுமின்றி, பெண்மைக்குக் குந்தகம் விளையும் போது அதை பிறருக்குத் தெரியாமலும் புலனாகாமலும் மறைக்கச் செய்த வரலாறுண்டு. "அற்றம் மறைக்கும் பெருமை" எனக் குறள் கூறுகிறது. சுந்தரருக்கு, புத்தூரில் வாழ்ந்த சடங்கவி சிவாச்சாரியாரின் மகளை மணம் செய்யப்பட்டபோது சுந்தரரை இறைவன் தடுத்தாட் கொண்டார் என்பது யாவரும் அறிந்ததே, இதில் சடங்கவி சிவாச்சாரியார் என்னும் பெயரைக் குறிப்பிட்டவர், அன்னாரின் மகளது பெயரை கூறாதது ஏன்?

"பெண்களில் உயர நோற்றான் செந்திருவனைய கன்னி" என்றே கூறியதின் காரணமென்ன?

மகளின் பெயரை கண்டுபிடிப்பது சேக்கிழாருக்கு அரிய செயலா? சுந்தரது பெற்றோர்களின் பெயரை குறிப்பிட்டவருக்கு மணப்பெண் பெயரைக் கூறி இருக்கலாமே.

பொதுவாக நம் நாட்டில் குடும்பத்துக்குப் பங்கம் விளைவித்தப் பெண்ணைச் சுட்டும் பொழுதெல்லாம்,

கைகேயி என்றோ, கூனி என்றோ, அயலார் கூறுவது இயல்பே. தகாத முறையில் ஆசை கொண்டு அவமானப்பட்ட ஒரு பெண்ணை "அவளா, சூர்ப்பநகையாயிற்றே" என்பர். சிவாச்சாரியார் மகள் பெயரைச் சொல்லி, அவளாயிற்றே என மக்கள் கூற வாய்ப்பு ஏற்படக் கூடாது என்றே பெயரைச் சுட்டிக் காட்டாமல் விட்டிருக்க வேண்டும் என தோன்றுகிறது.

சேக்கிழார், உடன்பாட்டிலும் பெண்மையை போற்றுவர். எதிர்மறையிலும் பெண்மையை பாராட்டுவர். பெருமை சேர்த்த தெய்வச் சேக்கிழார் என்றே கூறலாம்.

பெண்மையைப்பாராட்டும் சேக்கிழார் எதிர் மறையிலும் பாராட்டுவது குறித்து இது காறும் யாவரும் வரலாறு படைத்தாக குறிப்புகள் எங்கும் காணப் படவில்லை என்பதே அடியேனின் கருத்தாகும். பெண்மையின் பரிமாணங்கள் ஒன்று திரட்டி வெளிக் கொணர்ந்த ஒரு காப்பியம் என்றால் மிகையாகாது.



சேக்கிழார்

# 13. மிருகங்களா? மரங்களா?

நம் நாட்டில் அன்றும் சரி இன்றும் சரி, மூர்த்தி, தீர்த்தம், விருட்சம் இம்மூன்றின் அடிப்படையிலே தான் ஆலயங்கள் நிறுவப்பட்டுள்ளதை யாவரும் அறிவர்.

இதில் பொதிந்துள்ள கருத்துக்களை நம் முன்னோர்கள் எந்த அளவு சிந்தித்து நடைமுறைக்கு கொண்டு வந்துள்ளார்கள் என்பதைச் சந்திக்கத் தவறி விட்டோம்.

விஞ்ஞானத்தின் அடிப்படையில் காலச்சக்கரம் வேகமாக சுற்றுவதால் அவரவர்கள் பணிகளைச் செய்து முடிக்கவே நேரம் போதவில்லை. பண்டைய ஒழுக்க முறைகளை, பள்ளிகளில் இளம் வயதினருக்குச் சொல்லிக் கொடுக்கவோ, அதனை உணர மாணவர்களுக்கு வெளிப்படுத்தவோ முயற்சி எடுக்கப்படவில்லை.

பெற்றோர்கள், தவறு செய்யும் தங்கள் பிள்ளைகளை கடிந்து கொள்வதை பார்த்திருக்கிறோம் இதில் தவறில்லை.

ஒருநாள், என் நண்பர் வீட்டுக்கு செல்ல நேரிட்டது. அது சமயம் ஏறக்குறைய வாலிப வயதுடைய தனது உதவாக்கரை மகனைப் பார்த்து, ஏன் இப்படி மாடு மாதிரி நிற்கிறாயே உனக்கு சூடு சுரணை இல்லையா? எனக் கடிந்து கூறியதைக் கேட்கலானேன்.

மகன் ஏதும் பதில் கூறாது, முழிமுழி என்று நிற்கவே, மேலும் ஆத்திரத்தில் மரம் மாதிரி ஒன்று பேசாமல் நிற்கிறாயே என நிந்திக்கலானார்.

உயிரினங்களையும், இயற்கை வர்க்கத்தையும தகுதி அற்றவர்களோடு ஒப்பிட்டு நிந்திப்பது எவ்விதத்தில் நியாயம் இதைக்குறித்து சிந்திக்கலானேன்.

மாடுகள் கூட இன்றைக்கு சந்தைக்கு கொண்டு போனால் தகுதிக்கேற்ப ரூ.5,000/- விலை போகும். தகுதியற்று சிறிதும் பொற்றுப்பில்லாது வளர்ந்து விட்ட இவனை யார் சீந்துவர் இறந்தவர்களை மயானத்திற்குக் கொண்டு சென்று உடலை எரிக்க, சாணத்தால் செய்த வறட்டியையும் விறகைத்தான் பயன்படுத்த வேண்டி யுள்ளது. மரம் முதிர்ச்சி அடைந்து, பட்டுப் போன போதிலும் பிணத்தை எரிக்க பயன்படுகிறது. தன் நிழலை அண்டுவோர்க்கு உதவுகிறது. அதோடு காய்கனி முதலானவைகளை காலத்திற்கேற்ப பாகுபாடின்றி மக்களுக்குத் தந்து உதவுகிறது. மரம் கூட உணர்ந்து வாழ முயற்சிக்கிறது.

காற்றின் வேகத்தில் சில மரங்கள் ஆடி அலைவதை பார்த்திருக்கிறோம். முருங்கை மரக்கிளைகள் ஒடிந்து வீழினும், அவைகளுக்குள்ள ஆவேசம் குறையாது மறுபடியும் துளிர்விட்டு வெளிவர துடிக்கும்.

இத்தகைய வர்க்கங்களைக் காட்டிலும், மண்ணில் புதையப் போகும்மனிதன் எவ்விதத்தில் சேர்க்கை, தகுதியற்று மௌனம் சாதிக்கும் இவர்கள் போன் றோர்களைப் பெற்றோர்கள் அயலார் முன்னிலையில் கடிந்தால் ஒருவித பயனும் ஏற்படாது.

நெதர்லாண்ட் நாட்டிலே, தன சொந்த நிலத்தில் உள்ள மரங்களைக் கூட வெட்டுவதனால் அரசாங்கத்திடம் அனுமதி பெற்ற பிறகே வெட்ட முடியும் எனும் சட்டம் இன்றும் உள்ளது.

"வாடிய பயிரைக் கண்டு வாடினேன்" என அண்மையில் வாழ்ந்த வள்ளலார் சாதாரண தாவரங்கள் மேல் வைத்திருந்த பாசத்தை நினைத்தாலே உடல் சிலிர்க்கிறது. மரங்களிடம் உள் தன்னடகத்தையும், நன்றியுணர்வையும் பெறுவதற்கு நம்மை தகுதியுடைவர்களாக்கிக் கொள்வதே சிறந்த பண்பாகும். யூதர்களும், 'தோரா' எனும் வேத நூலை அவர்களது வாழ்க்கையின் மரம் என்கிறார்கள்.

ஆலயங்களில் தல விருட்சமாக ஆன்றோர்களால், மரங்களையே போற்றி செய்து வந்துள்ளது யாவரும் அறிந்ததொன்றே. தெய்வதங்களுக்கும் மிருக வர்க்கத்திலேயே வாகனமாக அமைத்து போற்றி செய்துள்ளதையும் இன்றும் கண்கூடாக காணலாம். இத்தகுதியுடையவைகளை எவ்வாறு புத்திகூர்மை இல்லாதவர்களோடு ஒப்பிட்டு கூறுவது பொருந்தும். அதைவிட முட்டாள், மூதேவி, குட்டிச்சுவரே, மடையா எனக் கடிந்துக் கொள்ளலாம்.

இனியாவது தங்களது பிள்ளைகளை, ஏனையோர் முன்னிலையிலும் சரி, தனிப்பட்ட நேரத்திலும் சரி, மரமா மாடா எனக் கடிந்து கூறுவதைத் தவிர்க்கவும். மரத்திற்குள்ள ஊக்கமும் பிராணிகளின் சத்வ குணத்தையும், பிள்ளைகளுக்கு உணரச் செய்தாலே, அவர்களின் வருங்கால வாழ்க்கை, துளிர்விட்டு மேலும் தழைக்கும் என்பதில் சந்தேகமே இல்லை. வெற்றி வாய்ப்பு உறுதி.

# 14. கம்பனைக் கவர்ந்த இராமன்

பொதுவாகவே, அடியேனால் கூறப்படும் கருத்துக் களில் குறைகளேயே காணும் நண்பர்களிடமே பழகுவதை விரும்புபவன். அடியேனது ஆன்மீக கருத்துக்கள் ஏற்றுக் கொள்ளும் விதத்தில் அமையுமாயின், அதை விட மனச்சாந்தி தேவை இல்லை. அதோடன்றி, நண்பர்களால் கேட்கப்படும் சந்தேகங்களுக்கு விடை காண நேரிடின், பல நூல்களை ஆராயும் சந்தர்ப்பமும் ஏற்படுகிறது. அதுவே என அறிவுக்கும் ஒரு விருந்தாகும்.

ஒரு சமயம் பழகும் நண்பர்களோடு, பாலாற்றங்கரையில் உலாவச் சென்றோம். மாலை நேரமானதால் ஆற்று மணலில் உட்கார்ந்து கொண்டு, கலந் துரையாடுவதற்கு மிக ரம்மியமாக இருந்தது. அது சமயம், அருணகிரியார் கூறிய பாடல், ஒன்றில் ராமனது போரில் யார் யார் எந்த உருவந்தாங்கி உதவி செய்தனர் எனும் பட்டியலை தெள்ளத் தெளிவாக, சுருங்கச் சொல்லி பாடியுள்ளதைக் கூறலானேன். அப்பாடலில் வரும் அடிகளைக் கூறக் கேட்டனர். பாடல் (கருவடைந்து பத்து) எனத் துவங்கும் திருப்புகழில், பின் பகுதியில், 5,6,7 அடிகளில் பாடியுள்ளதைச் சுட்டிக் காட்டினேன். பாடல் :

*“இரவி இந்தரன் வெற்றிக்குரங்கின்*
*அரசரென்றும் ஒப்புற்றவுந்தி*
*இறைவன் எண் கினக்கர்த்தனென்றும்-நெடுநீலன்*
*எரியதென்றும் ருத்ரற்சிறந்த*
*அனுமனென்றும் ஒப்பற்ற அண்டர்*

*எவரும் இந்த வர்க்கத்தில் வந்து - புனமேவ*
*அரியதன் படைக்கர்த்தரென்று*
*அசுரர் தங்களைக் கட்டை வென்ற*
*அரிமுகுந்தன் மெச்சுற்ற பண்பின் - மருகோனே"*

**கருத்தையும் விளக்கினேன் :**

சூரியனின் கூறான சுக்ரீவன், இந்திரன் கூறான வாலி இவர்களிருவரும் வெற்றிக் குரங்கு அரசர்களாகவும், ஒப்பிலாத திருமால் உந்தியில் பிறந்த பிரமன் சாம்புவானாகவும், நெடிய நீலன் எரியின் கூறென்றும், ருத்ரன் கூறு அனுமன் என்றும், ஒப்பிலாத தேவர்கள் யாவரும் இவ்வகையில் பூமியில் வந்து சேர, தன் படைகளுக்குத் தலைவராகக் கொண்டு, அசுரர்களுடைய சுற்றமெனும் கூட்டத்தை வென்ற அரிமுகுந்தன் மெச்சும் - மருகோனே" என்பதாகும்.

அது சமயம் பகுத்தறிவுத் தோழரான ஒரு நண்பர், சில சந்தேகங்களைக் கேட்க ஆரம்பித்தார். கன்னித்தமிழ் மொழியில் காவியத்தை தான் எழுத வேறு கம்பனுக்கும் கிடைக்கவில்லையோ? வடநாட்டு வால்மீகி திராவிடரை திடமாக இழிவு செய்யத் தீட்டிய கதையை இந்தப் பயல் கம்பன் ஏனோ தமிழருக்காக சொந்தக் கதையாக்கி சொகுசாய் உரைத்திட்டான்? என என் மேல் சீறி விழாத குறையாகக் கூறினான். இவர்கள் போன்றோர்கள் காட்சிப் பொருளாக இல்லாத கடவுள் இருந்தால் என்ன? போனால் என்ன? என கருதுபவர்கள் உண்மைதான். இவர்கள் காணாத ஒன்றை நம்ப மறுக்கிறவர்கள். அந்த அளவுக்கு உள்ளத்தில் நேர்மையிருக்கிறது. நாமோ நம்புகின்ற ஒன்றைக் காண மறுக்கிறவர்கள். இவர்களது கூற்றைச் சிந்தித்துக் கொண்டிருக்கும் போதே, ஒரு சைவப் பண்டிதர்,

தமிழும் சைவமும் சிறப்போடு விளங்கிய தமிழ்நாட்டில் ஏற்ற கதை கம்பனுக்கு வேறு கிடைக்கவில்லையோ. பிறவாத தன்மையுடைய எம்பெருமானிருக்க, இறவாப் புகழை எல்லாம் ராமனுக்கே ஏற்றியுள்ளானோ? என முணுமுணுத்ததோடு விட்டார்.

ஏதோ ஒருவாறு மனதைத் தேற்றிக் கொண்டிருந்த சமயம், மூன்றாவது நண்பராகிய செஞ்சட்டை வீரரோ உடுக்க உடையும், உண்ண உணவுமின்றி தவிக்கும் இவ்வேளையில், கலை என்ற கதைபேசி காலத்தை வீணாக்குகிறீர் கவி என்றும் கம்பன் என்றும் ஆராய நாட்டில் மக்களுக்கு எங்கு நேரமிருக்கிறது, நினைத்துப் பாரும், என்றார். தகழியில் அகப்பட்ட தயிர் போல் என் மனம் சுழன்றது.

காவிரி தீரத்தில் கலைமகள் அருளால், பிறந்து வளர்ந்து, கருவிலேயே திருவருளைப் பெற்ற கம்பன், வால்மீகி இராமாயணத்தை அறிந்திருந்தான். இதே ராமனை அன்றைய மூவேந்தர்களோடு ஒப்பிட்டு நோக்கினான். "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" எனும் பழந்தமிழ் பண்பாட்டிற்கு ஏற்ப, வடநாட்டு ராமனை, தமிழ்நாட்டின் தலைசிறந்த வீரனாக மாற்ற மனம் கொண்டான்.

கைகேயிடம் தந்த வரத்தை நிறைவேற்றவே, "விதி முன் செல்ல, தருமம்பின் இரங்கியே", தன் ஆவியையே பணயமாக வைத்த தந்தை, தாயின் கட்டளையையே மேலாகவே கருதி சாம்ராஜ்யம் துறந்து, காட்டிற்கு புறப்படும் ஒரு மகன், காடு சென்று நாடு திரும்பும் வரை தவக்கோலம் பூண்டு வாழும் ஒரு தம்பி, வனம் சென்ற விடத்தும் வேடன் ஒருவனையும், குரங்கு ஒன்றையும், அரக்கன்

கூட்டத்தைச் சேர்ந்த ஒருவனையுமே, தன் உடன் பிறந்தானாகச் சேர்த்துக் கொள்ளும் ஒரு வீர புருஷன் எல்லோருமே இக்காவியத்தில் இடம் பெற்றது வியப்பில்லை தானே.

பலமனைவியர்களையும் கொண்ட அரச பரம்பரையை அறிந்திருந்த கம்பன், ஏகும் நல்வழி, அவ்வழி என் மனம் எனும் உறுதிப்பாட்டில் நின்று, இப்பிறவிக்கு இருமாதரையும் தொடேன் சிந்தையாலும் எனும் செவ்விய வரம்பில் நின்று வாழ்ந்து காட்டிய ராமன் பேரிலேயே கம்பன் ஆசைப்பட்டிருக்கிறான். அதோடு தன் கற்பின் திறத்தை அறிந்திருந்த சீதை, தானே சிறை மீளாது தன் நாயகன் வில்லின் ஆற்றலை வெளிப்படுத்தவே, அசோக வனத்தில் இருந்த செல்வி, தமிழ்நாட்டுப் பெண்களுக்கு எல்லாம் எடுத்துக்காட்டவே, கம்பன் நினைத்திருந்தால் தவறு இல்லை தானே. மேலும் இந்திய மக்களின் பண்பாட்டை இணைக்கவே வடக்கே இராமனையும், தெற்கே இராவணனையும் மூலப்பொருளாகக் கொண்டு பரஸ்பரம் ஏற்படுத்தவே, இக்காவியத்தின் நோக்கம் எனக்கருதுவதில் என்ன பிழை.

இல்லையெனில், வடக்கே ராமனை படைத்த வால்மீகி, அப்பகுதியிலேயே இராவணனையும் படைத்து, அப்பகுதிக்கே பெருமை சேர்க்க எண்ணியிருக்கலாமே. அன்றி, கம்பன், தென் பகுதியிலேயே இராமனை படைத்து, அப்பகுதிலேயே ஆண்ட அரக்கன் இராவணனை வதம் செய்து, தென் பகுதிக்கே பெருமை சேர்க்க கருதி யிருக்கலாமல்லவா. இதனடிப்படையில் தான் கங்கை நீரை கன்னியாகுமரியில் கடலில் கலக்கச் செய்து, இங்குள்ள மணலை வடக்கே கொண்டு சென்று கங்கையில் கரைக்கும் ஒருநியதியை ஆன்றோர்கள் முன்னரே ஏற்படுத்தினர்.

# 15. முதலை உண்ட பாலனை உயிர்ப்பிக்க செய்த வரலாறு

அருணகிரியார் பாடிய ஒரு சில பாடல்களைத் தவிர, ஏனைய எல்லாப் பாடல்களிலும், முதல் 4 அடிகளில், விண்ணப்பத்தைக் குறித்தும், பின் 4 அடிகளில் முருகனின் பெருமையை விளித்தும் பாடியுள்ள போதிலும், சில பாடல்களில் வெறும் விளியாகவே பாடியுள்ளது கவனிக்கற்பாலது. அத்தகு பாடல்களில் ஒன்று கீழ்வருமாறு கொடுக்கப்பட்டுள்ளது.

"ஐங்கரனை யொத்த மனம்" எனத்துவங்கும் திருப்புகழில், 7-வது அடியில் பாடியுள்ளது மிகவும் ஆராயத்தக்கது.

*"கொங்கிலுயிர் பெற்று வளர் தென் கரையிலப்பரருள்*
*கொண்டு உடலுற்ற பொருள் - அருள் வாயே"*

இந்த ஒரு அடியிலேயே சுந்தரரது வரலாற்றின் ஒரு பகுதியைத் தெள்ளத் தெளிவாக, எளிய நடையில் கோடிட்டு காட்டியுள்ளது அருமையிலும் அருமை. <u>இதில் அடங்கியுள்ள வரலாற்றுச் செய்தி. உயிர் பெற்று உடலுற்றது.</u>

திருப்புக்கொளியூர் ஏரியில் குளிக்கச் சென்ற ஒரு அந்தணச் சிறுவனை, ஒரு முதலை உண்டது. அந்நிகழ்ச்சிக்கு சில ஆண்டுகளுக்குப் பின் திருப்புக் கொளியூர் எனும் அவிநாசிக்குச் சென்ற சுந்தரர்,

நிகழ்ச்சியை கேட்டறிந்து இறந்த சிறுவனுடைய பெற்றோர் மகிழ பதிகம் பாடி, அந்த ஏரியில் ஜலம் நிரம்பவும், முதலை வந்து சேரவும், கடந்த ஆண்டுகளுக்கு உரிய உடல் வளர்ச்சியுடன் உயிர் பெற்ற அந்தச் சிறுவனை, அம்முதலை ஏரியின் கரையினில் உமிழவும் செய்தார். இந்நிகழ்ச்சி கை கூடினதற்கு எந்த ரகசிய பொருள் வேலை செய்ததோ, அதை எனக்கு அருள மாட்டாயா என முருகவேளை வேண்டினர்.

இப்பாடலை தினமும் அடியார்கள் காலையில் ஓதிவருதல் அவசியம்.



# 16. அர்த்தநாரி உருவ வரலாறு

சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் முறையில் பாடிய <u>"பொற்பதத்தினைத்து"</u> எனும் திருப்புகழில் 5-வது அடியில் ஒரு தத்துவ விளக்கத்தை உள்ளடக்கிய பாடியுள்ளதைப் பார்ப்போம்.

*"வெற்பணித்த தற்பரைக் கிடப்புறத்தை யுற்றளித்த*
*வித்தகத்தர் பெற்ற கொற்ற - மயில்வீரா"*

உமா தேவி இடப்பாகம் பெற்ற வரலாற்றினை கூறுகிறது. பிருங்கி முனிவர் சிவபிரானை மாத்திரம் வலம் வந்து தேவியை வலம் வராமற் செல்ல, அதைக்கண்ட தேவியார் சிவனுடன் நெருங்கி இடைவெளியிராது வீற்றிருக்க முனிவர் பிருங்கம் (வண்டின்) உருவெடுத்து இருவர் மத்தியில் நுழைந்து செல்லத், தேவி சிவபிரானை நோக்கி ஏன் இம்முனிவர் என்னை, விலக்குகின்றனர் எனக் கேட்க சிவபிரான் "இஷ்டி சித்தி பெற விரும்புவோர் உன்னையும் முத்தி பெற விரும்புவோர் என்னையும் வழிபடுவார்" எனக் கூறினர். அதனைக் கேட்ட தேவியார், கேதாரம் எனும் தலத்தில் தவம் புரிந்து சிவபிரானது இடது பாகத்தையே தனக்கு இடமாகப் பெற்றனள். இதனால் சிவபிரான் அர்த்தநாரீஸ்வரர் ஆயினர்.

*"தன்னை நீக்கியே சூழ்வுறுந்தவமுடைப் பிருங்கி*
*உன்னி நாடிய மறைகளின் முடிவினை உணரா*
*என்னை யானுடைய யானிடஞ் சேர்வனென்றிமயக்*
*கன்னி பூசனை செய்ததே தாரமுன் கண்டான்"*

கந்தபுராணம் - வழிநடை 3 (1-23-3)

# 17. ஏழேழு பேர்கள் கூற வரு பொருளதிகாரம்

அருணகிரியார், தாம் பாடிய திருப்புகழில், "சீரான கோல" எனும் பாடலில் ஏழேழு பேர்கள் கூற ஒரு பொருளதிகாரத்துக்கு ஊமர் விழி செய்தது குறித்து பாடியுள்ளதின் உட் கருத்தைப் பார்ப்போம். பாடல், "*ஏழேழு பேர்கள் கூற வருபொருளதிகாரம்*" வரலாற்றைக் கவனிப்போம். அகப்பொருள் இலக்கணம் இல்லையே என பாண்டியன் வருந்த, சொக்கலிங்க பெருமானே 60 சூத்திரங்கள் கொண்ட நூலை எழுதி அளித்தார். இந்நூல் "இறைவனார் அகப்பொருள்" என பெயர் பெறும். இந்நூலுக்கு 49 சங்கப் புலவர்களும் உரை கண்டனர். யாவரும் தங்கள் தங்கள் உரையே சிறந்தது என வாதாடினர்.

"ஆலவாய் அண்ணலே! நீதான் எங்கள் குறையைத் தீர்க்க வேண்டும்" என இறைவன் முன் முறையிட்டனர். இறைவரும் ஒரு புலவர் போல வந்து, இவ்வூரில் வணிகன், உப்பூர்கிழாரின் மகன், ஊமை, பாலன், சரவண குகனே வந்துள்ளான். அவன் ஒப்பிலா ஞானி. அவன் பெயர் உருத்திரசன்மன். அவன்முன் உங்களது உரைகளைச் சொல்லுங்கள். யாரது உரையைக் கொள்கின்றானோ அதுவே உண்மை உரை இதற்கு ஐயமில்லை என்றனர்.

ஊமை எங்ஙனம் பேசுவான் என்று புலவர்கள் கேட்க அந்த ஊமைப் பிள்ளை எவருடைய உரையைக் கேட்டதும் உடல் புளாங்கிதம் அடைந்து, கண்களில் நீர் தோன்றும்

அதுவே சிறப்பான உரை எனக் கொள்க. ஊமைப் பிள்ளையைச் சிம்மாசனத்தில் அமர்த்தி, ஒவ்வொருவராய் தாங்கள் எழுதிய உரையைக் கூற, நக்கீரன், கபிலர், பாணர் இம்மூவர் உரையைக் கேட்டதும், ஊமைப் பிள்ளை பெருவிருப்பைக் காட்டிப் புளங்காகிதமடைந்து, கண்களில் நீர் சொரிய ஆர்ப்பரித்தான்.

*"அருந்தமிழச்செட்டியாம் செட்டி இலகிய மயின் மீது அறுமுகத்தோடும், இனிய பன்னிருகரத்தோடும், புலவர் கண் டிறைஞ்ச அருளினால் விளங்கி போயினான்"*
(திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்)

இதனைக்குறித்து :

*"வழுதியர் தமிழொருபொருளதனை*
*வழிபட மொழியு - முருகேசா"*

என அருணகிரியார். தாம் பாடிய திருப்புகழ் "எழுதிகழ்புவன" எனும் பாடலில் 3-வது அடியில் பாடியுள்ளது நோக்கத்தக்கது.

# 18. திருமுருகாற்றுப்படையைக் குறித்து

அருணகிரியார் தமது பாடல்களில், நக்கீரரது புகழைக் குறித்தும், அன்னாரால் பாடப்பெற்ற திருமுருகாற்றுப் படையைக் குறித்தும் பாடிய பாடல்களில், ஒன்று, "முலைமுகந்திமிர்ந்த" எனும் திருப்புகழ். இப்பாடலில் 5-வது அடி ஒன்றிலேயே சுருங்கச் சொல்லி விளங்க வைத்தது மிகவும் ஆராயத்தக்கது. இப்பாடல் ஒன்றே போதும் இவரது கவித்திறனுக்குத் திறவுகோல்.

> "*மலைமுகஞ்சுமந்தபுலவர் செஞ்சொல்கொண்டு*
> *வழிதிறந்த செங்கை - வடிவேலா*"

மலைமுகம் சுமந்த புலவர் = மலைக்குகையில் அடைக்கப் பட்ட நக்கீரர். செஞ்சொல் = (அவரால் துதிக்கப்பட்ட) திருமுருகாற்றுப்படை. இவ்வரலாறு காண்போம்.

சிவபிரானையே பாடி முருகனை பாடாதிருந்த நக்கீரர் எனும் சங்கப் புலவர்களில் தலைமைத் தமிழ்புலவர். இவர் திருப்பரங்குன்றத்தில் பொய்கைக் கரையில் ஜெபம் செய்து கொண்டிருந்த போது, அங்கிருந்து அரச மரத்தின் இலை ஒன்று பொய்கை நீரில் விழ, அந்த இலை உருமாறி ஒரு பாதி மீனாகவும், ஒரு பாதி பறவையாகவும் மாறி, ஒன்றை ஒன்று இழுத்துப் பூசலிட்டது. அதைக் கண்ட நக்கீரர் தாம் செய்து கொண்டிருந்த ஜபத்தை விட்டு, மீன் - பறவை இவைகளின் பூசலை விலக்க கருதினார். அவைகளை ஒன்றோடொன்று இணைத் திருந்த மெல்லிய சதையைக் கிள்ள, மீனும் பறவையும் துடிதுடித்து இறந்தன. சிவபூஜையினின்று தவறி விட்டதால், பூதகணத்தலைவர்

நக்கீரரைக் கொண்டு போய் ஒரு மலைக் குகையில் அடைத்தனர். அந்த குகையில் கற்கிமுகி எனும் குதிரை முகப் பெண் பூதம், ஆயிரம் பேர் சேர்ந்ததும் உண்ண வைத்திருந்த 999 பேர்களோடு நக்கீரரும் அடைப்பட்டார். இந்த இடர்பாட்டை அறிந்த நக்கீரர் தாம் முருகவேளை பாடாதிருந்தது பிழையென்றுணர்ந்து, அவரைப்பாடி, உய்யலாம் எனத் தேர்ந்து பாடமுயன்ற போது, முருகவேளே, "உலகம் உவப்ப" என அடி எடுத்துக் கொடுக்க, நக்கீரரும், திருமுருகாற்றுப்படை எனும் அருமை நூலைப் பாடினர். தமிழ் முருகன் அப்பாடலை கேட்டு மிக உவந்து, தமது திருக்கைவேலால் குகையைப் பிளந்து, கற்கிமுகி எனும் பூதத்தைக் கொன்று புலவர்களை குகையினின்றும் மீட்டனர்.

இதனை திருப்பரங்குன்ற புராணத்திலும், அருணகிரியாரால் அருளிச் செய்யப்பட்ட பல பாடல் களிலும் வேல்வகுப்பு, பூதவேதாள வகுப்பு, புய வகுப்பு, வேடிச்சி காவலன் வகுப்பு போன்ற பாடல்களிலும் கந்தரந்தாதியில் 51-ம் பாடலில் காணலாம்.



# 19. கல்விகரைகண்ட புலவோன்

அருணகிரியார் போன்றோர்களை, யாவரும் புலவோர் எனப்பாராட்டின போதிலும், இவர்களுக்கெல்லாம் புலமையை அருளும் முருகனே, கல்விகரை கண்ட புலவனாவான் என அருணகிரியாரே, தமது திருப்புகழில் பாடியுள்ளது, தற்பெருமைக் கொள்ளாத நேர்மையை அறிய முடிகிறது. இதனை உறுதிசெய்யவே, தாம் பாடிய திருப்புகழில், "அல்லசலடைந்த" எனும் பாடலில் 5-வது அடியில்

*"கல்லசலமங்கையெல்லையில்விரிந்த*
*கல்விகரை கண்ட - புலவோனே"*

எனப் பாடியதில், கல்விகரைகண்ட புலவன் எனக் கூறியதற்கு உள்ள கருத்தின் விளக்கத்தைப் பார்க்கலாம்.

**கல்விகரை கண்ட வரலாறு**

ஒருகாலத்தில், கலைப்புலவர்கள், தேவர்கள், முனிவர்கள் கூடியிருந்த சபையில், யார் முதன்மை புலமை உடையவர் அவருக்கே வித்வத்தாம்பூலம் கொடுக்க வேண்டும் என தீர்மானித்தனர்.

கலைமகளின் அம்சமான அவ்வையாரே அத்தாம் பூலத்துக்கு உரியவர். இதனை அவ்வம்மையாருக்கு கூற, அவ்வையார், இதனைப் பெற தகுதி எனக்கில்லை எனக் கூறினார். புலவர்களுக்கு தேவர் அதிபன், ஐந்திரவியாகர இந்திரனிடம் செல்லுங்கள் எனக் கூறினார் அவ்வையார். அவ்வாறே இந்திரனிடம் போய் கூறினதும், இந்திரன் மிக

அஞ்சி "அந்தோ! ஒரு இலக்கண நூல் இயற்றி ஒருவன் சகலகலா வல்லவன் ஆகிவிடுவானா! முருகனிடம் தமிழ் கற்ற அகத்தியரே, இத்தாம்பூலத்தை வாங்க உரியவர் என்றார். இதைக் கேட்ட யாவரும் அகத்தியரிடம் செல்ல, அவரோ, 'சகலகலா வல்லி'யாகிய கலைமகளேயாவாள். அவளுக்குத்தான் இத்தாம்பூலத்தை வாங்க தகுதி யுடையவள் என்றதும், கலைமகளிடம் சென்று, வந்த விஷயத்தைக் கூற, கலைமகள் யான் கற்றது கைம்மண் அளவே. கல்லாதது உலகளவு என மறுப்பு தெரிவித்து, வாகீசரி, ராஜராஜேஸ்வரி எனப்படும் பார்வதி தேவியே இப்பரிசுக்கு ஏற்றவள் என்று கூறியதும், யாவரும் சேர்ந்து தேவியிடம் விண்ணப்பம் தெரிவித்தனர்.

தேவியோ புன்னகை புரிந்து, நான் வாழைப்பழத்தின் தோல் போன்றவள் எனக்குள் இருந்த கனி, முத்து, முத்துக்குமரனே இப்பரிசுக்கு உரியன் எனக் கூறி விடத்தனள். பின் யாவரும் கந்தபுரம் சென்று, முருகனிடம் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை கூறி, வித்வத்தாம்பூலத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும் என பணிவன்புடன் கேட்டுக் கொண்டனர்.

"நன்று, நாம் ஏற்றுக் கொள்வோம்" எனத் தடையின்றி கூறி, அந்த தாம்பூலத்தை ஏற்றுக் கொண்டார்.

இங்ஙனம் சகலகலாவல்லவன், நான் என்று மார் தட்டும் பெருமாள் ஆயினர் நமது முருகவேள். இதன் விரியை "சுப்ரமண்ய பராக்ரமம்" எனும் புத்தகத்தில், "சகலகலா வல்லப மூர்த்தி" சரித்திரத்தில் காண முடிகிறது.



# 20. இராமர் இலங்கைக்கு பாலம் அமைத்த வரலாறு

அருணகிரியார், தமது பாடலில் இராமரது பெருமைகளைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்த பாடல் ஒன்றை பார்க்கலாம்.

"குழலடவிமுகில்" எனத் துவங்கும் பாடலில், கடைசி அடியியில் பாடியுள்ளதின் கருத்தைப் பார்ப்போம்.

*"பரவுபரவை கொல் பரவை வணஅரி*
*பரவு மிமையவர் - பெருமாளே"*

**இதன் வரலாறு** : பரவிய சமுத்திரத்தின் மீது பாணத்தை பிரயோகஞ் செய்த இலங்காபுரிக்குப் போகைக்கு நீ வழி காட்டென்று போய்க் கடல் தீக் கொழுந்த வாகைச் சிலைவளைத்தோன்" - என (கந்தர் அலங்காரம் - 54)

கடல் கடக்க அணை கட்ட வேண்டி ஸ்ரீ ராமபிரான் வருணன் வரவை எதிர்பார்த்தார். அவன் வராததால் கோபித்து கடல் மீது அஸ்திரத்தை எடுக்க வருணன் இதைக் கண்டு பயந்து வந்து ஸ்ரீ ராமரை சரணடைந்த வரலாறாகும்.

பாவு பரவு கொல் பரவிய சமுத்திரத்தின் மீது பாணப்பிரயோகம் செய்த இந்த ஒரு பதத்தில் இலங்கைக்கு வழி வகுத்ததைக் குறித்து, எவ்வளவு எளிய முறையில் மேலே கூறிய வரலாற்றினைப் பொருத்திப் பாடியுள்ளது இவரது கவித்திறனுக்கு ஒரு எடுத்துக்காட்டாகும்.

# 21. தமிழ் எனக்கென்றே சிறக்க அருள்வாய்

அருணகிரியார், <u>பருத்தந்தத்தினை ந்திட்டு</u> எனத் துவங்கும் திருப்புகழில், தமிழ் சொற்களைக் கையாண்ட விதம் மிகவும் அற்புதம்.

'இப்படி, அப்படி' எனும் பதங்கள், 'இக்கணமே', 'அக்கணமே', 'இந்த ஒப்பற்ற வகையில்', 'அந்த ஒப்பற்ற வகையில்' எனும் பொருள்களில் வருவதைக் காணலாம்.

> *"ஒப்படை ஒருவனை உருவழிய, <u>அப்படி</u> அழிசெழ*
> *விழித்தவனே" - சம்பந்தர் தேவாரம் (111-4-7)*

> *"இனிது கவி <u>அப்படி</u> ப்ரசாதித்த பாவலரும்"*
> *வேடிச்சிகாவலன் வகுப்பு*

> *"மங்கா நற்பொருள் இந்தா*
> *அற்புதம் என்றே <u>இப்படி</u> அருள்வாயே" -*
> *திருப்புகழிலும்*

"ஒருபொருள் அப்பர்க்கு <u>அப்படி</u> ஒப்பித்தர்ச்சனைக் கொண்டநாதர் - என திருப்புகழ் பாடலிலும் வரும் பதங்கள் நோக்கற்பாலன.

மேலே கூறிய, "பருத்தந்தத்தினைதந்திட்" எனத் துவங்கும் பாடலில், தனக்கு தமிழையே கொண்டு 4-வது அடியில்,

> *"துணைச் செம்பொற்பதத்தின்புற்*
> *றெனக்கென்றப் பொருட்டங்கத்*
> *தொடுக்குஞ்சொற்றமிழ்த்தந்து-இப்படியாள்வாய்"*

என்பதில், எனக் கென்றே சிறப்பான வழியில் பொருள் நிரம்பித் தங்கும்படி தொடுக்கப்படும் தமிழ்ச்சொற்களைத் தந்து இப்பொழுதே ஒப்பற்ற வகையிலே ஆண்டருள் வாயாக - எனப்பாடியதிலிருந்தே தமிழின் மேல் உள்ள பற்றும், அதற்கேற்ப பதங்களும் கையாண்ட விதம் பெருமைப் பாராட் டத்தக்கது.

சந்தப்பாக்கள் எண்ணில பாடி அழியா இன்பம் பெற்ற அருணகிரியார், திருமாலின் பெருமையைக் குறித்து பாடிய அருமைச் செய்யுள், "அங்கைமென்குழலாய்" எனத் துவங்கும் திருப்புகழில் 5,6,7 அடிகளில் பாடியுள்ளது.

*மங்குலின்புறுவானாய்வானூ*
*டன்றரும்பியகாலாய் நீள்கால்*
*மண்டுறும்பகைநீறாகிற - எரிதீயாய்*
*வந்திரை ந்தெழு நீராய் நீர்சூழ்*
*அம்பரம்புனை பாராய் பாரேழ்*
*மண்டலம் புகழ் நீயாய் நானாய் மலரோனாய்*
*உங்கள் சங்கரர் தாமாய் நாமார்*
*உண்ட பந்திகள் தாமாய் வானாய்*
*ஒன்றினுங்கடை தோயா மாயோன் - மருகோனே.*

**இதன் கருத்து** : "மேகங்கள் இன்புற்று உலவும் வானாகவும், வானினின்று அன்று வெளிப்பட்ட காற்றாகவும், பெருங்காற்றினுடன் கூடிய நெருங்கி வரும் பகைகளை நீறாக்கும் வன்மைக் கொண்டுள்ள எரி நெருப்பாவும், வந்து ஒலித்து எழுகின்ற நீராகவும், நீர் சூழ்ந்த கடல் எனும் ஆடையைப் புனைந்த பூமியாகவும், ஏழு பாரும் எழு மண்டலங்களும் புகழ்கின்ற நீயாகவும், நானாகவும், தாமரை மலரில் உறையும் பிரம்மனாகவும் உங்கள் (தந்தையாம்) சங்கரராகவும், அச்சம் தரும் அண்ட

கூட்டங்களாகவும், மூலப்பகுதியாகவும் (தோய்ந்தும்) எதனிலும் இறுதியிற் தோய திருக்கின்றாமாயனாம். திருமாலின் - மருகனே என்பதாகும். இத்தகு வர்ணனைகளைப் போன்று கவிகள் வேறெதிலும் இருப்பதாகத் தோன்றவில்லை. இப்பாடல் மனனம் செய்ய வேண்டிய பாடலாகும்.

முருகனையே முழுமுதற் கடவுளாக பாவிக்கும் அருணகிரியார், நாராயணனைக் குறித்து சமரஸ நோக்கில், உயரிய கருத்தாழத்தோடு பாடியுள்ளது எம்மதத்தினராலும் புகழப்படும் என்பதில் ஐயமில்லை.



# 22. மாவலியை சிறை வைத்தது

அருணகிரியார், தமது திருப்புகழில், "எலுப்பு நாடி' எனத்துவங்கும் பாடலில், கடைசி அடியில்,

"மாவலியை சிறை வைத்தவன்" எனும் வார்த்தைகளோடு மாவலி சரிதத்தை அடக்கியுள்ளது இவரது புலமைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

**இதன் வரலாற்றை ஆராய்வோம் :**

திருமால் காசியபரிடத்து வாமனராய் அவதரித்து அசுர சக்ரவர்த்தி மாவலியிடம் மூன்றடி மண் யாசித்தார். இது விஷ்ணுவின் மாயை என்று அசுரப் புரோகிதன் சுக்கிராச்சாரி தடுத்தான் தடுத்தும் வாமனர் யாசித்தபடி மாவலி மூன்றடி மண் கொடுத்தான் என, வாமனர் ஈரடியால் மூவுலகளந்து ஓரடி வைக்க இடம் பெறாமலிருக்க, மாவலி தன் சிரத்தால் வணங்கி காட்டினான். திருமால் மூன்றாவது அடியால் மாவலியைப் பாதாளத்தில் அழுத்தி சிறையிட்டனர் என்பதாகும்.

"எலுப்பு நாடி" எனத் துவங்கும் பாடலில், 8-வது அடியில், மற்றுமோர் வரலாற்றினையும், குறித்து பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

உலக்கை ராவி நடுக்கடல் விட்டவன் - மருகோனே

எனப் பாடியதின் உட்கருத்தை ஆராய்வோம். யாதவர்கள் தங்களுள் சாம்பன் என்பவனுக்குக் கர்ப்பிணி வேஷம் போட்டு, இவனுக்கு பிறப்பது ஆணோ, பெண்ணோ என்று துர்வாசர் ரிஷியைக் கேட்க, துர்வாசர் உண்மையை

உணர்ந்து, வயிற்றில் பிறப்பது ஆணுமல்ல, பெண்ணுமல்ல, ஓர் இரும்பு உலகைகை பிறக்கும் அது உங்கள் குலத்தையே ஒழிக்கும் என உரைத்தார். அவ்வாறே சாம்பன் இரும்பு உலக்கையைப் பெற்றான். இதை அறிந்த கண்ணபிரான் அந்த உலக்கையைத் தூள்தூளாக நன்றாய் ராவி நடுக்கலில் போட்டு விடும்படி சொன்னார். யாதவர்களும் அவ்வாறே செய்தனர்.



திருமால் காசியபரிடத்து வாமனராய் அவதரித்து மாவலியிடம் மூன்றடி மண் யாசித்தார்.

# 23. வலை மகள் - வலை வீசிப்படலம்

வலை வீசிப் படலத்தைக் குறித்து, வலைமகள் எனும் ஒரு பதத்திலேயே அடக்கி பாடியுள்ளது முருகனின் அருள் பெற்றதினால், ஊற்றெடுத்து பாடிய பாடல்களாகும்.

அருணகிரியார், "முகத்தை மினுக்கிகள்" எனத் துவங்கும் திருப்புகழில், 5-வது அடியில் வரும் "வலைமகள்" எனும் வார்த்தையிலேயே, வலை வீசிப் படலத்தைக் குறித்துப் பாடியுள்ளது, இவரது கவித்திறனுக்கு ஒரு எடுத்துக்காட்டாகும்.

வலைமகள் எனும் பதத்தில் ஒரு வரலாற்றினைப் பொருத்தியுள்ளது மிகவும் ஆராய்ச்சிக்கு உரியதாகும்

**வரலாறறுச சிறபபு :**

சிவபிரான் மறைப் பெருளைத் தேவியர்க்கு உபதேசித்த பொழுது, தேவியார் கவனக் குறைவாய் இருக்க, சிவபிரான், "நீ பாராமுகமாய் இருக்கின்றாய்! மீன் பிடிக்கும் வலையருக்கு மகளாகுக' எனச் சபித்தார். தேவியார் அஞ்சி இரக்க, நீ வலைஞர் மகளாய் இருக்கும் பொழுது, நாம் வந்து உன்னை மணம் புரிவோம்" என்றனர். தேவி, பாண்டிய நாட்டில் கீழ்க்கடலோரத்தில் புன்னை மர நிழலில் ஒரு குழந்தையாய் கிடந்து அழும்போது, அவ்வழியே வந்த குழந்தையேயில்லாத வலைஞர் அரசன், அக்குழந்தையை ஆவலுடன் எடுத்து வளர்த்தான். தேவிக்கு உபதேசித்த போது சிவபிரானது உத்தரவு இன்றி, வினாயகரையும், முருகனையும் உள்ளே விட்ட

காரணத்தால், மீனாகச் சபிக்கப் பெற்ற நந்தி தேவர் கடலில் சுறா மீனாயினர். இந்த மீன், வலைஞர் அரசர் எவ்வளவோ முயன்றும், அவனது வலையில் அகப்படாது இடர் பல செய்து வந்தது. இம்மீனைப் பிடிப்பவர்களுக்கு என் மகளை மணம் செய்விப்பேன் என்று வலைஞர் சோமான் அறிவித்தான். சிவபிரான் ஒரு வலைஞனைப் போல் வேடம் பூண்டு வந்து அந்த மீனை ஒரே வீச்சில் தன் வலையில் சிக்க வைத்தார். வலைஞர் சோமான், அவனுக்கே தன் மகளை மணம் செய்து வைத்தான். திருமணக் கோலம் கொண்ட இறைவனும் இறைவியும் விண்ணில் மறைந்து, வலைஞர்கள் மகளுக்கு நற்கதி அளித்தனர். இதனை திருவிளையாடல் புராணத்தில் இவ்வரலாற்றினை விரிவாக காணலாம்.



# 24. முருகர் தாயிடம் பெற்ற சக்தியாகிய வேல்

அருணகிரியார், தெள்ளத் தெளிவாக சூரசம்ஹாரம் நிகழ்ந்த இடத்தை தமது பாடலில் பல இடங்களில் கூறியுள்ள போதிலும், திருச்செந்தூரில் சூரசம்ஹாரம் நிகழ்ந்ததாக ஒரு பாடலிலும் கூறப்படவில்லை. திரு முருகாற்றுப்படை பாடிய நக்கீரரும் திருச்செந்தூரில் போர் நிகழ்ந்ததாக பாடவில்லை.

எனினும், சூரனை சம்ஹாரம் செய்ய ஆயுதம் அவசியம் என்றுணர்ந்த, உமாதேவியாரே, வேலைக் கொடுத்து, "வாழி, வாழி" என வாழ்த்தியதைப் பற்றி பல குறிப்புகளால் அறிய முடிகிறது.

இதனைக் கருத்தில் கொண்டே, அருணகிரியாரும், 'கொம்பனையார்காது" எனும் துவங்கும் பாடலில் 6,7வது வரிகளில்,

*"பங்கமிலா நீலி மோடி பயங்கரீ, மகாகளியோகினி*
*பண்டு சுராபான சூரனொடு எதிர்போர்கண்டு*
*எம்புதல்வா வாழி வாழியெனும்படி வீறான வேல்தர"*

என்று முளானே மனோகர - வயலூரா - பாடியுள்ளார். இதன்கருத்து, குற்றமிலாத கருநிறத்தை யுடையவள், காடுகள் (துர்க்கை) பயத்தைத் தருபவள் (பயஹரி பயத்தை போக்குபவள்) மகாகாளி யோகினி, முன்பு மதுபானஞ்செய் திருந்த சூரனொடு எதிர்த்து (நீ) போர் செய்ய வேண்டியதைக் குறித்து,

எமது மகனே நீ வாழ்க வாழ்க என்று ஆசி கூறும் வகையில் வெற்றியைத் தரும் வேலாயுதத்தைத் தரப் பெற்ற என்றும் அழியாமூர்த்தியே! மனதுக்கு இன்பம் தருபவனே வயலூரா" என்பதாகும்.

சூரனை வதைக்க உமாதேவியார் முருகருக்கு வேல் தந்ததை

*"அழியாப் பேரளி உமைக்கணின்று*
*தற்பெயர் புணர்த்திக் கற்பினொடு கொடுத்த*
*அமையாவென்றி அரத்த நெடுவேலோய்"*

என கல்லாடத்தில் காணப்படுகிறது.



# 25. மாறியாடும் இறையவர்

அருணகிரியார், மதுரை சென்ற சமயம், நடராஜரைத் தரிசித்தார். அதனை, வெள்ளி அம்பலம் எனக் கூறக் கேட்டார். எங்குமில்லாத, நடராஜர் தனது வலது காலைத் தூக்கி ஆடும் நிலையைக் கண்டவர், தாம் பாடிய திருப்புகழில், "சீரான கோலகலாநவமணி" எனத்துவங்கும் பாடலில், 5-வது அடியில் நடராஜரது காட்சியினை வர்ணித்துப் பாடியுள்ளது மிகவும் அருமை.

<u>பாடலில் வரும் 5-வது அடி</u>

*"ஏராருமாடகூடமதுரையில்*
*மீதேறி மாறி யாடுமிறையவர்*
*ஏழேழு பேர்கள் கூறு வருபொருள - திகாரம்"*

என்பதாகும். இப்பாடலில் கால்மாறியாடின திருவிளையாடல்.

**பாடலின் கருத்து :** அழகு நிறைந்த மாட கூடங்கள் உள்ள மதுரை நகரில் (வெள்ளியம்பலத்தில் நடன மேடையின் மேல்) ஏறிக்கால் மாறியாடின இறைவராம் நடராச பெருமான்.

ராஜசேகரன் எனும் பாண்டியனுடைய சபைக்கு சென்று நாட்டிலிருந்து வந்த ஒரு புலவன் 'எங்கள் அரசன் கரிகாற் சோழன் (கரிகாற் பெருவளத்தான்) என்பவனுக்கு ஆடல்நூல் வரும். 'தங்களுக்கு வராது' என சுட்டிக் காட்ட, பாண்டியன் நாணமுற்றுத் தானும் அக்கலையைப் பயிலத் தொடங்கினான். அக்கலை உடலுக்கு மெத்த அயர்வு

தருவதைக் கண்டு, 'அந்தோ! வெள்ளியம்பலத்தில் திருநடனமாடும் இறைவன் எப்போதும் இடது திருவடியைத் தூக்கி கூத்தாடிக் கொண்டே இருக்கின்றாரே! அது அவருக்கு எவ்வளவு அயர்ச்சித் தரும் என எண்ணி, கூத்தபிரானது முன்னிலையில் நின்று, 'பெருமானே! தூக்கிய இடது திருவடியை நிலமீது ஊன்றி, உமது வலது காலை எடுத்து வீசி ஆட வேண்டும்; இல்லையேல் அடியேன் உயிரை விடுவேன்" என உளம் நெகிழ்ந்து உரைக்க, கூத்தபிரான் அவனது வேண்டு கோளின்படி, மனமிரங்கி அங்ஙனமே கால் மாறி ஆடினார்.

இவ்வளவு வரலாற்று செய்திகளை, "மதுரையில் மாறியாடு இறையவர்" எனும் வார்த்தையிலே பொருத்தி பாடியுள்ளது, இவரது கவித்திறமன்றி, பக்தியும் சேர்ந்து.



## 26. ஆழியால் பானுவை மறைத்தது

அருணகிரியார், தாம் பாடிய திருப்புகழ், "சீரான கோலசால" எனத் துவங்கும் பாடலில், சக்கரத்தால் சூரியனை மறையச் செய்ததுப் பற்றி, 7-வது அடியில் கீழ்வருமாறு பாடியுள்ளார்

*"கூராழியால் முன்வீயநினைபவ*
*னீடேறு மாறு பாநுமறைவு செய்*
*கோபாலராயன்"*

என்று பாடலில் வருகிறது. மேலே குறிக்கப்பட்ட பாடல் அடியின் கருத்தைப் பார்ப்போம்.

ஆழியால் பானுவை மறைத்து அர்ச்சுனனைக் காத்த வரலாறு. பாரத யுத்தத்தில் 13-ம் நாள் போரில் சயத்திரதன் அர்ஜுனனின் மகன் அபிமன்யுவைக் கொன்றான். இதை அறிந்த அர்ஜுனன் "நாளைக்கு சூரியன் மறைவதற்குள் நான் சயத்திரதனை கொல்லாவிட்டால், தீயில் குதித்து இறப்பேன்" என சபதமிட்டான். இதனை அறிந்த துரியோதனாதியர், சயத்திரனை பகல் முழுதும் வெளியே விடாது காத்தனர். சூரியன் மறையும் முன்பாக கண்ணபிரான் தமது சக்கரத்தை விட்டு சூரியனை மறைத்தார். அஸ்தமித்து விட்டது என நினைத்து சயத்தரதன் வெளியே வந்து.நின்ற போது, கண்ணபிரான் அவனை அர்ஜுனனுக்குக் காட்டிக் கொடுக்க, அர்ஜுனன் பாசுபதாஸ்திரத்தை ஏவி, சயத்திரதனைக் கொன்றான்.

உடனே சக்கரத்தை ஏவி கண்ணன் திருப்பி வர வழைத்ததும் சூரியன் பிரகாசித்தான். இதைக் கண்ட துரியோதனாதியர் ஏமாந்து போய் விட்டோமே என வெட்கி தலை குனிந்தனர்.

இவ்வரலாற்றினையே அருணகிரியார் மேலே குறிப்பிட்ட பாடலில் மூன்று அடிகளிலேயே சுருங்கச் சொல்லியுள்ளது, இவரது புலமை வெளிப்படுகிறது.

# 27. காகாசுரன் வரலாறு

அருணகிரியார், தமது பாடல்கள் பலவற்றுள் ஒரே அடியில், வரலாற்றின் தலைப்பில் கூறி, விரிவை அடியார்கள் புரிந்து கொள்ளும் திறனுக்கு வழிவகுத்தவர் என்றால் மிகையாகாது.

"பாதிமதிநதிபோது மணிசடை" எனத் துவங்கும் திருப்புகழில், 3-வது அடியில் சுருங்கச் சொல்லி விளக்க மளித்ததை ஆராய்வோம்.

*"ஒரு விழி காகமுற அருள்*
*மாயனரி திரு - மருகோனே"*

என்பதின் வரலாறு ஆராய்வோம்.

சீதையின் ஆகத்தை (மார்பு) தன் உகிரினாற் கொத்தின காகத்தின் மீது புல்லையே படையாக்கி ஸ்ரீராமர் செலுத்த, அப்படைக்கு அஞ்சி அக்காகம் எங்கு காப்பாற்றுவாரின்றி, ஸ்ரீ ராமனையே சரணடைய அவர் அக்காகத்துக்கு உயிர்ப்பிச்சை யளித்தார். கண்களுக்கே ஊனம் வருக எனவுரைத்துக் காக்கையின் ஒரு கண் போய், இரு கண்ணிற்கும் ஒரு கண்மணிகளே பொருந்த அருளினார்.

இங்ஙனம் காக்கை உருக் கொண்டு காகாசுரனாக வந்தது இந்திரகுமாரன் சயந்தன் என்பர். "காகத் திருக்கண்ணிற்கொன்றே மணிதலந்தாங்கு" திருக் கோவையார் கூறுகின்றது.

சரணஞ்சரண் என்று அவன் அஞ்சி வணங்கிட வள்ளல் மகிழ்ந்தே வெய்யவன் கண் இரண்டொடு போகென விட்ட தெய்வவெம்படை,

*"வேகம் விண்டு சயந்தன வணங்கி விசும்பித போக"*

கம்பராமாயணம் சூடாமணிப்படலம் 77-82.

# 28. கண்ணனது புல்லாங்குழல் இசையில் மயங்கியவைகள்

அருணகிரியார், தமது பாடல்களில் நாராயணனைப் பற்றி பெரிதும் பாடியுள்ளார். கண்ணன் புல்லாங்குழல் கொண்டு வாசித்ததும், என்னென்ன விநோதங்கள் நிகழ்ந்ததைக் குறித்து ஒரு பட்டியலே கொடுத்து பாடியுள்ளதை, ஏனையோர்களால் சைவ நூல்களில் புகழ்ந்து பாடியுள்ளதாக தெரியவில்லை

'களபம ஒழுகிய புளகிய' எனத் துவங்கும் திருப்புகழில், பின்பகுதி 5,6,7 வரிகளில் பாடியுள்ளதைப் பார்க்கலாம்.

*"அலையில் உறைபுலிபெறுமகவயில்தரு*
*பசுவின் நிரைமுலை யமுதுண நிரை மகள்*
*வசவனொடு புலி முலையுணமலையுடன்-உருகாநீள்*
*உடவிதனிறுள் உலவைகள் தளிர்விட*
*மருளமதமொடு களிறுகள் பிடியுடன்*
*அகல வெளியுயர் பறவைகள் நிலம் வர விரல்சேரழே*
*தொளைகள் விடுகழைவிரல்முறை தடவிய*
*இசைகள் பலபல தொனிதரு கருமுகில்*
*சுருதியுடையவர் நெடியவன் மனமகிழ் - மருகோனே"*

**இதன் கருத்து :** மலைக்குகையில் இருக்கின்ற புலி பெற்ற குட்டி குடிப்பதற்குப் பசுங்கூட்டங்களின் முலைப்பால் அமுதை உண்ணவும், பசுவின் (பெண்) கன்று ஆண் கன்றுடன் புலியின் முலைப்பாலை உண்ணவும், மலை

அப்படியே உருகவும், நீண்ட காட்டில் உள்ள மரங்கள் தளிர் விடவும், மயல் கொண்ட மதங் கொண்ட ஆண் யானைகள் பெண் யானையோடு (ஒருபுறம்) செல்ல, ஆகாயத்தில் உயரத்திலுள்ள பறவைகள் நிலத்திற்கு வரவும் (தனது) விரல்கள் தடவினதால் (எழுகின்ற) இசைகளால் பலபல நாதங்களை எழுப்பும் கரிய மேகம் போன்றவனும் (கண்ணபிரானும்) வேதப் பொருளோன் நெடியவன் மனம் மகிழும் - மருகோனே" என்பதாகும். குழலிசையினால், மாறான வகை இணங்க பாகுபாடின்றி, அனுபவித்ததை அருணகிரியாரின் உள்ளக் கிடக்கை அறிய முடிகிறது.



# 29. சக்கரத்தை திருமால் பெற்ற வரலாறு

அருணகிரியார், தனது இதயத்தெய்வமாக முருகனைமய தொழுது வணங்கின போதிலும், அன்னாரின் மாமனாரையும் புகழ்ந்து பாடத் தவறியதில்லை.

"படர்புவியின் மீது" எனத்துவங்கும் திருப்புகழில் 6,7-வது அடிகளில் பின்வருமாறு பாடியுள்ளதைப் பார்க்கலாம்.

*"அவனிவெகுகாலமாய் வணங்கியு*
*றாருகி வெகுபாசகோச சம்ப்ரம*
*அதிபெலகடோரமாசலந்தரனொந்து வீழ*
*உடல்தடியும் ஆழிதரவென மடிய*
*மலர்கள் தசநூறு தாளிடும்பக*
*லொருமலரிலாது கோவணிந்திடு - செங்கணமாலுக்*
*குதவிய மகேசர்பால" - என்பதாகும்.*

**இதன் கருத்து** : பூமியில் வெகுகாலம் (தவம்செய்து) வணங்கி உள்ளம் உருகி, கொடிய பாசக்கயிறு முதலிய ஆயுதத் தொகுதிகள், டாம்பிகம், மிக்க பலம், கொடுமை இவையெல்லாம் உள்ள (அந்த) மகாசலந்தராசுரன் வருந்தி வீழ (அவனது) உடலைத் தறித்த (அந்த) சக்கரத்தைத் தந்தருள் என்று தாமரை மலர்கள் பத்து நூறு ஆயிரம் கொண்டு (சிவனது) தாளிற் பூசித்து வரும் நாட்களில் (ஒருநாள்) ஒரு மலரது குறைய (அதற்கு ஈடாகத்) தன் கண்ணையே அணிந்திட்ட செங்கண் மாலுக்கு,

சக்கரத்தைத் தந்தருளிய மகாதேவருடைய குழந்தையே திருமால் ஆதிய தேவர்களை வென்றபின்,

சலந்தராசுரன் சிவனோடு போர் செய்ய கயிலைக்குப் போன போது, சிவன் ஒரு வேதியர் போல எதிர் வந்து, காலால் ஒரு சக்கரத்தை கீறி அமைத்து, இதை நீ எடு, பின்பு கயிலைக்குப் போகலாம் என, சலந்தராசுரன் அதை எடுக்க, அச் சக்கரத்தால் அவன் கழுத்து அறுபட்டு மாய்ந்தான். சலந்தராசுரனைத் தடிந்தச் சக்கரத்தைப் பெற வேண்டித் திருமால் சிவபெருமானைத் நிதமும் ஆயிரம் பூக்கொண்டு, திருவீழிமிழலை எனும்தலத்தில் வழிபட்ட போது, ஒருநாள் ஒரு மலர் குறைபடவே, தமது கண்ணையே இடந்து சாத்தி அச்சக்கரத்தைத் திருமால் பெற்ற வரலாறு தான் மேலே பாடலில் குறிக்கப்பட்டுள்ளது. இதனைக் குறித்து,

> *"சலந்தரன் உடலம் தடிந்த சக்கரமெனக் கருளென்று*
> *அன்று அரி வழிபடிழிச்சிய விமானத்திறைவன்*
> *பிறையணி சடையன்"*

(சம்பந்தர் தேவாரம் III-119-7) பாடல்அறிவிக்கிறது. மேலும்,

> *"நீற்றினை நிறையப் பூசி நித்தல் ஆயிரம்பூக்கொண்டு*
> *ஏற்றுழி யொருநாளொன்று குறையக் கண்ணிறையவிட்ட*
> *ஆற்றலுக்காழி நல்கியவன் கொணர்ந்திழிச்சுங்கோயில்*
> *வீற்றிருந்தளிப்பர் வீழிமிழலையுள் விகிர்தனாரே"*

என அப்பர் தேவாரம் (111-64-8) புகல்கின்றது.

# 30. சேரமான் பெருமான் வரலாறு

திருப்புகழ் - இன்றைய நாளில் அச்சிட்டு வழங்கப் பட்ட பாடல்கள் 1304. இப்பாடல்கள் வெளிவர உதவியவர் திரு. வ.த. சுப்ரமணியப் பிள்ளையே யாவார்.

சம்பந்தர், சுந்தரர், மாணிக்க வாசகர் பற்றிய பாடல்கள் இருப்பினும், நாவுக்கரசரைப் பற்றி ஒருபாடல் கூட கிடைத்த பாடல்களில் எங்கும் குறிப்புகள் காணவில்லை. ஒரே ஒரு இடத்தில், திலகவதியாரை மட்டும் குறிக்கப் பட்டுள்ளது.

அருணகிரியார், திருப்புகழில்

*"நாதவிந்து கலாதிநமோ நம*
*வேதமந்திர சொரூபா நமோ நம*
*ஞானபண்டித சுவாமி நமோ நம"*

எனும் பாடலில், சுந்தரரோடு சேரமான் பெருமானையும் இணைத்து பாடியுள்ளது கவனிக்கத்தக்கது. அப்பாடலில் 7,8-வது அடியில் பாடியுள்ளதை கீழே கொடுக்கப் பட்டுள்ளது.

*"ஆதரம்பயில் ஆரூர் தோழமை*
*சேர்தல் கொண்டவரோடே முனாளினில்*
*ஆடல் வெம்பரி மீதேறி மாகயிலைலேகி*
*ஆதியந்த வுலாவாசுபாடிய*
*சேரர் கொங்கு வைகாவூர் நந்நாடதில்*
*ஆவினன் குடிவாழ்வானதேவர்கள் - பெருமாளே"*

என்பதாகும். இப்பாடலில் குறிக்கப்பட்டுள்ள சுமார் 1200 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த சுந்தரமூர்த்தி பெருமானுக்கு உகந்த நண்பர், சேரமான் பெருமான் எனும் சேர நாட்டு அரசர், குடிமக்கள் கழறுவன (சொல்வன) எல்லாம் தாம் இருந்த இடத்தே தமக்குத் தெரியும் படியான வரத்தைப் பெற்றிருந்ததால், இவரை "கழற்றறிவார் நாயனார்" என சேரமானை அழைக்கலாயினர்.

இறைவனால் அனுப்பப்பட்ட வெள்ளை யானையின் மீது சுந்தரர் கயிலைக்குச் சென்ற பொழுது, தமது நண்பரான சேரமானை நினைத்தார். இதை அறிந்த சேரமான் உடனே ஒரு குதிரையின் மீதேறி, போகும் வழியில் சுந்தரரை வலம் வந்து சுந்தரருக்கு முன்பே கயிலையை அடைந்தார். இறைவனது ஆணையின்றி சென்ற படியால், கயிலை வாயிலில் தடைப்பட்டு, நிற்க வேண்டி வந்தது. அந்த நேரத்தை வீணாக்காது "திருக்கயிலாய ஞான உலா" எனும் பிரபந்தத்தை ஆசு கவியாகப் பாடி, சுந்தரர் வந்தபின், அவர் உதவியால் இறைவனைத் தரிசித்து, அங்கேயே அந்த உலாவை அரங்கேற்றினார். தமிழ் மொழியில் உள்ள உலாக்களில் இதுவே காலத்தில் முந்தியதால் "ஆதி உலா" எனவும் கயிலையில் பாடியதாலும், கயிலை வள்ளலின் உலாவை கூறின படியாலும், "கயிலாய ஞான உலா" என இவ்வுலா பெயர் பெறும்.



# 31. பரத்தையரைக்கு அறிவுரைகள் (ஆலங்காட்டு வரலாறு)

*"உருக்கம் பேசிய நீலிகள்*
*காசுகள் பறிக்கும் தோஷிகள்*
*மோகவிசாரிகள், உருட்டுப் பார்வையர்"*

என்பதில் உருக்கம் பேசிய நீலிகள் எனத் துவங்கும் திருப்புகழில், நீலிகள் - உருக்கம் உள்ளவர் போல் நடிப்பவர்கள். இன்றும் வழக்கில், சில பெண்களை, நீலி போல் அழுகிறாள் என்றும் சுட்டுவர். இதனைக் குறித்து ஒரு வரலாறு உண்டு.

நீலி எனக் குறிப்பிட்டு திருவாலங்காட்டில் நிகழ்ந்தச் செய்தியொன்று இதனை உறுதிபடுத்தியுள்ளதை பார்ப் போம். நீலி - திருவாலங்காட்டுப் பெண் பேய் நீலியின் வரலாறு.

தன் மனைவியின் நடத்தையில் சந்தேகங் கொண்ட ஒரு பிராமணன், அவளைக் கொன்றே விடுகிறான். மறுபிறவியில் ஒரு செட்டிக்கு மகனாகப் பிறந்தான். தன் குலத்தைச் சேர்ந்த ஒரு நங்கையை மணந்து கொண்டான். அவள் கர்ப்பம் தரித்து இருந்ததால், தாய் வீட்டிற்கு சென்றிருந்தாள். கணவன் அவளை அழைத்துப் போக வந்தான். பிரசவமான பின்பு அவளை அவனோடு அனுப்புவதாக மாமனார் கூறினார். இதனை சம்மதித்து தன் ஊருக்குத் திரும்பினான்.

வருகிற வழியில், போனப் பிறவியில் கொலையுண்ட மனைவியின் ஆவியாகிய பிரம்மஹத்தி, செட்டியின் மனைவி போல உருவெடுத்து, எதிர்பட்டு, 'உங்களை விட்டுப் பிரிய மனம் வராது, நானும் உங்கள் பின்னால் வந்து விட்டேன் எனச் சொன்னதும், இதில் ஏதோ சூழ்ச்சி அல்லது மாயம் எனக்கருதி, நீ என் மனைவியல்ல, என் மனைவி தாய் வீட்டில் இருக்கிறாள் எனக் கூறியதன் மூலம் தர்க்கம் வரச் செட்டி அடுத்திருந்த திருவாலங்காட்டுப் பழையனூர் வேளாளர்கள் முன்பு முறையிட, செட்டியின் மகள் போல வந்த பிரம்மஹத்தி நான் இவர் மனைவி தான் இப்பொழுது கருத்தரித்துள்ளேன் இன்று ஒரு இரவு மாத்திரம் இவருடன் ஒரு அறையில் படுக்க உத்தரவு இடுங்கள் என்றது. வேளாளர்கள், செட்டியை நோக்கி, நீ இவளுடன் படுத்துக் கொள். உனக்கு தீங்கு நேரிடினும், நாங்கள் எழுபது பேரும் எங்களது உயிரைக் கொடுக்கிறோம் எனக் கூறி, தைரியமாக அவனை அவளுடன் படுக்கச் செய்தனர்.

பொழுது விடிந்ததும், அவளைக் காணவில்லை. செட்டியே கொலை செய்யப்பட்டு கிடந்தான். இதனைக் கண்ட எழுபது பேரும், தாங்கள் வாக்கு கொடுத்தவாறே தத்தம் உயிரை விட்டனர். இந்த கதை மூலமாகத் தான் பெண்கள் சிலரை நீலிவேஷம் போடுகின்றாய்?

திருவாலங்காட்டு நீலி அழுகை ஏன் அழுகிறாய் எனும் பழமொழிகள் வழங்கலாயின. இதனைக் குறித்து, சம்பந்தப் பெருமான், திருவாலங்காட்டு தேவாரத்தில்:

*"வஞ்சப்படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்*
*டஞ்சம் பழையனூர் ஆலங்காட்டு அடிகளே"*

என இச் சரித்தரத்தைக் குறித்து பாடியதை, பின்னர் தோன்றிய அருணகிரியார், எடுத்த எடுப்பிலேயே, உருக்கம் பேசிய நீலியர் ஒருபதத்திலேயே கோடிட்டு காட்டியுள்ளது, இவருக்கே கை வந்த கலை எனலாம்.

இன்றளவும் பழையனூர் எனும் கிராமம், இதனை உறுதிப்படுத்தும் விதத்தில், யாவரும் ஏற்கும் விதத்தில் அவ்வூர் மக்கள் கூறுவதைக் காணலாம்.



# 32. ஐயாறப்பன்

இது டெலிவிஷன் காலம் மனிதனின் வளர்ச்சியின் காரணமாக மனிதனோடு மனிதன் எவ்வளவு தொலை தூரத்தில் இருந்தாலும் தொடர்பு கொள்வதற்கு இன்றைய விஞ்ஞானம் சாதிக்க கொடுத்தவை எத்தனை எத்தனையோ! முதன் முதலில் சங்கேத ஒலி மூலம் ஓர் இடத்திலிருந்து ஓர் இடத்திற்கு செய்திகளை அனுப்ப மனிதன் கற்றுக் கொண்டிருக்கிறான். அதன்பின் மனிதனுக்கு மனிதன் நேரில் பேசுவது போல் தொலை தூரத்தில் இருவரும் பேசிக் கொள்ள வசதி செய்துள்ளான். பின்னர் ஓர் இடத்தில் எழுகின்ற ஒலியைப் பல இடத்தும் கேட்க ஏற்பாடு அதன் மூலம் எல்லாம் இன்னிசையைத் தினசரி செய்திகளைப் பரப்பத் தெரிந்து கொண்டான். எல்லாவற்றுக்கும் மகுடம் வைத்தாற் போல், ஓர் இடத்தில் நடக்கும் காட்சியையே தொலைவில் உள்ளோர் உடனடியாகக் காணுமாறு மின் காந்த அலைகள் மூலம் அனுப்பக் கற்றுக் கொண்டிருக்கிறான். இதனையே இன்று “டெலிவிஷன்” தொலைக் காட்சி காணுதல் என சொல்கிறோம் நாம். இந்தத் தொலைக் காட்சியை காண இன்றைய விஞ்ஞானிகள் நமக்குத்துணை புரிகிறார்கள். இந்த விஞ்ஞானிகளுக்கு எல்லாம் மேலான விஞ்ஞானி, ஆம், ‘டெலிவிஷன் எக்ஸ்பர்ட்’ ஆக ஒருவன் அன்றோ இருந்திருக்கிறான் நம்மிடையே அவன் யார்? அவன் காட்டிய டெலிவிஷன் காட்சி என்னவென்று தெரிய வேண்டாமா?

அதற்குச் சமய குரவர்களில் ஒருவரான அப்பர் வரலாற்றைப் படிக்க வேணும், வரலாற்றைப் பார்ப்போம்.

நாவுக்கரசர், பல தலங்களுக்குச் சென்று விட்டு காளத்தி வந்து சேர்கிறார். அவருக்கு ஒரு ஆசை பிறக்கிறது. தென் கயிலையாம் காளத்தியிலிருந்து வடகயிலைக்குச் சென்று, அங்கு இறைவனை நேருக்கு நேர் கண்டு வணங்க வேண்டும் என்று. அதே நினைப்பிலேயே தளர்ந்த அந்த வயதில் தன் யாத்திரையைத் தொடங்கியிருக்கிறார். வாரணாசிவரை வந்தவர்கள் தன்னுடன் வர அதற்குமேல் தொடர முடியவில்லை. அங்கிருந்து கைகால் தளர்ந் தாலும், மார்பினால் புரண்டுப்புரண்டாவது போய் விட எண்ணம் கொண்டே, தொடர்ந்தார் பயணத்தை. நடுவழியில், இறைவனே ஒரு முனிவர் வடிவத்தில் தோன்றி, கயிலையை மானிடம் இந்த ஊனக் கண்ணால் காணுதல் இயலாது அப்பனே! ஆதலால் திரும்பிவிடுவதே சிறப்பு என்றார். அப்பரோ "ஆளும் நாயகன் கயிலையில் இருக்கைக் கண்டு அல்லால், மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்" என்றார். உடனே இறைவன் இரங்கி அங்குள்ள பொய்கை ஒன்றில் மூழ்கும்படி சொல்கிறார். மூழ்கியவர் பின் எழுந்தது திருவையாற்றிலுள்ள திருக்குளத்திலேதான். எழுந்தவர் கண்முன் எழுகிறது கயிலை. அங்கு அவர் கண்ட உயிர்கள் எல்லாம் சக்தி சிவமாகவே விளங்குகின்றன.

*"மாதர் பிறைக்கண்ணியானை, மலையான் மகளொடும்பாடி*
*போதொடு நீர்சுமந்தேத்தி புகுவார் அவர் பின் புகுவேன்*
*யாதும் சுவடுபடாமல் ஐயாறு அடைகின்ற போது*
*காதல் மடப்பிடியோடும் களிறுவருவன கண்டேன்*
*கண்டேன் அவர் திருப்பாதம், கண்டறியாதன கண்டேன்"*

என அவர் கண்ட கயிலாய தரிசனத்தைத் தான் எவ்வளவு எக்களிப்போடு பாடுகிறார்.

இப்படித் தூரத்தொலைவிலுள்ள கயிலையை ஐயாற்றில் அப்பருக்குக் காட்டிய பெருமான் 'டெலிவிஷன் எக்ஸ்பர்ட்' அல்லவா. காட்சியைக் காட்டியதோடு நிற்கவில்லை. காசிப்பக்கம் பொய்கையில் மூழ்கியவரை காவிரிக்கரையில் அல்லவா எழச் செய்திருக்கிறார். இத்தகு வித்தக விளையாட்டை எவ்வாறு கருதுவது.

இத்தலம் திருவையாறு என அழைக்கப்படுவானேன் என அங்குள்ளோரை கேட்டால், தஞ்சையிலிருந்து திருவையாறு வரும்போது, வடலாறு, வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, காவேரி எனும் 5 நதிகளைக் கடக்கிறீர்களே அதனால் தான் ஐயாறு என்கிறோம் நாங்கள் என்றனர்.

சரி, கும்பகோணத்திலிருந்து வரும்போது ஓர் ஆற்றையுமே கடக்கவில்லையே என்றால், பதில் சொல்லத் தெரியவில்லை அவர்களுக்கு. உண்மையில் ஐயாறு என்றால், அழகிய ஆறாகிய காவிரி அக்கரையில் உள்ள அழகிய ஊர் என்று தான் பொருள்.

"செண்டாடுபுனற்கன்னி, செழுமணிகள், வந் தலைக்கும் திருவையாறு" என்று தானே சம்பந்தர் பாடியுள்ளார். அந்த ஐயாறை 5 ஆறுகளாக்கி அங்குள்ள இறைவனையும் பஞ்சநத ஈசுவரர் ஆக்கி, அங்குள்ள தீர்த்தமும் 5 என கணக்குக் காட்டி மகிழ்கிறார்கள் மக்கள்.

இவர்களோடு எல்லாம் விவாதிக்க வேண்டி யதில்லை. இத் தலத்துக்கு மூவரும் வந்துள்ளனர். இந்த

ஐயாறப்பன், நல்ல சைவன். இவனையே மணிவாசகர், "ஐயாறதனில் சைவனாயினான்" என்கிறார்.

**இதன் வரலாறு** : கோயில் பூஜை செய்துவரும் 24 ஆதி சைவரில், ஒருவர் காசிக்கு செல்கிறார். நெடுநாளாக திரும்பாதலால், அவருடைய உரிமை, காணி முதலியவற்றை தயாதிகள்கவர்ந்து கொள்கின்றனர். அதுசமயம் இறைவனே அந்த ஆதி சைவர் வடிவில் வந்து தன் உரிமைகளை நிலை நாட்டுகிறான். இந்த சமயத்தில் காசி சென்ற சைவரும் திரும்புகிறார். இந்த இருவரில் எவர் உண்மையான ஆதி சைவர் என்று அறிய முடியவில்லை. வழக்கு நடக்கிறது. உண்மையான அந்தணரே வெற்றி பெறுகிறார் ஆதி சைவராக வந்த இறைவன் தம் உண்மை வடிவைக் காட்டி மறைகிறார். இந்த வரலாற்றை நினைத்தே ஐயாறதினில், இறைவன் சைவனாகிய பண்பைப் பாடிப் பரவுகிறார் மணிவாசகர். இத்தலத்தில் வழிபட்டு, அகத்தியர் தாம் விரும்பியபடி குறுகிய வடிவை பெற்றிருக்கிறார்.



# 33. அம்பர் மாகாளம்

ரஷ்ய நாட்டிலே ஒரு சிறு கிராமம், அங்கு மார்ட்டின் என்று தோல் வேலை செய்பவன் ஒருவன்; வயது முதிர்ந்த கிழவன் அவன். மனைவி மக்கள் எல்லாம் இழந்து தளர்ந்தவன், என்றாலும் இறை அருளிலே நல்ல அழுத்தமான பக்தி கொண்டவன். தன்னைத் தேடி வருபவர்களுக்கு எல்லாம் உண்டி, உறைவிடம், உணவு எல்லாம் கொடுத்து ஆதரிக்கத் தவறாதவன். அவனுக்கு ஒரு ஆசை, தன்னை படைத்துக் காக்கும் இறைவனைக் காண வேண்டுமென்று, தான் வணங்கும் இறைவனிடம் பல தடவை இப்பிரார்த்தனை செய்து கொள்கிறான். ஒருநாள் இரவில் கனவில் இறைவன், 'மார்ட்டின்! மார்ட்டின்! நாளை உனைக் காண வருகிறேன்' என்கிறார் மார்ட்டினுக்கோ ஒரே மகிழ்ச்சி. வரும் இறைவனை வரவேற்கத் தக்க முஸ்தீபுகளோடு இருக்கிறான். பகல் பொழுது கழிகிறது; இரவிலுமே பத்து மணி ஆகி விடுகிறது; இறைவன் வரக் காணோம். உள்ளம் தளர்கிறது; இறைவன் நம்மை ஏமாற்றி விட்டாரோ என்று நினைக்கிறான். இப்படி இவன் குறைப்பட்டுக் கொண்டிருக்கும்போது வானில் ஒரு அசரீரி கேட்கிறது. "மார்ட்டின் உன் விருப்பம் பூர்த்தியாயிற் றல்லவா?" என்று 'என்ன சுவாமி? சொல்லிய படி வராமல் என்னை ஏமாற்றிவிட்டு, இப்படிக் கேட்கிறீரே' என்று அங்கலாய்க்கிறான். அதற்கு இறைவன் சொன்ன பதில் இதுதான். "அன்பனே! இன்று காலை ஒரு வயோதிக சிப்பாய் வந்தானே அவனை அன்போடு வரவேற்று அவனுக்கு ரொட்டியும், டீயும் கொடுத்தாயே, அவன்

யாரென்று நினைக்கிறாய்? நடுப்பகலில் கைக் குழந்தையுடன் ஏழைப் பெண்ணொருத்தி வந்தாளே அவளுக்கு உணவு அளித்துக் குழந்தைக்குப் பால் கொடுத்து குளிருக்குப் போர்வையும் கொடுத்தாயே அந்தப் பெண் யாரென்று நினைத்தாய்? மாலையில் கூடையில் பழம் விற்றுக் கொண்டிருந்த கிழவியிடம் பழம் திருடி உதை பட இருந்த சிறுவனுக்குத் துணை நின்று அவனைத் திருத்தி வீட்டுக்கு அன்போடு அனுப்பி வைத்தாயே? அந்தப் பையன் யாரென்று நினைக்கிறாய்? வயது முதிர்ந்த சிப்பாயாக, ஏழைப் பெண்ணாக, திருந்தாத பையனாக வந்தவன் நானேதான். என்னை நீ கண்டு கொள்ள வில்லையா?" என்கிறார். மார்ட்டின் உணர்கிறான், கருணை நிறைந்த இறைவன் என்ன என்ன வேடங்களில் வந்து தன்னை ஆட் கொண்டிருக்கிறான் என்று நினைந்து நினைந்து மகிழ்ச்சியில் ஆழ்ந்து விடுகிறான்.

இப்படி ஒரு கதை. டால்ஸ்டாய் என்ற அறிஞர் 1885-ஆம் ஆண்டிலே எழுதியிருக்கிறார். இந்த கதை எழுது வதற்கு எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னாலே சோமாசி மாறநாயனார் விரும்பியபடி, அவர் நடத்திய சோம யாகத்துக்கு இறைவனே நேரில் எழுந்தருளியிருக்கிறார். ஆனால் வந்த திருக்கோலமோ பறையன் உருவில் பக்தர்களை ஆட் கொள்ள இறைவன் எந்தெந்த வடிவில் வருவான் என்பதை யாரால் சொல்லக் கூடும்? அப்படி சோமாசி மாறநாயனாரது வேள்விக்கு அவன் எழுந்த ருளினான் என்ற முழு விபரமும் தெரிந்து கொள்ள நாம் அம்பர் மாகாளம் என்னும் கோயிலுக்கு போக வேணும்.

அம்பர் பெருந்திருக்கோயில்,கோயில் திரு மாகாளம் என்று இரண்டு கோயில்கள் அடுத்தடுத்து இருக்கின்றன.

தஞ்சை மாவட்டத்திலேயே மாயூரம், திருவாரூர் ரயில்வே லைனிலே பேரளம் எனும் ஜங்ஷனில் இறங்கி தென் கிழக்காக நாலு மைல் நடந்தோ வண்டியிலோ ஏறிச் சென்றால் திருமாகாளம் என்னும் அம்பர் மாகாளம் போய்ச் சேரலாம். இன்னும் கொஞ்சம் ஆறு பர்லாங் நடந்து சென்றால் அம்பர் பெருந்திருக்கோயிலுக்குப் போகலாம். செல்கிறவர்கள் அவசரப்படாமல், சாவதானமாக இரண்டு கோயில்களையும் பார்த்து விட்டுத்தான் திரும்ப வேணும். ஒன்றைப் பார்த்து ஒன்றைப் பார்க்கத் தவறி விடுதல் கூடாது. இக்கோயில்களுக்குச் செல்லுமுன் சோமாசி மாறநாயனார் சரிதத்தையும் கொஞ்சம் தெரிந்து கொள்ள வேணும்.

அம்பர் என்ற திருத்தலத்திலே சோமாசிமாறர் என்ற அந்தணர் பிறந்து வளர்ந்து நல்ல சிவநேசச் செல்வராக வாழ்ந்து வருகிறார். பிரணவ மந்திரம் ஓதி, ஓதி உயர்கிறார். அவர் திருவாரூர் சென்று தியாகேசனை வணங்கிய பொழுது, அங்கு வன்தொண்டராம் சுந்தரருடன் இறைவன் தோழமை கொண்டு அவர் இட்ட ஏவலைச் செய்கிறார் என்பதையெல்லாம் கேட்டு அறிகிறார். இவருக்கும் ஒரு ஆசை பிறக்கிறது, 'நமக்கு இந்த இறைவன் அப்படி ஒன்றும் பெரிய தொண்டுகள் செய்ய வேண்டாம், நாம் செய்யும் யாகத்திற்கு நேரில் எழுந்தருளி அவிர்ப்பாகம் பெற்றுக் கொண்டால் போதும்' என்று நினைக்கிறார். இந்த ஆசையைச் சுந்தரரிடம் விண்ணப்பித்து முடித்துக் கொள்ள நினைக்கிறார். அதற்காகப் பரவையாரிடம் 'சிபாரிசு' பண்ணச் சொல்கிறார். அந்த அம்மையும் சுந்தரரிடம், சோமாசி மாறநாயனாரது விருப்பத்தை நிறைவேற்றி வைக்க வேண்டுகிறாள். ஆம்! உத்தரவு 'ஹோம் கவர்ன்மென்டி'லிருந்தல்லவா பிறந்திருக்கிறது; சுந்தரர்

ஒப்புக் கொண்டு விட்டார் என்றால் இறைவனும் சரி என்று சொல்வதைத் தவிர வேறு ஏதாவது ஆட்ஷேபணை கிளம்பக் கூடுமா? சுந்தரரிடம், 'சரி வருகிறேன் உன் நண்பனை மிக்க கவனத்துடன் யாகத்தை நடத்தச் சொல்லு' என்று சொல்லி விடுகிறார். யாகம் நடக்கிறது விமரிசையாக தியாகேசர் சொன்ன சொல்லைக் காப்பாற்ற வேள்விக் கூடத்துக்கு வருகிறார். நான்கு வேதங்களையும் நான்கு நாய்களாக்கிப் பிடித்துக் கொள்கிறார். தம்பட்டம், மதுக்குடம், மாட்டு இறைச்சி எல்லாவற்றையும் சுமந்து கொண்டு வந்து சேர்கிறார். யாகத்தை நடத்திக் கொண்டிருந்த பிராமணர்களோ, "அடே! சண்டாளனான பறையன் இங்கு வரலாமா? போ, ஒதுங்கிப் போ" என்று விரட்டுகிறார்கள் பறையன் வந்ததால் யாகமே கெட்டு போய் விட்டது என்று சொல்லி ஓடிப் போய் விடுகிறார்கள். ஆனால் சோமாசி மாறருக்கு மட்டும் விஷயம் விளங்குகிறது. தம் மனைவியுடன் வந்த பறைத் தம்பதிகளை எதிர் கொண்டழைத்து உபசரித்து அவரிப் பாகம் கொடுக்கிறார். உடனே இறைவன் தாம் எடுத்து வந்த பறை உருவைக் களைந்து ரிஷபாரூடராய்க் காட்சி கொடுத்து மறைகிறார். தம்மை வெறுத்து ஒதுக்கிய பிராமணர்களைச் சண்டாளர்களாப் போகும்படி சபிக்கிறார். அவர்கள் இறைவன் அடி வீழ்ந்து சாப விமோசனம் வேண்ட அவர்களையும் அவர்கள் சந்ததிகளையும் தினமும் மத்தியானம் ஒருமணி நேரம் நீசத்வம் அடையவும், மற்ற வேளைகளில் புனிதர்களாக வாழவும் அனுகிரகிக்கிறார். இவ்வளவும் உண்மையாக நடந்ததோ இல்லையோ, கதை என்றாலும் மிக்க சுவையுடைய கதை. இறைவன் தன் பக்தர்களை ஆட் கொள்ள எந்த நேரத்திலும் எந்த உருவத்திலும் வருவான், வரத்தவறான் என்ற உண்மை

யை அல்லவா உலகுக்குப் பறை சாற்றியி ருக்கிறது. அம்பர் மாகாளத்துக்கும் அம்பருக்கும் இடையில் சோமாசி மாறநாயனார் செய்த யாக குண்டம் இருக்கிறது. பறையனாக வந்தபோது 'ஒதுங்கிப் போ' என்று அந்தணர்கள் இறைவனை சொல்ல, அவர் ஒதுங்கிய இடத்திலே இன்று 'ஒலியப்பர் கோவில்' ஒன்று எழுந்திருக்கிறது. இந்த உத்சவம்வேறு வருஷந்தோறும் வைகாசி ஆயில்யத்திலே அம்பர் மாகாளத்திலே நடக்கவும்செய்கிறது.

இந்த ஒரு கதையைத் தெரிந்துக் கொள்ளவே இந்தத் தலத்துக்கு வரலாம். வந்த இடத்தில் இரண்டு கோயில் களில் உள்ள மூர்த்திகளை வணங்கலாம். மற்ற வரலாறுகளையும் தெரிந்து கொள்ளலாம். முதலில் அம்பர் மாகாளம் சென்று அங்கு கோயில் கொண்டிருக்கும் மாகாளநாதர், பக்ஷயநாயகி தலத்துக்கு அம்பர் மாகாளம் என்று பெயர் வருவானேன். இதைத்தெரிந்து கொள்ள அம்பன் அம்பாசுரன் சரிதையைக் கொஞ்சம் தெரிந்து கொள்ள வேணும்.

# 34. மதுராந்தகத்து கருணாகரன்

தேரழுந்தூரில் வழிவழியாக சைவப் பெருங்குடியில் பிறந்த குடும்பத்தார்களுக்கு கச்சிஏகம்பனே வழிபடு தெய்வமாக தொழுது வணங்கி வந்தனர். அக் குடும்பத்திலே பிறந்ததால் கம்பன் எனும் பெயர் நிலைத்து விட்டது.

அவசரமாக, தேரழுந்தூருக்கு (சொந்தஊரான) திரும்பும் வழியில் மதுராந்தகம் சென்றதும், அங்கு வீற்றிருக்கும் கோதண்டராமர் ஆலயத்திற்கு செல்ல நேரிட்டது. ஆலயம் சென்றதும், ஒரு பெரியவர், கம்பரைப் பார்த்து, இவன் வணங்காமுடியாயிருப்பானோ. மூர்த்தியைக் கண்டதும் கை கூப்பித் தொழவுமா தெரியாது? என முணு முணுத்தார். அப்போது விழித்துக் கொண்ட கம்பன்

*"'நாராயண நம' என்னும் நல்நெஞ்சர்*
*பாராளும் பாதம் பணிந்து ஏத்துமாறு அறியேன்*
*கார்ஆரும் மேனிக் கருணாகரமூர்த்திக்கு*
*ஆராதனை என் அறியாமை ஒன்றுமே"*

எனும் பாடலைப் பாடினார்.

நம்மிடம்நிறைய இருப்பது அறியாமை. இறைவனிடத்துக் கொஞ்சம் கூட இல்லாதிருப்பது அறியாமை. நம்மிடம் அறியாமையே நிறைய இருக்கிறதே. ஆதலால் நம்மிடமுள்ள அறியாமையை ஆராதனைப் பொருளாகக் கொண்டு கொட்ட வேண்டியதுதானே. அதைத்தானே கம்பன் செய்கிறான், இத்தலத்தில் முதலில் காண

வேண்டியது கோதண்டராமர் கோயிலை அல்ல, இந்த பெரிய ஏரியையும் அல்ல, இந்த ஏரியில் உள்ள இந்த கலிங்கனைத்தான். ஆம், இதில் கலிங்கனின் தானே கோயிலுனுன் சிலை உருவில் நிற்கும் ராமனும், லட்சு மணனும் ஜோதி வடிவிலே, கர்னல் லயல் பிளேஸ் துரைக்கும் காட்சி கொடுத்திருக்கிறார்.

உங்கள் தெய்வத்துக்கு இந்த ஏரியை உடையாமல் பார்த்துக் கொள்ள தெரியவில்லை, இவருக்கு ஒரு கோயில், மனைவிக்கு ஒரு கோயில், இவை எல்லாம் வீண். பணம் விரயந்தானே என அந்த ஆங்கிலேய கலெக்டர் கேட்டிருக்கிறார். அன்றிரவே நல்ல மழை பெய்யவே, ஏரியின் நீர் மட்டும்பெருகியது. அணைக் கட்டை சோதித்துப் பார்க்க இரவு 10.00 மணிக்கு சென்றார். கொட்டுகிற மழையிலே, கலிங்கப்பக்கம் சென்றதும், குடையையும், தொப்பியையும் எடுத்து விட்டு, மண்டியிட்டு கூப்பிய கையராய் நிற்கிறதைப் பார்க்க, பக்கத்தில் உள்ளவர்கள் துரை வழுக்கி விழுந்து விட்டாரோ என எண்ணி தூக்கி விட முயன்றனர்.

அவரோ, அட முட்டாள்களே! அதோ பாருங்கள், கலிங்கத்தின் இரு பக்கமும் தேஜோமயமான இரு வீரர்கள் அல்லவா நின்று கொண்டு காவல் புரிகிறார்கள். அவர்கள் வில்லேந்தி நிற்கும் அழகு தான் என்னே! என்றார் கலெக்டர். கலெக்டருக்கு கிடைத்த தரிசனம் ஏனையோருக்கு கிடைக்கவில்லை. உடனே கலெக்டர், ஜானகிக்கு ஒரு கோயிலையும் தம்முடைய செலவிலே கட்டி முடித்தார். பின்பு தாய் நாட்டுக்குத் திரும்பினார்.

இங்குதான் ராமானுஜருக்கு பெரிய நம்பி, பஞ்ச சம்ஸ்காரம் எனும் வைணவ தீட்சை செய்து வைத்தி ருக்கிறார். தீட்சை நடந்த இடம் மகிழ மரத்தடியிலேதான்.

# 35. "ஆனைக்கா அகிலாண்டேசுவரி"

ராமனுக்கும் சீதைக்கும் நடந்த திருமணத்தன்று, அவர்களது மணக்கோலத்தைக் குறித்து கம்பன் பாடுகிறான்.

*"மன்றலின் வந்து மணித்தவிசு ஏறி,*
*வென்றி நெடுந்தலை வீரனும்*
*இன்துணை அன்னமும் எய்தி இருந்தார்*
*ஒன்றிய போகமும், ஆர்வத்து யோகமும் ஒத்தே"*

என்பது பாட்டு. இந்தப் பாடலினால் எனக்கு சந்தேகம் உண்டாயிற்று. எப்படி இராமனும் சீதையும்போகமும் யோகமும் ஒன்றிய நிலையில் இருந்தார்கள். எப்படி இருக்க முடியும் என என் மனம் ஆராய தூண்டியது. இதே சந்தேகம் என்னோடு மட்டுமல்ல, அன்னை பார்வதிக்கும் எழுந்திருக்கிறது. போகம் யோகம் இவற்றின் உண்மைகளை இறைவனிடமே கேட்கிறாள். நீ பூலோகத்தில் பிறந்து ஞானத்தலத்தில் தவம் செய். அங்கு நான் உனக்கு உபதேச வாயிலாக சந்தேகத்தை நிவர்த்தி செய்கிறேன் என உத்தரவிட்டார். அதே போன்று காவிரிக்கரையிலே, நீரையே திரட்டி லிங்கத் திருவுருவமைத்து, அதற்கு அபிஷேகம் முதலிய பூஜை கிரமங்களை புரிகிறாள். தவத்துக்கு இறங்கி அன்னை சந்தேகத்துக்கு விளக்கம் கூறுகிறார்.

**விளக்கம்** : உலகங்கள் எல்லாம் என் அருள் வழியே நடப்பன. நடனத்தைப் பிறருக்கு கற்பிக்க விரும்பும் நடன ஆசிரியன் முதலில் தானே மக்களுக்கு நடனம் ஆடிக்

காட்டுவது போல, உலக மக்களுக்கு யோக நிலையும், போக நிலையும், பயிற்றுவிக்க நானே நடத்திக் காட்ட வேண்டியிருக்கிறது. ஆண்களுக்கெல்லாம் போகத்தை நுகர உன்னை மணந்து தழுவிப் போகியாகவும், அதே சமயத்தில் யோக சித்தி பெற்று மெய்ஞ்ஞானத்தை அடைந்து உலக மக்கள் முத்தி பெற யோகியாகவும் மாறுகிறேன். இதுதான் இரகசியம் என்பதை அன்னை அறிகிறாள். இந்த விளக்கத்தை அன்னை அகிலாண் டேஸ்வரி பெற்ற இடம் தான் திருவானைக்கா. தல வரலாறு கூறுவதைப் பார்ப்போம்:

கயிலையிலுள்ள இரு கணநாதர்கள் ஏதோ சாபம் பெற்றதால், யானையாகவும், சிலந்தியாகவும், பிறக்கிறார்கள். இருவரும் அகிலாண்டேஸ்வரி ஸ்தாபித்த அப்பு லிங்கத்தை வழிபடுகிறார்கள். யானை ஆற்றுத் தண்ணீரை தன் தும்பிக்கை மூலம் கொண்டு வந்து, இறைவனுக்கு அபிஷேகம் செய்கிறது. நாவல் மரத்தின் கீழிருந்த அப்பு லிங்கத்தின் மீது விழாதவாறு சிலந்தி பூஜிக்கிறது. சிலந்தி யானை மீது கோபம் கொண்டு, துதிக்கை துவாரத்தின் வழியாக நுழைந்து கபாலம் வரை ஏறி யானயைக் கடிக்கிறது. யானையோ வேதனை தாங்காது, தன் துதிக்கையை ஓங்கி அடிக்கிறது. அதனால் சிலந்தி மடிகிறது. யானையும் துடிதுடித்து மடிகிறது. இந்த இருவரின் பக்தியைப் பாராட்டி இவர்களுக்கு முத்தியளிக்கிறான். முத்தி பெற்ற யானையின் ஞாப கார்த்தமாகவே இத்தலம் ஆனைக்கா ஆகிறது. சிலந்தி மறுபிறப்பில் கோச்செங்கட் சோழனாகப் பிறக்கிறது. அந்த பிறவியிலும் யானை மீது கொண்டிருந்த பகையை மறக்காமல், யானை ஏற இயலாத மாடக் கோயில்களாகவே

70 கட்டினான். இந்த 70 கோயில்களில் படி ஏற இயலாத யானையும் ஒரு கோயிலைத் தன்னுடையதாக ஆனைக் காகவாகவே ஆக்கிக் கொள்கிறது.

> *"சிலந்தியும் ஆனைக்காவில் திருநிழல் பந்தர் செய்து*
> *உலந்தவண் இறந்தபோதே கோச் செங்கணானுமாக*
> *கலந்தநீர் காவிரி சூழ் சோணாட்டு சோழர் தங்கள்*
> *குலந்தனில் பிறப்பித்திட்டார் குறுக்கை வீரட்டனாரே"*

என்று நாவுக்கரசர், திருக்குறுக்கை எனும் தலத்தில் பாடியுள்ளார். ஆலயத்தின் 4-வது பிரகாரத்து மதில்தான் பெரியமதில். இந்த மதிலையே திருநீற்று மதில் எனக் கூறுவர். விசாரித்ததில் இம்மதில் கட்ட மன்னன் முனைந்த போது, சித்தர் ஒருவர் தோன்றி, திருநீற்றையே வேலைக்கு உரிய ஊதியமாக பணிச்செய்தவர்களுக்கெல்லாம் கொடுத்திருக்கிறார்.

இதுபோன்று இப்போதும் கோயிலில் நமக்குக் கொடுக்கும் திருநீறெல்லாம் பொன்னாக மாறுகிறது என்று மட்டும் ஆகி விட்டால் கோயிலுக்கு வருவார் தொகையே பெருகி விடாதா?

இவ்வாலயத்தின் கர்ப்பக்கிரகத்தில் நீர் பொங்கிக் கொண்டேயிருக்கும். அன்னை பிடித்த அப்புலிங்கம் அல்லவா. அதற்கு நீர் பொங்கி வழிவதில் வியப்பு என்ன? இப்படி அப்பு வடிவிலும், லிங்க வடிவிலும் இறைவனை வணங்கி வெளியே வரும் போது,

> *"தென்னானைக் காவானை தேனைப் பாலை*
> *செழுநீர் திரளைச் சென்று ஆடினேனே"*

என்று நாவுக்கரசரோடு சேர்ந்து பாடிக் கொண்டே வரலாம். சுந்தரரும்,

*"அறையும் பூம்புனல் ஆனைக்காவுடை ஆதியை,*
*நாளும் இறைவன் என்று அடி சேர்வார்*
*எம்மை ஆளுடையாரே"*

எனப் பாடிப் பரவினார். அருணகிரியாரும், ஓல மறைகள் எனத்துவங்கும் திருவானைக்கா தலப்பாடலில், 7-வது அடியில்,

*"ஞாலமுதல்வி இமயம் பயந்தமின்*
*நீலிகவுரி பரமங்கை குண்டலி*
*நாளும் இனிய கனி எங்கள் அம்பிகை திரிபுராயி*
*நாத வடிவி அகிலம் பரந்தவள்*
*ஆலின் உதர பைங்கரும்பு வெண்ணாவல் அரசு*
*மனைவஞ்சி தந்தருள் - பெருமாளே"*

என்று பாடியுள்ளது கவனிக்கற்பாலது.



# 36. செங்கோட்டு அர்த்தநாரி

ஓர் இலக்கியக் கூட்டத்தில், நம் நாடு ஆங்கிலேயர் ஆளுகையிலே இருந்த சமயம், இந்திய மந்திரியாக, பெதிக்லாரென்ஸ் என்பவர். பெயர் வந்த விதத்தைப் பற்றி ஒரு அறிஞர் பேசினார்.

அவரது பெயர் லாரென்ஸ் என்பதுதான், தன் மனைவியின் பெயரை பெதிக், இருவரும் சமூக சேவையில் ஈடுபட்டதால், இருவரது பெயரையும் இணைத்தே மக்களுக்கு அறிமுகம் செய்தார்.

அம்மை பெயர் மிஸஸ். பெதிக்லாரென்ஸ் என்றும், அவரது பெயர் மிஸ்டர் பெதிக்லாரென்ஸ் என்றும், பொருத்திக் கொண்டனர். நாமோ நமது மனைவியின் பெயரை முழுக்கவே மறக்கடித்து விடுகிறோம். மிஸஸ் ராமசாமி, மிஸஸ் கிருஷ்ணசாமி என்றே அவர்களையும் அழைத்து வருகிறோம். இது எந்த விதத்தில் சரி? எனக் கூறிக் கொண்டே போனார். அது சமயம் அக்கூட்டத்தில் பேச வந்த நான் இதற்குக் கொஞ்சமும் சளைக்கவில்லை. ஆணும் பெண்ணும் சரி நிகர் சமம் என்பதற்கு இந்தப் பெயர் இணைப்புத்தான் முக்கியம் எனின், பெதிக்லாரென்ஸ் பிறப்பதற்கு முன்பே, நமது கடவுளர் நமக்கு வழி காட்டியுள்ளார்களே நாம் வழிபடும் மூர்த்திகளில் பெரும்பாலோர் அம்மையப்பனாகத்தானே இருக்கிறார்கள். அவர்கள் பெயரும் உமாசங்கரன், லட்சுமி நாராயணன், சீதா ராமன் என்று தானே இருந்திருக்கின்றன. பெயரை மட்டும் தானா சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள்?

அவர்களது வடிவையே தங்கள் வடிவில் சேர்த்துக் கொண்டிருக்கிறார்களே. மனைவியைப் பாகத்தில் ஒருவன் வைத்திருக்கிறான், ஒருவன் ஆகத்தில் வைத்துக் கொள்கிறான், ஏன்? நாவிலேயே வைத்துக் கொள்கிறான் மற்றொருவன். இம்மூர்த்திகளையே வணங்கும் நாமா, நம் மனைவியரைச் சகதர்மனிகளாக வைத்துக் கொள்ளத் தயங்கப் போகிறோம்? என எதிர் கேள்வி கேட்டேன்.

மனித உருவத்தில் இறைவனையும் இறைவியையும் ஒன்றோடு ஒன்று பிணைத்து வடிவமைத்த கலைஞன், ஊர்வன, பறப்பன, நடப்பன முதலிய எவ்வுயிருமே அவ்விதம் கலைஞன் ஏன் படைக்கவில்லை. சிருஷ்டிக்கப் படும் உயிரும் உடலும் தத்தம் தாயும் தந்தையுமாய் இரு வகை இயல்புகளும் பொருந்தி நிற்க வேண்டுவது தானே, உலகில் உள்ள எல்லா உயிர்களுக்கும், தாயாகவும், தந்தையாகவும் இருக்கும் இறைவனை அந்த உருவில் - ஆம் அப்படி இறைவனை அர்த்தநாரியாக பாதியிருக்கும் பாதியானாக பஞ்சின் மெல்லடியாள் பாகனாக வழிபடும் தலம் தான் திருச்செங்கோடு.

செங்குன்று என்று பெயர் வந்ததன் வரலாற்றைப் பார்ப்போம். ஒரு சமயம் வாயுவுக்கும், ஆதிசேஷனுக்கும் நடந்த போட்டியில் மகாமேருவைப் பெயர்க்கும் முயற்சியை வாயு மேற் கொண்டான். ஆதிசேஷனோ, தன் படத்தை விரித்து, மூடிக் கொள்கிறான். வாயுவின் வேகம் தாங்காது, சர்ப்ப அரசன் தன் படத்தை சிறிதே மேலே தூக்கி இருக்கிறான். சிறிது மூச்சு வாங்க, அவ்வளவுதான் மேருவின் சிகரங்களில் ஒன்று பிய்த்துக் கொண்டு வந்து விழுந்திருக்கிறது. அதே சமயம் சேஷன் வாயிலிருந்து குருதி பட்டுச் சிவந்த குன்றாவே அது இருந்திருக்கிறது, இதனாலேயே செங்கோடு எனப் பெயர் வழங்கலாயிற்று.

குன்றின் மீது வந்ததும், முதலில் தரிசிப்பது முருகப் பெருமானை மயில் மீது ஆரோகணித்து விளங்குவதையே, இவனது அழகைக் கண்டு மயங்கிய அருணகிரியார், கந்தர் அலங்காரப் பாடல் ஒன்றில் பாடியுள்ளது மிகவும் அற்புதம்.

*"மாலோன் மருகனை, மன்றாடி மைந்தனை, வானவர்க்கு மேலான*
*தேவனை, மெய்ஞ்ஞான தெய்வத்தை*
*மேதினியிற் சேலாற் வயற்பொழில் செங்கோடனைச்*
*சென்று கண்டு தொழ நாலாயிரம் கண் படைத்திலனே நான்முகனே"*

அருணகிரியார், செங்கோட்டு வேலனிடம் ஈடுபாடு உடையவர் என்று தெரிகிறது. கந்தர் அலங்காரத்தில், செங்கோட்டு முருகனுக்குக்கென்று 8 பாட்டை ஒதுக்கி விடுகிறார். இன்னும் கந்தர் அனுபூதியில் ஒரு பாடலும், திருப்புகழ் பாடல்களிலும் முருகனை மறக்கவில்லை. அடுத்து காண்பது, அர்த்தநாரீஸ்வரரையும் அவரின் கோலத்தைக் கண்டு,

*"தோலும் துகிலும் குழையும் அருள்தோடும்*
*பாலவெள்ளை நீறும் பசும் சாந்தும் பைங்கிளியும்*
*சூலமும் தொக்கவளையும் உடைத்தான்மையைக் கோலமே*
*நோக்கிகுளிர்ந்தூதாய் கோ த்தும்பி"*

என பாடியுள்ளார். ஒரு கிழ முனிவர் மூன்று கால்களுடன் இவர் காலடியில் நிற்பதைக் காண்கிறார். இவரே பிருங்கி முனிவராவார். இவர் சிவனையன்றி சக்தியை வணங்காதவர். இதனை சக்தியானவள் சிவனிடம் முறையிட்டு, அவரோடு இணைந்து இருக்க நினைத்தார். இதைக் கண்டு பிருங்கி முனிவர் வண்டு உருவம் எடுத்து, அர்த்தநாரி உருவத்தை துளைத்து சிவனை மட்டும் வலம் வந்து வணங்கினார். வண்டு உருவெடுத்ததால், சதை, எலும்பு எல்லாவற்றையும் உதறி நின்றார் பிருங்கி. அதனால் இவருக்கு மூன்றாவது காலை கொடுத்திருக்கிறார்.

# 37. பழனி ஆண்டவர்

அன்னை பார்வதியும் பரமசிவனும் கயிலையில் அமர்ந்திருக்கையில், நாரதர், கையில் ஒரு மாங்கனியை கொண்டு வந்து பரமேஸ்வரனிடம் அளித்து வணங்கினார்.

நாரதர் எதிலும் கலந்தாலே, கலகம் வாய்க்க வாய்ப்புண்டு. இதிலிருந்தும் ஒரு நன்மையே பிறக்கும் முடிவில், அது சமயம் வினாயகரும், முருகரும் வந்து சேரவே, இதை யாருக்குக் கொடுப்பது என ஐயம் அம்மை அப்பனுக்குத் தோன்றிற்று. இந்தப் பிணக்கைத் தீர்க்க ஈசன், ஒரு பந்தயம் வைத்தார்.

யார் முதலில் இவ்வுலகை சுற்றி வருகிறார்களோ, அவர்களுக்குத்தான் பழம் என்று போட்டி வைத்தார். முருகர், தன் மயில் மீது அமர்ந்து ஒரு சிறிது நேரத்திலே உலகை சுற்றி வரச் சென்றார். வினாயகரோ, முருகரைப் போல் கடிது சுற்றி வர மயிலைப் போல் தனக்கு வாகனம் இல்லாததால் தாய் தந்தையரையே சுற்றி வந்து, பழத்தைப் பெற்றுக் கொண்டார். அடுத்து முருகன் மயில் மேல் உலகைச் சுற்றி வந்து, பழத்தை கேட்டார். பழம் அண்ணனுக்கே கைமாறி விட்டதைக் கண்டு கோபமுற்று, கோவனாண்டியாய் கயிலையைவிட்டு சென்று விடுகிறார். இத்தனையும் உண்மையில் நடந்ததா, அல்லது நடந்தே இருக்குமா என ஐயம் தோன்றலாம். இதன் உட்கருத்து, அம்மை அப்பன் உலகெங்கும் வியாபித்திருக்கிறான் எனும் தத்துவத்தை உலகோருக்கு அறிவிக்கவே, முருகன் மயில் மேல் ஆரோகணித்து, உலகை சுற்றி வரலானான்.

அண்ட சராசரங்களும் அம்மை அப்பனுக்குள் அடக்கம் எனும் தத்துவத்தை உலகோருக்கு அறிவிக்கவே, வினாயகர் தன் பெருச்சாளி வாகனத்தில் ஆரோகணித்து, தாய் தந்தையரை பிரதட்சிணம் வந்தார்.

பழநி மலை எனும் வழியில், இடும்பன் கோயில் குமரஅடிவேலுவர் கோயிலும் வரும். இடும்பனுக்கு இங்கு என்ன வேலை, காரணம் தெரிந்து கெள்வது அவசியம்.

அகத்தியர், கையிலே பூஜித்த சிவகிரி, சக்திகிரி எனும் இரு குன்றுகளையும் தென் திசைக்கு கொண்டு செல்ல விரும்பினார். அவரால் சாதிக்கக் கூடியதா? அது சமயம் அவரை வணங்க வந்த இடும்பாசுரன் என்பவனிடம் தம் விருப்பத்தைப் பூர்த்திச் செய்ய சொன்னார். அவனோ மிக்க பலசாலியாதலால், ஒரு காவு தடியில் இரு மலையையும், கோர்த்து, தன் தோளில் சுமந்து தென்திசை நோக்கி வந்தார். வந்தவனுக்கு களைப்பு உண்டாகவே, தடியை கீழே வைக்கிறான்.

இளைப்பாறி விட்டு, திரும்பவும் தூக்க முயற்சித்த போது மலைகளைப் பெயர்க்க முடியாது போயிற்று. சுற்றும் முற்றும் பார்க்கலானான். இந்த மலைகளின் ஒன்றின் மேல் குல மர நிழலிலே மழலை வடிவில் ஒரு சிறுவனைக் கண்டான். இடும்பன் அந்தப் பாலகனை மலையை விட்டு இறங்கி போகச் சொன்னான். பாலகன் மறுக்கவே அவன் மேல் பாய்கிறான். ஆனால் அடியற்ற மரம் போல் அங்கேயே விழுகிறான். இடும்பன் மனைவி கதறுகிறாள். அதே சமயம் அகத்தியரும் அங்கு வந்து சேருகிறார்.

இளங்குமரனோ, இம்மலையே தமது இருப்பிடம் என கூறினான். இவ்விதத்தில் தோன்றிய வரலாறுதான்

பழநிக்கு. அன்றுமுதல் இடும்பனைப் போல் யார், காவு தடி தூக்கி வருகிறார்களோ, அவர்களுக்கெல்லாம் அருள் பாலிப்பதாக தண்டாயுதபாணி வாக்களிக்கிறான். இதனடிப்படையில் ஏற்பட்டதுதான், காவுதடியிலிருந்து காவடி எடுக்கும் பழக்கம் ஏற்பட்டிருக்கிறது.

மலைமேல் வீற்றிருக்கும் தண்டாயுதபாணிக்கு அமிர்த அபிஷேகம் மிகவும் பிடித்தம். நல்ல பஞ்சாமிர்த அபிஷேகம் அவருக்கு மிகவும் பிரிதியாகும். ஒரு மாம்பழத்துக்காக கோபித்துக் கொண்ட இப்பாலகனுக்கு, பழங்களைக் கொண்டே தினமும் அபிஷேகம் நடைபெறுவது எவ்வளவு பொருத்தம் எனக் கருத முடிகிறது.

இந்த மூர்த்தி, போகரால் பிரதிஷ்டை செய்யப் பட்டவராயிற்றே. அவர் சிலை வடிவில் இருந்தாலும், அது சிலை ஆகா. ஒன்பது வகை மருந்து சரக்குகளால் ஆகிய நவபாஷணத்தை ரஸக்கட்டாய்த் திரட்டி உருவாக்கப் பட்டவராயிற்றே. அவரது மேனியில் வழிந்து வரும் எப் பொருளுமே, மக்களது நோய்களை எல்லாம் தீர்க்க வல்லது.

உயிர்களின் பிறவிப் பிணியை நீக்கவல்ல ஆண்டவன் உடற்பிணியைத் தீர்ப்பது என்பதில் என்ன ஆச்சர்யம் உள்ளது. பழநி ஆண்டவனைப் பற்றி ஓர் ஐயம். இவர் மொட்டை ஆண்டியா? சடையாண்டியா? என்பதுதான். வெளியில் கடைகளில் விற்கும் படங்கள் யாவும், இவனை மொட்டை ஆண்டியாகத்தான் காட்டுகின்றன. அது காரணமாகவே, சிலர் வீட்டுபூஜை அறையில் வைத்துக் கொள்ள துணிவதில்லை. அவனே மொட்டை ஆண்டி யாயிற்றே, நம் குடும்பத்தையும் மொட்டையடித்து

விடுவானோ என ஐயம் தோன்றும். அபிஷேக காலத்தில், இவனது உருவத்தை நோக்குவார்க்குத் தெரியும், அவன் சடையாண்டியே என்பது. மக்கள், உடமை என கருதுகின்ற பொருள்களில் உள்ள ஆசையை விட்டு விட வேண்டும் அப்படி ஆசைகளை விட்டு விட, தான் பெற வேண்டிய பேறுகளை எல்லாம் பெறலாம் என்பதின் தத்துவமே, பாலகனை ஆண்டியாய் கற்பனைச் செய்திருக்கிறார்கள் எனக் கருத இடமளிக்கிறது.

அவன் துறவியானது, நம்மை எல்லாம் துறவிகளாக்க அல்ல. ஆக்கம் உடையவர்களாக, அருளுடையவர்களாக மக்கள் வாழ்வதற்காகவே ஆண்டவன் துறவு கோலம் பூணுகிறான். இல்லாவிட்டால் அவனுக்குப் பற்று, துறவு என்றெல்லாம் உண்டா?

இந்த பழநி ஆண்டவர் வழிபாட்டிலும் ஒரு சிறப்பைக் காணலாம். தரிசிக்க வருவோர்களில், தமிழர்களை விட அதிகம் கேரள நாட்டினரே. மேலும் முகம்மதியர்களும் குடும்பத்துடன் வந்து சந்நிதிக்கு பின்புறத்தில் சந்தனக் காப்பிட்டுத் தூபம் காட்டி பாத்தியா ஓதி வணங்குவதை இன்றும் காண முடிகிறது. இவ்வாறெல்லாம் சர்வசமய சமரசம் வளர்ப்பவனாய், மலைமேல் நின்று அருள் வழங்குகிறான் என்றால் அது போற்றுதற்குரியது தானே.

எல்லாம் சரிதான், நக்கீரர் பாடிய, திருமுருகாற்றுப் படையில் இத்தலத்தைப் பாடியுள்ளது திருவாவினன் குடி எனும் தலமேயாகும். பழநி எனும்ஆலயம் நக்கீரருக்குப் பிற்காலத்தில் தான் தோன்றியுள்ளது. திருவாவினன்குடி ஆலயம் மலை அடிவாரத்தில் உள்ளது. இதுவே ஆதி கோயில். ஔவையாராலும் சிறப்பித்துப் பாடப் பெற்றது. பழநி ஆண்டவனைப் பாடிய அடியார்களுக்குள்ளே, மிகச் சிறப்பு வாய்ந்தவர் அருணகிரியார் தான்,

*"பழனம் உழவர்செழுவில் எழுது
பழய பழநி அமர்வோனே"*

என மலைமேல் உள்ள ஆண்டவனையும்,

*"ஆவல் கொண்டு விறாலே சீராடவே
கோமளம் பலசூழ் கோயில் மீறிய
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் - பெருமாளே"*

என்று ஆவினன்குடி மக்களையும் பாடி மகிழ்ந்திருக்கிறார். தாம் பாடிய கந்தர் அலங்காரத்திலும்,

*"படிக்கின்றிலைபழநித்திருநாமம், படிப்பவர்தாள் முடிக்கின்றிலை
முருகா என்கிலை, முசியாமல் இட்டு மிடிக்கின்றிலை,
பரமானந்தம் மேற்கொள, விம்மி, விம்மி நடிக்கின்றிலை நெஞ்சமே
தஞ்சம் ஏது நமக்கினியே"*

எனும் பாடலை எத்தனைதரம் வேண்டுமானாலும் பாடி அவனுக்கு அலங்காரம் செய்து உய்யும் வகையில் நாடலாம்.



பழநி

# 38. திருப்பாதிரிப்புலியூர் அரன்

இந்நில உலகில் மக்களிலே மூன்று வகையினர் ஒருவகை, பிறர்க்குச் செய்யும் நல்ல காரியங்களை எல்லாம் அவர்களிடம் சொல்லாமலே தாமாகவே செய்து முடிப்ப வர்கள். இன்னொரு வகை, செய்யுங் காரியங்களே எல்லாம் முன் கூட்டியே தம்பட்டம் அடித்து அதன்பின்பு செய்து முடிப்பவர்கள். மூன்றாவது வகை, ஏதோ வாய் வரிய அதைச் செய்வதாக சொல்லுவார்கள் ஆனால் ஒன்றுமே செய்ய மாட்டார்கள். இவர்கள் மூவரையும் பெரியவர், சிறியவர், கயவர் என்று வகைப்படுத்துகிறார் ஒரு புலவர். இவர்களுக்கு உவமை தேடித் திரிய பலா, மா, பாதிரி மரங்கள், பலா பூக்காமலேயே காய்க்கும் இயல்புடையது. மா பூத்துக் காய்க்கும் தன்மையது. பாதிரியோ, பூக்கும் ஆனால் காய்க்காது இதை சொல்கிறார் ஒரு பாடலில்,

*"சொல்லாமலே பெரியர்*
*சொல்லிச் சிறியர்*
*சொல்லியும் செய்யார்*
*கயவரே - நல்ல*
*குலாமாலை வேற்கண்ணும்*
*கூறு உவமை நாடின்*
*பலா, மாவைப் பாதிரியைப்பார்.*

பலாவும், மாவும் நமக்குத் தெரியும் பாதிரியை நாம் பார்த்ததில்லை ஆதலால் பாதிரிப்புலியூர் என்று ஒரு தலத்தின் பெயரைக் கேட்டதுமே அங்கு பாதிரியைப் பார்க்கலாமென்று போனேன். அங்குள்ள கோயிலுக் குள்ளும் விரைந்தேன். பாதிரியின்இயற்போடேயே கோயில்

இருந்தது. சில கோயில்களில்வெளியில் ஒன்றுமே இருக்காது. ஆனால் கோயிலுள் நுழைந்தால் நிறைந்திருக்கும். சில கோயில்களில் உள்ளும் புறமுமே கலைவளம் நிரம்பியிருக்கும். ஆனால் நான் சென்ற பாதிரியிருக்கும் கோயிலோ, கோபுரம் நன்றாக இருக்கிறது. கோபுரத்துக்கு வடபுறம் குளம் அருமையாக இருக்கிறது. கோயிலின் முன் மண்டபத்தில் குதிரை மீது ஆரோகணித்து வரும் வீரர்கள் இருக்கிறார்கள் ஆனால் கோயில் உள்ளே கலையழகு என்பது கொஞ்சம் கூட இல்லை காரணம், பழைய கோயில் பழுதுற்றிருந்ததைப் புதுப்பித்துத் திருப்பணி செய்ய முனைந்தவர்கள் என்றாலும் பட்ட மரத்தைத் தகடு பொதிந்து மொட்டையாக நிறுத்தி வைத்திருக்கிறார்கள். மற்றவைகளைப் புதுக்கியது போல் புதிய பாதிரி மரம் ஒன்றைத் தேடி எடுத்து நட்டு வளர்த்திருக்கலாம். அதைச் செய்ய தவறி விட்டார்கள் பழைய பாதிரிகள் மரம் பழைய பெயரின் சின்னமாக விளங்குகிறதே ஒழிய வளரவோ, பூக்கவோ, காய்க்கவோ இல்லை இந்த பாதிரி. இந்தப் பாதிரி மரத்தையும் திருப்பாதிரிப் புலியூர் கோயிலுக்குத் தான் இன்று செல்கிறோம் நாம்.

தென்னாற்காடு மாவட்டத்தின் தலைமை நகரம் கடலூர் என்.டி. அந்த ஸ்டேஷனில் இறங்கி வடமேற்காகச் செல்லும் பாதையில் அரை மைல் சென்றால் திருப்பாதிரிப் புலியூர் கோயில் வாயிலுக்கு வந்து சேரலாம். குதிரை வீரர்களே ஏந்தி நிற்கும் கற்றூண்களும் பழைய கலைஞர்கள் செய்ததல்ல. இன்றைய கலைஞர்கள் வேலையே ஆதலால் கவர்ச்சியாக இல்லை. அந்த மண்டபத்தில் தெற்கே கோயில் மதிலைச் சுற்றிப் புறப்பட்டால் கோயில் காவல்காரரே சொல்வார் அங்கெல்லாம் ஒன்றுமில்லை வீணாக அலைய வேண்டாம் என்று ஆதலால் நாம் கோயிலுக்கு நுழையலாம். கலையழகு இல்லாவிட்டாலும் கடவுளர் இருக்கிறார்

அவரைக் கண்டு வணங்கி அருள் பெறலாம் தானே. நல்ல பெரிய பிரகாரம், அதற்கேற்ற பிரம்மாண்டமான தூண்கள் எல்லாம் கூடாது, குறையாது அளவோடு இருக்கும். இறைவன் சந்நிதிக்கு வந்து அவரை வணங்கி விட்டு வடபுறம் இருக்கும் அம்மன் கோயிலுக்குப் போகலாம் இங்கும் தூண் மண்டபம் கர்ப்பக்கிரஹம் எல்லாமே புதிதுதான் அம்மை பெரியநாயகியைத் தரிசித்து விட்டு வெளியே வரலாம்.

தலத்தை விட்டுக் கிளம்பு முன் இத்தலத்துக்குப் பாதிரிப் புலியூர் என்று பெயர் வரக் காரணம் என்ன என்று அறியத் தோன்றும். ஸ்தல விருட்சம் பாதிரியானதால் பாதிரிப் பெயருக்கு விளக்கம் பெறுவோம். அதிலும் உமையம்மை ஏதோ தவறு செய்ய அதற்குப் பிராயச்சித்தமாக அம்மையே இவ்வுலகில் பிறக்கும்படி இறைவன் சபிக்க, அந்தச் சாப விமோசனம் பெற அம்மை சப்த கன்னிகைகளுடன் கெடில நதிக்கரையில் உள்ள இப்பாதிரி வனத்துக்கு (பாடலவனம் என்றும் சொல்வார்கள்) வந்து தவம் புரிய இறைவன் பாதிரி, மரத்தடியிலே ஜோதிமயமாகத் தோன்றி ஆட்கொண்டார் என்று தல வரலாறு கூறும் அதற்கேற்பவே அன்னை பெரியநாயகி அருந்தவநாயகி என்றே அழைக்கப் படுகிறார்கள்.

இந்தத் தலத்துக்கும் முயலுக்கும் ஏதோ மிக்க நெருங்கிய தொடர்பு இருந்திருக்க வேணும். அதற்குக் கதைகள் இரண்டு உண்டு.

ஒன்று வியாக்கிரபாதர் மகன் உபமன்யு பூஜை செய்யும் போது அவரது பாதம் அம்மை எழுந்தருளியுள்ள பீடத்தின் வேரில் பட்டிருக்கிறது அருந்தவநாயகியே அவள் என்றாலும் இதை பொறுத்துக் கொள்வாளா? உபமன்யு, முனிவரை முயல் வடிவு எய்துக என்று சபிக்கிறாள். ஆனால் அந்த முயலோ அங்குள்ள பாதிரி மரத்தின் கிளை மீது பட்டதால் முயல் உரு நீங்கிப் பழைய உபமன்யுவாகவே

ஆகி விடுகிறது. இவர்களது தாம்பத்திய உறவு எப்படி நன்றாக இருத்தல் கூடும் என்றே எண்ணத் தோன்றுகிறது. நமக்கு இரண்டாவது முயல் கதை வேறே. மங்கணர் என்று ஒரு முனிவர் அவர் இறைவன் பூசனைக்கு மலர் பறிக்கிறார். காலில் முள் தைக்கிறது முள் தைத்த இடத்திலிருந்து ரத்தம் ஒழுகாது நன்னீர் பெருகுகிறது. இதைக் கண்டு ஆனந்தத்தால் துள்ளிக் குதிக்கிறார் இப்படி குதித்தவரது கால்கள் அவ்வனத்தில் தவம் செய்யும் தூமப்ப முனிவர் சிரத்தில் படுகின்றன இப்படி முயலுக்கு அருள் செய்த இறைவனது கருணையை இந்தத் தலத்துக்கு வந்த சம்பந்தர் உணர்கிறார் பாடுகிறார்.

*"முன்ன நின்ற முடக்கால்*
*முயலுக்கு அருள்செய்து நீள்*
*புன்னை நின்று கமழ்*
*பாதிரிப் புலியூர் உளான்*
*தன்னை நின்று வணங்கும்*
*தன்னைத் தவம் இலிகள்*
*பின்னை நின்ற பிணி*
*யாக்கை பெறுவார்களே"*

என்பதுதான் சம்பந்தரது தேவாரம்.

இப்படி முயல்களுக்கு கூட அருள் செய்த பரமன் அருள் கனிந்த அடியவரான அப்பர் தளர்கின்ற போது சும்மா இருப்பாரா? சைவம் தளர்கின்ற மரபிலே பிறந்த மருள் நீக்கியார் சமண மதத்தைச் சார்ந்து தருமசேனர் ஆகிறார். இவரது தமக்கையார் திலகவதியார் விரும்பியபடி இவருக்குச் சூலை நோய் தந்து - ஆட் கொள்கிறார். இறைவன் திரு அதிகையிலே இப்படி நாவுக்கரசர் சமணராய் இருந்து சைவராக மாறிவிட்டது சமணர்களுக்குப் பிடிக்க வில்லை சமணனாக இருந்த மன்னன் மகேந்திரவர்மனிடம் சொல்லி எத்தனையோ இன்னல்களை உண்டாக்கு கிறார்கள்

எத்தனைக் கொடுமைகளெல்லாம் உண்டோ அத்தனையும் செய்து பார்த்து விடுகிறான் அம்மன்னன். அதில் ஒன்று நாவுக்கரசரைக் கல்லிலே கட்டிக் கடலிலே தள்ளுதல் ஆனால் அதற்கெல்லாம் திருநாவுக்கரசர் அஞ்சிவிட வில்லை அவருக்கோ சிவபிரானிடம் அழியாத நம்பிக்கை.

*"சொற் றுணை வேதியன்*
*சோதி வானவன்*
*பொற் றுணை திருந்து அடி*
*பொருந்தக் கைதொழ*
*கற் றுணைப் பூட்டி ஓர்*
*கடலில் பாய்ச்சினும்*
*நற் றுணை யாவது*
*நமச்சிவாயவே"*

என்று பாடுகிறார்.

நீரில் அழுந்தும் கல் நாவுக்கரசருக்குத் தெப்பமாகி மிதக்கிறது. அலைமோதும் கடல் தெப்பத்தோடு சேர்ந்த நாவுக்கரசரைக் கரை சேர்க்கிறது இப்படி நாவுக்கரசர் கரையேறிய இடம் இன்றும் கரை ஏற விட்ட குப்பம் என்ற பெயரோடேயே கடலூர் பக்கத்தில் நிலவுகிறது. பாதிரிப் புலியூர் அரன் தோன்றாத் துணையாயிருந்த நாவுக்கரசர் நல்வாழ்வு பெற உதவியிருக்கின்றன. இதை நினைத்தே,

*"ஒன்றாளுமாய், எனக்கு எந்தையும்*
*ஆய் உடன்தோன்றினராய்*
*மூன்றாய் உலகம் படைத்து*
*உகந்தான் மனத்து உள்ளிருக்க*
*ஏன்றான் இமையவர்க்கு அன்பன்*
*திருப்பாதிரிப் புலியூர்*
*தோன்றாத் துணையாயிருந்தனன்*
*தன்னடி யோர்களுக்கே"*

என்று பாடுகிறார் நாவுக்கரசர். இப்பாடல் நாவுக்கரசர் பாடிய பின்னரே இத்திருப்பாதிரிப் புலியூர் அரசனுக்கு இன்றும் சித்திரை அனுஷ நாளன்று கரை ஏறவிட்ட குப்பத்தில் திருநாளாகவே சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள்.

எங்கெங்கெல்லாமோ சென்ற சுந்தரர் இத்தலத்துக்கு வந்தார் என்று வரலாறு இல்லை. ஆனால் மணிவாசகர் இங்கு வந்ததாக வரலாறு உண்டு வாதவூர் அடிகளாம் மணிவாசகர் இத்தலத்துக்கு வரும்போது கெடிலநதியிலே வெள்ளப் பெருக்கெடுத்து ஓடியிருக்கிறது நதியைக் கடக்க முடியவில்லை என்று வருந்தி அக்கரையிலேயே அன்ன ஆகாரம் இல்லாமல் நின்று இருக்கிறார் அவர். ஈசனைக் காணாமல் மணிவாசகருக்கு அவ்விடத்தை விட்டு நகர மனமில்லை.

அடியார்களின் துயர் தீர்ப்பதே தனது பணியாகக் கொண்ட இறைவன் ஒரு சித்தர் வடிவத்தில் மணிவாசகர் முன் தோன்றி அவருக்காக நதியை வடபால் போகும்படி செய்து கோயிலுக்குக் கூட்டி வந்து பாடலவனநாதனைத் தரிசிக்க வகை செய்து மறைந்திருக்கிறார்.

மணிவாசகர் விரும்பிய வண்ணமே, கங்கையும் கெடிலமும் கலந்த ஒரு தீர்த்தமாக சிவகர தீர்த்தத்தையும் அமைத்திருக்கிறார் அந்தச் சித்தர்.

கலை வளர்க்கும் கோயில் வரிசையில் இக்கோயில் இன்று இடம் பெறாது என்றாலும் தோணாத் துணையும் அருந்தவநாயகியும் கோயில் கொண்ட தலம் என்பதால் பிரசித்தி உடையதுதானே அதிலும் சமய குரவர்களில் வயதால் மூத்த நாவுக்கரசருக்கும் நல்வாழ்வு கொடுத்த பதியாயிற்றே ஆதலால் 'கரையேறவிட்ட பிரான் ஒரு பாகம் வளர் கருணைப் பிராட்டியாள்' 'திரையேறு புகழ்ப் புரிசை பெரியநாயகி சரணம் தலைமேல் கொண்டு' திரும்பலாம் இங்கு செல்க என்று சொல்லி நிறுத்திக் கொள்கிறேன்.

# 39. காளத்தி அப்பர்

நாயன்மார்கள் அறுபத்து மூவரில் செயற்கரிய செயல் செய்தார் யார்? என்பது ஒரு பட்டிமண்டபத்தில் விவாதத்துக்கு எடுத்துக் கொண்ட பொருள். அறுபத்துமூன்று அன்பர்களது செயலையும் அலசி ஆராய்வது சிரமம் என்று கருதிப் பட்டினத்தார் குறிப்பிடும் மூன்று திருத்தொண்டர்களை மட்டுமே விவாதத்துக்கு எடுத்துக் கொண்டனர்.

*"வாளால் மகவு அரிந்து ஊட்ட*
*வல்லேன் அல்லன்; மாது சொன்ன*
*சூளால் இளமை துறக்க வல்லேன்*
*அல்லன்; தொண்டு செய்து*
*நாளாறில் கண் இடந்து அப்ப*
*வல்லேன் அல்லன்; நான் இனிச்சென்று*
*ஆளாவது எப்படியோ திருக்*
*காளத்தி அப்பருக்கே"*

என்று சிறுத்தொண்டர், திருநீலகண்டர். கண்ணப்பர் மூவரையும் போல அரிய செயல் செய்து இறைவன் அருளைப் பெறத் தம்மால் இயலவில்லையே என்று ஏங்கி இருக்கிறார் பட்டினத்தார். இம்மூவர் செயலையுமே அன்று அறிஞர்கள் விவாதித்தார்கள். கடைசியில் தலைவரது தீர்ப்பு கண்ணப்பர் பக்கமே இருந்தது. திருநீலகண்டர் தம் உறுதியில் நிலைத்து நிற்பதற்கு அவர் மனைவி இறைவன் பேரிலேயே ஆணை இட வேண்டியிருந்தது. சிறுத் தொண்டர் பெற்ற மகனையே அரிந்து கறி சமைத்த

செயலில் 'எதுவும் எனக்கு அரியது அன்று' என்று சொல்லும் ஆணவம் சிறிது கலந்து விடுகிறது. கண்ணப்பர் ஒருவர் தான் பிறருடைய தூண்டுதல் ஒன்றுமே இல்லாமல் 'அயல் அறியா அன்பை' இறைவனிடம் செலுத்துகிறார். ஆதலால் அவர் அன்பே சிறந்தது. அவர் செய்ததே அரிய செயல் என்று முடிவு கட்டினார் மண்டபத் தலைவர். இப்படி அறுபத்திமூன்று அன்பர்களில் இறைவனிடம் அன்பு செலுத்தியவர்களில் தலை நிற்கிறார் கண்ணப்பர். அத்தகைய கண்ணப்பராலே பெருமை பெற்றவர் தான் காளத்தி அப்பர். கொலைத் தொழில் புரியும் வேட்டுவக் குலத்திலே பிறந்த கண்ணனார் வேட்டையாடச் சென்ற இடத்திலே, அங்குள்ள குடுமித் தேவருக்கு ஆட்பட்டு, அவருக்கு இயல்பான முறையிலே வழிபட்டு நின்றவர். இறைவனது வலக் கண்ணில் உதிரம் ஒழுகியபோது தம் வலக் கண்ணையே தோண்டி எடுத்து அப்பி, வழியும் ரத்தத்தைத் துடைத்தவர். திரும்பவும் இறைவனது இடக்கண்ணிலும் இரத்தம் வடிந்த போது தக்க மருந்து தம்மிடம் உண்டு என்பதால் குதூகலித்துத் தம் இடக் கண்ணையே தோண்டி எடுக்க முனைந்தவர். திண்ணனாரது திண்மையான அன்பைக் கண்ட இறைவனும் 'நில்லு கண்ணப்ப! நில்லு கண்ணப்ப!' என்று அவரது கையைப் பிடித்து, தடுத்து நிறுத்தும் பாக்கியம் பெற்றவர். இத்தகைய 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு' தம்மிடம் இல்லையே என்றுதான் மாணிக்கவாசகரும் அகங்கரைந்து உருகுகிறார். "வாய்கலசமாக வழிபாடு செய்யும் வேடன் மலராகு நயனம் காய்கணையினாலிடந்து ஈசன் அடி கூடினான்" என்று ஞானசம்பந்தர் வியந்து வியந்து பாடுகின்றார். ஒரே ஒரு ரகசியம் இன்று காளத்தியில் கோயில் கொண்டிருக்கும் காளத்தி அப்பருக்குச் சொந்தமான ஒரு கண் கூட இல்லை.

இடக்கண்ணோ அம்மையின் கண். வலக் கண்ணோ கண்ணப்பரது கண். ஆதலால் இரு கண்ணும் இழந்து நிற்கும் ஏழை எளியனாக வாழ்கிறார் அவர்.

காளத்தி வாழ் கண்டனை நினைத்தால் கண்ணப்பனை நினைக்கிறோம். நாம் மாத்திரம் என்ன? "மனத்தகத்தான் தலை மேலான், வாக்கில் உள்ளான், வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர் இனத்தகத்தான், இமையவர் தம்சிரத்தின் மேலான்" என்றெல்லாம் இறைவன் இருக்கும் இடங்களை வரிசையாக அடுக்கிக் கொண்டே போன அப்பரும் கடைசியில் காளத்தியான் அவன் என் கண்ணுளானே என்று தானே முடிக்கிறார். இறைவனது அருள் பொழியும் கண்ணை நினைத்தால் கண்ணப்பனை நினைக்கிறோம். கண்ணப்பனை நினைத்தால் காளத்தி யானை நினைக்கிறோம்.

இந்தக் காளத்தியான் இருக்கும் கோயிலைத் தன்னகத்தடக்கிய ஊர் தான் இன்று காளாஸ்திரி என்றும் காளஹஸ்தி என்றும் சீகாளத்தி என்றும் வழங்கும் காளத்தி. சீ, காளம், அத்தி, என்னும் சிலந்தி, பாம்பு, யானை மூன்றும் வழிபட்ட காரணத்தால் சீகாளத்தி என்று இத்தலம் பெயர் பெற்றது என்று ஸ்தலபுராணம் கூறும்.

சிலந்தி தன் வாயாலேயே நூல் இழைத்து அந்நூலாலேயே இறைவனுக்குப் பந்தல் இடுகிறது. அப்பந்தல் தீபச்சுடரால் அழிந்தது கண்டு அத்தீபத்திலேயே தானும் விழுந்து மடிந்து இறைவன் திருவடி அடைகிறது. காளன் என்னும் பாம்போ தன்னிடமிருந்த அருமையான ரத்தினத்தை இறைவன் திருமுடியில் சாத்தி அலங்கரிக்கிறது. அத்தி என்னும் கணத் தலைவன் யானையாக அவதரித்து, தன் துதிக்கையாலேயே நீர் முகந்து இறைவனுக்குத் திருமஞ்சனம் செய்விக்கின்றது. யானை

செய்யும் திருமஞ்சனம் புஷ்ப அலங்காரம் எல்லாம் சுத்தமாக இல்லை என்று பாம்பு நினைக்கிறது. அதனால் யானையின் துதிக்கையில் பாம்பு நுழைந்து யானைக்கு வேதனை தருகிறது. யானையும் தும்பிக்கையை ஓங்கி அறைந்து பாம்பைக் கொல்கிறது. பாம்பின் விஷம் ஏறிய காரணத்தால் யானையுமே மாண்டு மடிகிறது. இப்படியே சிலந்தி, பாம்பு, யானை மூன்றும் இத்தலத்திலேயே முத்தி பெறுகின்றன. அதனால் தலமும் சீகாளத்தி என்றே பெயர் பெறுகிறது.

இந்தக் காளத்தி அப்பரது கோயில் பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்று. இதை வயுத்தலம் என்பார்கள் அதற்கேற்ப கர்ப்பக் கிருஹத்தில் சுடர் விட்டுக் கொண்டிருக்கும் விளக்குகளில் இறைவன் திருமுடிக்கு அணித்தே உள்ள ஒரு விளக்கின் தீபம் மட்டும் காற்றிலே அசைவுற்று எப்போதும் துடித்துக் கொண்டே இருக்கிறது. இந்த விளக்கு மட்டும் காற்று எங்கிருந்து வருகிறது என்பது கண்டறியாத அதிசயமாகவே இருக்கிறது. இது வாயுத்தலம் என்பதற்கும் ஒரு சிறுகதை. ஆதிசேஷனுக்கும் வாயு பகவானுக்கும் ஒரு பலப்பரீட்சை மேரு மலையை ஆதிசேஷன் சுற்றி வளைத்துக் கட்டிப் பிடிக்க வாயு தன் பலங்கொண்ட மட்டும் காற்றை எழுப்பி மலையை அசைக்கக் கடைசியில் அம்மலையின் பிஞ்சுகள் மூன்று பறித்து எறியப்பட, அப்படி எறியப்பட்ட மலைப்பிஞ்சு ஒன்றே இங்கு விழுந்து காளத்தி மலையாக உருவாகி இருக்கிறது என்பது கர்ணபரம்பரைச் செய்தி.

இக்காளத்தி அப்பர் கோயிலுக்குச் செல்ல விரும்புபவர்கள் ரயிலிலே செல்வதானால் சென்னையில் இருந்து ரேணிகுண்டா சென்று குண்டூர் செல்லும் ரயிலில் மாறி ரேணிகுண்டாவிலிருந்து பன்னிரண்டு மைல் செல்ல வேணும், இல்லை காரிலோ பஸ்ஸிலோ சென்னையில் இருந்து நேரடியாக எண்பது மைல் சென்று இத்தலத்தை

அடையலாம். மேற்கே இருந்து வருகிறவர்கள் திருப்பதி சென்று திருமலை ஏறி வேங்கடவனைத் தரிசித்து விட்டுப் பின்னர் இக்காளத்தி வந்து சேரலாம். ஸ்வர்ணமுகி என்னும் பொன் முகலி ஆற்றங்கரையிலே அமைந்திருக்கும் கோயிலுக்குச் சென்று தொழலாம். கோயில் வாசலிலே ஒரு பெரிய கோபுரம். காளி கோபுரம் என்று பெயர். ஆனால் இந்த கோபுரத்துக்கும், கோயிலுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை; தனித்து நிற்கிறது. பக்கத்தில் உள்ள சிறிய கோபுர வாயிலல் நுழைந்து வளைந்து வளைந்து சென்றால் தென்பக்கம் உள்ள கோயிலின் பிரதான வாயிலுக்கு வந்து சேருவோம். அதன்பின் கோயிலில் நுழைந்து வலமாக வந்தால் மேற்கு நோக்கியவராய் இருக்கும் காளத்தி யப்பரைத் தரிசிக்கலாம். இவர் சிவலிங்கத்தில் ஒரு புதிய உருவை ஏற்றிருக்கிறார். மூன்று நான்கடி உயரம் அடியில் பெருத்து முடியில் கூர்மையாக ஒடுங்கிய உருவம் மாலை போட்டு அலங்கரிப்பதற்கு என்று ஒரு தனிச் சட்டம். அதை விலக்கி விட்டு அர்ச்சகர் ஹாரத்தி பண்ணினால், சிலந்தி, நாகம், யானைக் கொம்புகளோடு கண்ணப்பரது ஒரு கண்ணும் லிங்கத் திருஉருவில் தெரியும். அந்தரால யத்திலே கூப்பிய கையனாய் வில்லைத் தாங்கி கொண்டு கண்ணப்பரும் சிலை உருவிலே நிற்கிறார் அங்கே, காளத்தி அப்பரை வணங்கித் திரும்பவும் வலமாகச் சுற்றினால், கிழக்கே பார்த்த திருக்கோயிலில் ஞானப்பூங்கோதை நிற்கிறாள். கம்பீரமான திருஉரு இந்த 'வண்டாடும் குழல் உமையைப் பாகத்தில் வைத்து மகிழ்ந்தவனே கண்டார்கள் காதலிக்கும் கணநாதனும் காளத்தியான்' என்பர் சுந்தரர். இன்னும் கோயிலுக்குள் எண்ணற்ற பிரகாரங்கள் வெளியேயும் ஒரு மண்டபத்தில் கண்ணப்பர் நான்கு ஐந்தடி உயரத்தில் நல்ல கற்சிலை வடிவில். இது துவிர செப்புச்சிலை வடிவிலும் அவர் உண்டு. இவைகளையெல்லாம் படம் பிடிக்க யாருக்கும்

அனுமதி இல்லை. கோயிலுக்குள் நுழையும்போதேதான் காமிராவைக் கைப்பற்றிக் கொள்கிறார்களே கோயில் நிர்வாகிகள். ஆனால், இங்குள்ள கண்ணப்பரைக் காட்டிலும் அழகான கண்ணப்பர் ஒருவரை சோழ நாட்டுச் சிற்பி கல்லில் உருவாக்கி, தாராசுரம் ஐராவதேசுவரர் கோயிலில் நிறுத்தி இருக்கிறான். கண்ணப்பர் தமிழ் மக்களின் பொது உடைமைப் பொருளாயிற்றே. அவரைத் தமிழ் நாட்டுப் புராணங்கள் எல்லாம் பாராட்டிப் புகழ்வது போலவே சோழநாட்டுச் சிற்பியும் வடித்தெடுத்து நிறுத்தி இருக்கிறான். இந்தக் காளத்தியப்பர் கோயில் பழுதுற்றிருந்ததை, தேவகோட்டை ராமநாதன் செட்டியார் குடும்பத்தினர் பத்து லட்சம் ரூபாய் செலவில் புதுப்பித்திருக்கின்றனர். இவ்வளவு செலவு செய்தும் உட் கோயில்களையே புதுப்பிக்க முடிந்திருக்கிறது. மற்றவை எல்லாம் பழைய கோவிலாகவே இருக்கிறது. இன்றும் புதுப்பித்த ராமநாதன் செட்டியார் கோவிலாகவே வெளியே பொன்முகலி ஆற்றுக்குச் செல்லும் படிக்கட்டின் பக்கத்திலே ஒரு சிறு மடத்திலே சிலை உருவில் நின்று கொண்டிருக்கிறார். அவரது பக்தி சிரத்தையைப் பற்றி எவ்வளவோ சொல்கிறார்கள் மக்கள்.

கோயிலின் பின் புறத்திலே இரண்டு குன்றுகள். ஒன்றின் பேரிலே கண்ணப்பர் தொழுத குடுமித்தேவர், இன்று கண்ணப்ப ஈசுவரர் என்ற பெயரோடு எழுந்தருளியிருக்கிறார். மற்றொரு குன்றின் பேரிலே துர்க்கை. இரண்டு கோயில்களுக்கும் செல்வது கொஞ்சம் சிரமம். உயரம் என்பதினால் அல்ல. சரியான பாதை இல்லாத காரணம்தான். கண்ணப்பர் மலை ஏறும் மலைச்சரிவிலே மணிகண்டேசுவரருக்கு ஒரு கோயில் அதை அடுத்து மலையை வெட்டிச் செதுக்கிய மண்டபம். இதற்கு மணிகர்ணிகா கட்டம் என்று பெயர். இங்குதான்

பெண்ஒருத்திக்கு இறைவன் தாரகமந்திரத்தை வலது காதில் ஓதி அருளினார் என்று கதை. காசி மணிகர்ணிகா கட்டத்தில் விசுவநாதர் அருளியது போல இன்றும் மக்களிடத்து ஒரு நம்பிக்கை. அந்திம திசையை நெருங்கிக் கொண்டிருப்பவர்களை இம்மண்டபத்துக்கு கொண்டு வந்து வலப்பக்கமாக ஒருக்கச் சாய்த்துக் கிடத்தினால் சாகிறபொழுது உடல் திரும்பி வலது காது வழியாகவே உயிர் உடலை விட்டுப் பிரிந்து செல்லும் என்கிறார்கள். இந்த மணிகண்டீசுவரர் கோயில் மூன்றாம் குலோத்துங்கன் என்னும் வீரராஜேந்திர சோழன் கட்டியது என்று கல் வெட்டுகள் கூறுகின்றன. ஆதலால் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிற்கு முன்பே காளத்தியப்பர் கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும். கோயிலின் நூற்றுக்கால் மண்டபம், காளி கோபுரம் முதலியன பதினாறாம் நூற்றாண்டின் முற்பகுதியில் விஜயநகர மன்னர்கள் கட்டினார்கள் என்று திருவண்ணாமலையில் உள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது.

இத்தகைய சரித்திரப் பிரசித்தியோடு இலக்கியப் பிரசித்தியுமே பெற்றிருக்கிறது இவ்வூர். மதுரை சொக்கலிங்கப் பெருமானிடத்திலேயே குற்றம் குற்றமே என்று வாதாடிய சங்கப்புலவன் நக்கீரன் சாப விமோசனம் பெற்ற, கயிலாய தரிசனம் பெற்ற இடம் இதுவே. அதனாலேயே இத்தலத்தை தக்ஷிண கயிலாயம் என்கிறார்கள். 'கயிலைபாதி காளத்திபாதி' என்று அந்தாதி பாடிய நக்கீரதேவ நாயனார் இத்தலத்தைப் போற்றியிருக்கிறார். தரிசித்த பலன் ஆம்! நமக்கும் கிடைத்து விடுகிறது. காளத்தியைத் தரிசித்த பலன் காளத்தியைப் பற்றி, காளத்தி வாழ் கண்ணப்பரைப்பற்றி இவ்வளவு தெரிந்து கொள்கிற காரணத்தால்.

# 40. தென்னரங்கத்து இன்னமுதன்

இலங்கை ஓர் அழகான தீவாகும். பாரதத்தாயின் கழுத்தில் அணியும், நித்திலப் பதக்கம் போல் தோன்றும் தீவு அதனால் நித்திலம் தீவு என்றனர். நாற்புறமும் கடல் சூழ்ந்து நடுவே மலைச் சிகரம் உயர்ந்தது. எங்கும் பசுமைசெழித்து கொண்டிருக்கும் நாடாகும். காடெல்லாம் பசுமை, மலை எல்லாம் பசுமை, காணும் வயல் எல்லாம் பசுமை எனும்படி, தென்னை, கமுகு, வாழை நிறைந்திருப்பதுடன் மலைச் சிகரங்களை எல்லாம் தேயிலை செடிகள் வேரே மூடிக் கொண்டிருக்கும். அந்த நாட்டில் கருமை இல்லை, வானையும், மேகங்களையும் தெருக்களில் பறந்து செல்லும் மோட்டார்களையும் வேறு ஒரு கறுமை அங்கு காண்பதரிது.

இப்படி வளம் கொழிக்கும் இலங்கையில், சைவம் என்றும் நிலை பெற்றிருக்கின்றது பௌதம் வந்து சேர்ந்து இருக்கிறது. ஆனால் இந்த வைணவம் மட்டும் அங்கு சென்று சேரவில்லை. அந்த மகாவிஷ்ணுவே அங்கு செல்ல மறுத்திருக்கிறது பாஸ்போர்ட், விசா எல்லாம் கிடைக்கவில்லையோ? என்னவோ விஷ்ணு அங்கு செல்ல மறுத்த காரணம் தெரிய பழைய இதிகாச காலத்துக்கே செல்ல வேண்டும்.

இலங்கையில் மலை மேல் கோட்டைக் கட்டி கண்டு வாழ்ந்திருக்கிறான் இராவணன். அவன் அயோத்தி அரசனான இராமனது மனைவி சீதையை எடுத்துச் சென்று அசோகவனத்தில் சிறை வைத்து விடுகிறான். சிறையில் இருந்த சீதையை மீட்க இராமன் படை திரட்டிக் கொண்டு இலங்கைக்கே சென்றுள்ளான். இராவணன் வதம் முடிந்து திரும்பும்போது இலங்கையையே விபீஷணனுக்கு அங்கே

முடி சூட்டியுள்ளான். பின்பு தன் மனைவியாம் சீதையும் அயோத்தி திரும்பி, தானும் பட்டாபிஷேகம் செய்து கொண்டிருக்கிறான். பட்டாபிஷேகத்துக்கு வந்த விபீஷணனுக்கு ஆராதித்து வந்த அரங்கநாதனை கொடுத்திருக்கிறான். அரங்கநாதனோடு கூடிய விமானத்தை எடுத்துச் சென்ற விபீஷணன், காவிரியைச் சேர்ந்ததும், அங்கு நீராட எண்ண விமானத்தை அங்கே இறக்கியிருக்கிறான் அவ்வளவு தான் நீராடி விட்டு விபீஷணன் விமானத்தை எடுத்தால் அவனால் எடுக்க முடியவில்லை. அரங்கனும் அந்த இடத்தை விட்டு அகல மறுத்திருக்கிறான். விபீஷணன் ஏமாற்றத்தோடே வெறும் கையோடு இலங்கைக்கு திரும்பியிருக்கிறான்.

என்றாலும், வேண்டிக் கொண்டபடி இலங்கை நோக்கிய வண்ணமாகவே காவிரிக்கரையில் சயனித்து விடுகிறான் அரங்கன்.

*"குடதிசை முடியை வைத்து*
*குணதிசை பாதம் நீட்டி*
*வடதிசை பின்பு காட்ட"*

தென்திசை இலங்கை நோக்கி, அரவணையில் துயில் பவனாகத்தானே இன்றும் காட்சி கொடுக்கிறான் அரங்கநாதன்.

அந்த அரங்கநாதனைக் காணவே ஸ்ரீரங்கம் செல்வோம். அரங்கன் கோயிலுக்கு செல்ல வழியொன்றும் சொல்ல வேண்டாம். பணியரங்கபெரும்பாயல், பரண் சுடரையாம் காண, அணி அரங்கன் தந்தானை அறியாதார் என்று 1000 காலத்துக்கு முன்பே பாடி வைத்தி ருக்கிறான் கம்பன்.

அவனை தென் தமிழ்நாட்டினர், மாத்திரம் அல்லாது வடநாட்டினரும் நன்கு அறிவார்கள். திருச்சியை அடுத்த ஸ்ரீரங்கன் ரயிலடியில் இறங்கி மேற்கு நோக்கி, ½ மைல்

நடந்தால் கோயில் வாயிலை அடையலாம். அன்று விபீஷணன் கொண்டு வந்த ரங்க விமானமும், ரங்கநாதனையும் காவிரி மணலில் புதைத்து விடுகிறார்கள். சோழமன்னன் தர்மவர்மா வேட்டைக்கு வந்தபோது, ஒரு கிளி அவன் காதில் அங்கு ரங்க விமானம் புதையுண்டு கிடந்த ரகசியத்தைச் சொல்லுகிறது. அதைக் கண்டு எடுத்து, அவ்விடத்தில் புதைந்து கிடந்த ரங்க விமானத்தை வெளிக் கொணர்கிறான் ஆலயம் கட்டி, அங்கு அரங்கநாதனை கிடத்தி வைத்த பிரதிஷ்டை செய்கிறான். ஆலயத்தில் பெரிய மதிலைக் கட்டியவன், திருமங்கை மன்னனே, மனைவியின் விருப்பப்படி, பரம பாகவதர் களுக்கு துதி ஆராதனை செய்வதையே மேற் கொள்கிறான். தன் கையில் பொருள் இல்லாதபோது, வழிப்பறி செய்கிறான். இவனுக்கு அருள்பாலிக்கவே அரங்கனும் துணைவியாரும், திருமணத்தம்பதிகளாக வந்தார்கள். மங்கை மன்னனும் கலியன் கையில் அகப்பட்டுக் கொண்டனர். கலியனும் இவர்களது ஆபரணங்களை எல்லாம் பறித்துக் கொண்டதும், மூட்டையாக கட்டிக் கொண்டு, எடுக்க முற்பட்டதும், இயலாதவனாக நிற்கிறான். இதன் காரணம் யாது என மணமக்களிடம் கேட்க, மணமகனாக வந்த நாராயணன் அஷ்டாக்ஷர மகா மந்திரத்தையே உபதேசிக்கிறான். இவ்வாறு ஞானோதயம் பெற்ற கலியனே, பின்னர் திருப்பதிகள் பல சென்று பாடிப்பாடி நாராயணனை பரவியிருக்கிறான். ஸ்ரீ ரங்கத்தில் கர்ப்பக்கிரகம் பிராணவாகரத்தில் அமைத்து கட்டப் பட்டுள்ளது. கர்ப்பக்கிரகத்தின் மேல் உள்ளே விமானம் தான் ரங்க விமானம் என அழைக்கப்படுகிறது. இதனையே ஆதியில், விபீஷணன் எடுத்து வந்த விமான மென்பர். வில்லிப்புத்தூரில் பெரியாழ்வார் திருமகளாக அவதரித்த ஆண்டாளும் இந்த ரங்கநாதனிடத்தில் காதல் கொள்கிறாள். ரங்கமன்னாராகவே சேவை சாதித்து அவளை மணந்து கொள்கிறார்.

டில்லி சுல்தானின் மகள் ஒருத்தியின் உள்ளத்திலும் அல்லவா இவன் காதல் விதைவிதைக்கிறான். பாதுஷா இந்த நாட்டைப் படையெடுத்து இங்குள்ள கோயில் கோபுரங்களை எல்லாம் இடித்து தரைமட்டமாக்கிய தெல்லாம் சரித்திரம் கூறும் உண்மை. பாதுஷா, ஸ்ரீ ரங்கம் வரை வந்து இங்குள்ள பல விக்ரகங்களை எடுத்துச் சென்றிருக்கிறான் விக்ரகங்களோடு விக்ரங்களாக அழகிய மணவாளனுமே சென்றிருக்கிறான்.

பாதுஷாவின் மகள் இந்த அழகிய மணவாளன் அழகில் ஈடுபட்டு, அவனை மட்டும் தன் அந்தபுரத்துக்கு எடுத்து சென்றிருக்கிறாள். ஸ்ரீ ரங்கத்தில உள்ளோர் பாதுஷாவை அணுகி, அவன் எடுத்துச் சென்ற அழகிய மணவாளரை திரும்பத் தரக் கேட்டிருக்கிறார்கள். பாதுஷாவும், தன் மகள் நித்திரையில் இருக்கும் சமயத்தில், அந்த விக்ரகத்தை அவர்களிடம் கொடுத்து அனுப்பியிருக்கிறான். விழித்தெழுந்ததும் மணவாள சிலையை காணாது அவனைத் தேடி ஸ்ரீ ரங்கத்துக்கே ஓடி வந்திருக்கிறாள். இந்தப் பிரேமை கொண்ட மங்கையை இந்த அரங்கநாதன் பின்னர் மணந்து கொண்டதில் வியப்பில்லை. பாதுஷா மகளே, துலுக்க நாச்சியார் என்ற பெயரிலேயே, ஆலயத்துள்ளேயே, தனிக்கோயிலில் இருக்கிறாள். இங்கு வீற்றிருக்கும் சித்திர வடிவில் பெருமாளுக்கு நிவேதனம் ரொட்டியும், வெண்ணையும் படைத்துள்ளனர். இதன் செலவுக்காகவே, பாதுஷா கொற நாட்டில் 2 கிராமங்களையே சீதனமாக வேறு கொடுத்தி ருக்கிறாராம்.

இவ்வாறு மனைவியர் எல்லாம் சேர்த்துக் கொண்டு இருக்கிறாரே, இது சரிதானா என்று ஒரு கேள்வி. இறைவன், அடியார்களை எல்லாம் தன் காதலிகளாக ஏற்றுக் கொள்ளத் தயங்குவதில்லை. இந்த தத்துவத்தை உணர்த்தவே, இத்தனை விதமான திருவிளையாடல்கள் என்றும் மட்டும் தெரிந்து கொண்டால், உண்மை என்னவென்று விளங்கும்.

# 41. பங்குனி உத்திரத்தின் சிறப்பு

ஞானசம்பந்தர் தமிழர்கள் கொண்டாட வேண்டிய விழாக்களின் பட்டியலை பூம்பாவையை உயிர்பிக்க எண்ணி பாடிய போது குறிப்பிட்டுள்ளார்.

கார்த்திகை மாதத்தில் பவுர்ணமி அன்று எந்த நட்சத்திரம் சேர்கிறதோ அன்று தீப விழா கொண்டாடுங்கள், மார்கழியில் பவுர்ணமியில் எந்த நட்சத்திரம் சேர்கிறதோ அன்று ஆதிரை விழா கொண்டாடுங்கள், தை மாதத்தில் பவுர்ணமியன்று பூசம் நட்சத்திரம் சேர்வதால், தைப்பூச விழா கொண்டாடுங்கள். மாசி மாதத்தில் பவுர்ணமியன்று மகம் சேருவதால் மாசிமகத்தன்று கடல் ஆட்டு விழா கொண்டாடுங்கள், பங்குனி மாதத்தில் பவுர்ணமியன்று உத்திரம் நட்சத்திரம் சேர்வதால், பங்குனி உத்திர விழா கொண்டாடுங்கள் எனக்கூறியுள்ளார்.

இப்பொழுது பங்குனிமாதத்தின் உத்திரத்தன்று கொண்டாடச் சொன்ன விழாவினைப்பார்ப்போம். இதைக்குறித்து சம்பந்தர் பாடல் :

*"மலி விழா வீதிமட நல்லார் மாமயிலை*
*கலிவிழாக் கண்டான் கபாலிச்சுரம் அமர்ந்தான்*
*பலி விழாப் பாடல் செய் பங்குனியத்திரத்தின் நாள்*
*ஒலிவிழா காணாதே போதியோ பூம்பாவாய்"*

என்பதாகும். 1200 ஆண்டுகளுக்கு முன்னரே ஞானசம்பந்தரால் பங்குனி உத்திரத்தைப் பற்றி பாடியிருந்த போதிலும் 2500 ஆண்டுகளுக்கு முன்னரே இதைப்பற்றி

இலக்கியத்தில் கூறப்பட்டுள்ளதால் மேலும் இதன் விசேடத்தை அறியமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் அகநானூறு எனும் நூலில் 137-வது பாடல் ஒன்றில் இதைப்பற்றி குறிப்பு ஒன்று வருகிறது. தலைவன், தலைவி உரையாடலும், உடனிருந்து தோழியின் நல்லுரைகளும் கூறப்படும் நூலாகும்.

பண்டையகாலத்தில், ஒருவன் வீட்டைவிட்டு வெளியூர் செல்வதானால் மூன்றே மூன்று காரணங்களின் அடிப்படையில் செல்வது வழக்கம்.

1. பணம் சம்பாதிக்க அயல் நாடு சென்று வியாபாரம் செய்யச் செல்லுதல்.

2. நாட்டில் போர் நேரிட்டால், நாட்டிற்காக போரிடச் செல்வது.

3. தலங்களையும், தீர்த்தங்களையும் தரிசிக்கும் பொருட்டு கால்நடையாக யாத்திரை செல்வது.

ஒருவன் தன் மனைவியிடம் தான் வெளிநாடு செல்ல உள்ளதாகவும் திரும்பிவர மாதமாகும் எனக் கூறியதைக் கேட்டதிலிருந்து மனைவியானவள் அன்றிலிருந்து குளிக்காமலும், அலங்கரித்துக் கொள்ளாமலும் சரிவர உணவு உட்கொள்ளாமலும் நெற்றியில் குங்குமமிடாமலும் விளங்கியதைக் கண்ட தோழியானாவள் அவளிடம் எதற்காக இவ்வாறு அலங்கோலமாய் இருக்கிறாய். உன் கணவன் சொன்னாரே தவிர இன்றுவரை உன்னைவிட்டு பிரியவில்லையே. பிரியவும் மாட்டார்.

அதனால், கவலையைவிட்டு இருப்பாயாக என்று சொல்லி அவளுக்கு பங்குனி உத்திரத்தின் சிறப்பைப் பற்றி கூறியுள்ளதை அகநானூறு பாடலின் மூலம் விளக்கம் அளித்தால். பாடலைப்பார்ப்போம் :

*"பங்குனி முயக்க கழிந்தவழிநாள், தீயின் அருப்பின்*
*அரங்கம்போல் பெரும் பாழுகொண்டது உந்தன் நுதலே"*

என்பதாகும்.

**பாடலின் கருத்து** : நம் நாட்டில் சிவாலயங்களில் பங்குனி மாதத்தில் உத்திரத்தன்று வெகு சிறப்பாக விழா கொண்டாடுவர். அன்று, பல ஊர்களிலிருந்தும் மக்கள் திரளாக வந்து கூடுவார்கள். நாதஸ்வர இசையும், வாணவேடிக்கைகளும் காண கூட்டம் கூட்டமாக வருவார்கள். அந்த விழா முடிந்த மறுநாள் அந்த இடத்தைப் பார்த்தால் வெறிச்சென்றிருக்கும். கோலாகலமாக கொண்டாடிய விழா, மறுநாள் எவ்விதம் வெறிச் சென்றிருக்கிறதோ, அதுபோன்று, நீ அலங்காரம் செய்து கொள்ளாது, உணவு உட்கொள்ளாது, குங்குமமிடாது விளங்கும் காட்சியை ஒத்திருக்கிறது. குளித்து, அலங்கரித்துக் கொண்டு, குங்குமப் பொட்டோடு விளங்கினால், பங்குனி உத்திர திருவிழா போன்று மங்களகரமாக இருக்கும் எனும் கருத்தினை பாடல் விளக்குகிறது.

தாட்சாயணி, தன் தந்தை தட்சனால் ஏற்பட்ட அவமானம் தாங்காது, இனி எவரும் உலகில் பெண் குழந்தைகளுக்கு தாட்சாயணி எனும பெயர் வழங்காது இருக்கும் பொருட்டு, தீயினால் மாய்த்துக் கொண்டு, மறுபிறப்பெடுத்து, இறைவனை அடைய எண்ணி, இமயவரம்பனுக்கு மகளாக பிறந்து, காஞ்சியில் கம்பநதியில் சிவனைக் குறித்து, 32 அறங்களை வளர்த்ததால், இறைவனே காஞ்சியில் ஏகாம்பரநாதனாக வந்து, காமாட்சியை திருமணம் செய்து கொண்ட நாளாம் பங்குனி உத்திரமேயாகும். மேலும் இராமருக்கும், சீதைக்கும்

திருமணமானதும் இதே மாதத்தில் தான். இதனால் பங்குனி உத்திரத்திற்கு உள்ள சிறப்பை அறிய முடிகிறது.

நம் நந்தி அடிகள் என்பவர் குறிக்கோளுடன் வாழ்ந்த சிவ பக்தர் ஆவார். இறைவன் சன்னிதியில், எண்ணெய் விளக்கு ஏற்றி வருவதையே குறிக்கோளாக கொண்டு வாழ்ந்தவராவார். ஒரு விளக்கெரிக்க எண்ணெய் கிடைக் காததால் இறைவனை துதி செய்து, தண்ணீர் விட்டு விளக்கேற்றின பெரியராவார். இதனைக் கேள்வியுற்ற அரசர், இவரை குருவாக ஏற்று, என்றென்றும் விளக் கெரிக்க உதவும் எண்ணெய்க்காக, சில நிலங்களை இவர் பெயரிலேயே நிபந்தம் செய்து கொடுத்த போது, பங்குனி உத்திரத்தன்று ஆலயத்தில் நிறைய விளக்குகள் எரிக்க, இன்னும் சில நிலங்களை நிபந்தம் செய்து கொடுத்தார். இத்தகைய பங்குனி உத்திரத்தின் சிறப்பைப் பற்றி சம்பந்தப் பெருமான் கூறியுள்ளதை, உலகினர்க்கு விளங்க வைத்த பெருமை நமிநந்தி அடிகளையே சாரும். மேலும், வள்ளலாரும் பக்தி மேலிட்டு, மேட்டுக்குப்பத்தில் தண்ணீர் விட்டு விளக்கு எரித்தார் இதுசரித்திர வரலாறு.

# 42. சேயாற்றில் வென்றான்

பல்லவ மன்னர்கள் இலக்கியப்பெருமை பெற்றவர்கள். நந்திவர்மன் தொண்டை மண்டலத்தை ஆண்டவன் ஆனதினால் நந்தியம்பெருமான் தொண்டைமான் என்ற பெயரும் பெறுகிறான். இவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு ஒரு கலம்பகம் எழுதியிருக்கிறான் ஒரு புலவன் கலம்பகம் பாடிய புலவன் நந்திவர்மன் தம்பியே என்றும், இருவருக்கும் இருந்த பகை காரணமாகக் கலம்பகத்தில் அறம் வைத்துப் பாடினான் என்றும் கலம்பகப் பாடல்களைக் கேட்டால் உயிர் துறக்க நேரிடும் என்று கவிஞனே எச்சரித்த போதும், தமிழ்க் கவிதையில் உள்ள ஆர்வத்தால் கலம்பகப் பாடல்களைப் பாடக் கேட்டு, கடைசியில் சிதையில் ஏறி உயிர் நீத்தான் அவன் என்றும் கர்ண பரம்பரைக் கூறும். கலம்பகப் பாடல்களைப் படித்தால், அப்படியே உயிர் கொடுத்தும் கேட்கக் கூடிய பாடல்களே என்று தோன்றும். (கதையில் உண்மை ஒரு சிறிதும் இல்லாவிட்டாலும் கூட) கலம்பகத்தின் மூலம் அவனது வெற்றிப் பிரதாபங்களையெல்லாம் அறிகிறோம் நாம். பாண்டியர், சோழர், சாளுக்கியர்களை, நெள்மவி, மண்ணைக்குடி, கருவூர் என்ற இடங்களில் நடந்த போர்களில் இவனே வெற்றி பெற்றிருந்தும், கலம்பகத்தில் இவன் தெள்ளாற்றில் பகைவர்களை வெற்றி கண்டதையே பிரதானமாகக் கூறியிருக்கிறது. 'தெள்ளாறை நந்தி', 'தெள்ளாற்றில் வென்றான்' என்ற விருதுப் பெயர் நிலைத்து நின்றிருக்கிறது. இவனது கல்வியறிவு, வள்ளன்மை, போரில் வெல்லுந் திறத்தை யெல்லாம் கலம்பகம் பாடிய

கவிஞன் மட்டுமல்ல, பாரதம் பாடிய பெருந்தேவனாரும் பாராட்டியிருக்கிறார். ஓர் அழகான பாட்டில்

*"உண்மையால், கல்வியால்*
*மாபலத்தால் ஆள்வினையால்*
*வன்மையால் பாரான்*
*உரிமையால் - திண்மையால்*
*தேர்வேந்தர் வான்ஏறத்*
*தெள்ளாற்றில் வென்றானொடு*
*யார் வேந்தர் ஏற்பார் எதிர்.*

தெள்ளாற்றில் வென்றான் என்ற பெயர் நந்திவர்மனுக்கு நிலைத்தது போல, சேயாற்றில் வென்றான் என்ற பெயரும் வட ஆற்காடு மாவட்டத்தில் ஒரு சிறு ஊருக்கு நிலைத்திருக்கிறது. இந்தச் சேயாற்றில் வென்றவன் வேறு யாருமில்லை. சமயக்குரவர்களில் முதல்வரான ஆளுடைய பிள்ளையாம் ஞானசம்பந்தரே. அந்த வரலாறு என்ன என்று தெரிந்து கொள்ள செய்யாறு என்று இன்று வழங்கும் திருவோத்தூர் என்னும் தலத் துக்குப் போகிறோம்.

இளவயதினராக இருந்த ஞானசம்பந்தர், நாட்டில் பரவி இருந்த புறச் சமயத்தினராம் சமணரோடு வாதிட்டு வெற்றி காணவேண்டியவராகவும் இருந்திருக்கின்றார். மதுரையில் சமணர்களோடு கனல்வாதம், புனல்வாதம் எல்லாம் புரிந்து அவர்களை வென்று, அங்கிருந்து ஆண்ட கூன் பாண்டியனின் கூனை நீக்கி, அவனைச் சுந்தர பாண்டியனாக்கி அவனது மனைவி மங்கையர்க்கரசி, அமைச்சர் குலச்சிறை முதலியவர்களால் வணங்கித் துதிக்கப் பெற்றவர் அவர் என்பது வரலாறு. இந்தச் சமணர்கள் அவரை இத்துடன் விட்டுவிடவில்லை. பாண்டிய நாடு, சோழ நாடு எல்லாவற்றையும் சுற்றிவிட்டு

தொண்டை நாட்டிலே உள்ள திருவோத்தூர் என்னும் தலத்துக்கு வந்தாலும் அங்கேயும் சமணர்கள் ஆதிக்கம் மிகுந்திருப்பதையே காண்கின்றார். தென் திசையிலிருந்து வந்த ஞானசம்பந்தர் சேயாற்றின் தென் கரையில் இருந்தே, திருவோத்தூர் வேதபுரி நாயகன் கோபுரத்தையும், மதிலையும் தரிசித்து அந்தக் கரையிலுள்ள திருமடத்தில் தங்குகிறார். மதுரையில் ஞானசம்பந்தர் நிகழ்த்தியவை களைக் கேட்டிருந்த சேயாற்றுச் சமணர்கள் ஒரு வேள்வி செய்து அதிலிருந்து எழுந்தகொடிய பாம்பொன்றை அவர்மீது ஏவுகின்றார்கள். அவரோ பாம்பை, சமணர்களது

*"வேந்தன் வாழ் இஞ்சி சூழ் திருமனைக்கே ஏகென்று"*

உதறிவிடுகிறார். அதனால் துயருற்ற அரசன் வந்து அடிவணங்க, ஞானசம்பந்தர்

*"தோட்டீரே துத்தி ஐந்தலை நாகத்தை*
*ஆட்டீரே அடியார்வினை*
*ஓட்டீரே உம்மை ஏத்துதும் ஓத்தூர்*
*நாட்டீரே அருள் நல்குமே"*

என்று இறைவனை வேண்டுகிறார். இறைவனும் மகுடி ஏந்திப் பாம்பாட்டியாக வந்து கண்டோர் வியக்கப் பாம்பை ஆட்டிவிட்டு அதைப் பிடித்துக் கொண்டே கோயிலுக்குள் சென்று மறைகிறார். இதனால் சமணர் பகை வளர, அரசன் விரும்பியபடி புனல்வாதத்திற்கே ஒத்துக்கொள்கிறார். சமணர்கள் எழுதியிட்ட ஓலையைச் சேயாற்று வெள்ளம் அடித்துக் கொண்டு போய் விடுகிறது. ஆனால் ஞானசம்பந்தர் பாடிய பதிகத்தில் ஒரு பாட்டை ஏட்டில் எழுதி ஆற்றில் இட, அது புது நீரைக் கிழித்துக் கொண்டு முன்னேறி ஒரு பழம் பகுதியை அடைகிறது. இவ்வாறு ஏடு எதிர் சென்று நின்று தங்கின இடமே அன்று முதல்

சேய்யாற்றில் வென்றவான் என்ற பெயரால் வழங்கப் படுகிறது. சேயாற்றில் வென்றவன் வேதபுரி நாயகனும் அவர் புகழ் பாடும் நற்றமிழ் வல்ல ஞான சம்பந்தனுமே என்றாலும் பெயர் நிலைக்கிறது ஒரு சிறு ஊருக்கு இப்படியெல்லாம் தோற்றாலும் சமணர்கள் மாத்திரம் தங்கள் வாதத்தை விடுபவர்களாக இல்லை. இவ்வூர்க் கோயிலிலும் ஆற்றங்கரையிலும் காயாது நிற்கும் ஆண்பனைகள் நிற்கின்றன. அவைகளைக் காய்க்கும் பெண் பனைகளாக ஆக்க முடியுமா? என்று சம்பந்தருக்கு மறுபடியும் 'அறைகூவல்' விடுகிறார்கள். அந்தச் சவாலை ஏற்று "குரும்பை ஆண் பனை ஈண்டுலை ஓத்தூர்" என்ற பாடலைப் பாட, எல்லோரும் அதிசயிக்கும் வண்ணம் கோயிலுக்குள் நின்ற ஆண் பனை குலைதள்ளி, பெண் பனையாக மாறுகிறது. இதனைக் குறித்து அருணகிரியார், "தவர்வாட்டோமர" எனத்துவங்கும் திருபபுகழ் பாடலில் - 5வது அடியில்,

> *"பவமாய் தாணதுவாகும் பனைகாய்த்தே மணநாறும்*
> *பழமாய் பார்மிசை விழும்படி"*

என குறிக்கப்பட்டுள்ளது கவனிக்கற்பாலது. பவமாய்த்து ஆணதுவாக்கும் எனப்பிரிக்க. இன்றைக்கும் அந்தப் பனைகளின் வாரிசாகக் கோயில் பிரகாரத்தில் குலை ஈனும் ஐந்து பனைகள் நின்று கொண்டிருக்கின்றன.

இந்த விதமாகச் சமணர்களை யெல்லாம் வெற்றி கண்ட இடமாகவும், ஆண் பனை பெண் பனையாக அற்புதம் நிகழ்த்திய தலமாகவும் இருப்பதே சம்பந்தர் தேவாரம் பெற்ற திருவோத்தூர் என்று அன்று வழங்கின இன்றைய செய்யாறு இங்கு கோயில் கொண்டிருப்பவர் தான் வேதபுரி நாயகன் அவர் துணைவியின் திருநாமமோ இளமுலை

நாயகி. வேதங்களையெல்லாம் உலகுக்கு வழங்கிய பெருமகனான இறைவனை வேதபுரியான் என்று இத்தலத்தில் மட்டும் அழைப்பானேன்? வேதங்களை ஓதியுணர்ந்து பிறருக்கு உரைக்கும் முனிவர்களே வேதம் ஓதுதலை மறந்துவிடுகிறார்கள் அவர்கள் எல்லோருமாக வேண்ட இறைவனே வேதியர் உருவில் வந்து தேவர் முனிவர்களுக்கெல்லாம் வேதத்தை விரித்து ஓதுகிறார். வேதம் ஓதுவித்த ஊர் ஒத்தூர் எனப்பெயர் பெறுகிறது. இதை இறைவனே சொல்லுவதாகக் காஞ்சிப் புராணம் கூறும்.

*"தத்து நீர் அலைபுரட்டும் சேயாற்றின்*
*தடங்கரைக்கண், இமையோர்கட்கும்*
*மெய்த்தவர்க்கும், ஓதுவித்தோம் ஆதலினால்*
*மேவு திருவோத்தூர் என்றும்*
*அத்தலத்தில் எமைத் தொழுவோர்*
*அருமறை நூல் முழுதுணர்ந்து வீடுசேர்வர்*

என்பது பாட்டு. இனி அந்த மறைகளே விரும்பியபடி வேத ஒலிகளை எல்லாம் சிவபெருமான் தமது டமருகத்தில் அடக்கி, அந்த டமருகத்தை ஒலித்துக் கொண்டு வீர நடனம் ஆடிய தலமும் இதுவே என்று தலவரலாறு கூறும். கோயிலில் உள்ள நடராஜரது திருவுருவில் வீர நடனத்தின் புதிய சாயை ஒன்றும் இல்லைதான் என்றாலும் அங்கு வீர நடனம் ஆடும் பெரிய பிள்ளை உண்டு. கோயில் கோபுர வாயிலைக் கடந்து அதற்கடுத்த வாயிலைக் கடந்து வெளி மண்டபத்தையும் கடந்து உட்கோயிலுக்குச் செல்லும் வழியில் ஒரு பிள்ளையாரை வெளியே நிறுத்தி இருக்கிறார்கள். அவருக்கு மார்புவரை ஒரு துணியையும் சுற்றிவைத்திருக்கிறார்கள். கலை உள்ளம் படைத்த

அன்பர்கள் அர்ச்சகரை அழைத்துப் பிள்ளையாருக்கு அணிந்திருக்கும் அந்த வஸ்திரத்தை அகற்றினால் அவர் ஒரு நர்த்தன விநாயகர் என்றும் அந்தத் திருக்கோலம் மிகவும் அழகான வடிவம் என்றும் காண்பர்.

> *"வென்றாடு திருத்தாதை வியந்து கைத்துடி*
> *கொட்ட நின்றாடும் மழகளிறு"*

என்று அன்றே அழைத்திருக்கிறார்கள் பக்தர்கள். வீர நடனம் ஆடிய தந்தை துடி கொட்ட வீர நடனமே ஆடுகிறார் விநாயகர். கலை உலகில் ஓர் அரிய சிருஷ்டி அது. நாலடி உயரத்தில் திருவாசியும் சேர்த்து ஒரே கல்லில் செய்யப்பட்டுள்ள திருவுருவம் அது.

இனி கோவிலுள் சென்று வேதபுரி நாதனையும் இளமுலை நாயகியையும் தொழுது திரும்பலாம். வேதபுரியானைப் பற்றித்தான் வேண்டிய மட்டும் தெரிந்து கொண்டோமே அம்மையைப் பற்றியும் தெரிந்துக் கொள்ள வேண்டாமா? தக்கன் மகளாகிய தாக்ஷாயணியை இறைவன் மணந்து கொள்கிறான் மாமனாராகிய தக்கனுக்கு, மருமகனாகிய இறைவனை விடத் தான் உயர்ந்தவன் என்ற செருக்கு. அதனால் இருவருக்கும் பிணக்கு. தக்கன் இயற்றும் வேள்வியில் மருமகனுக்கு அக்ரஸ்தானம் இல்லை என்பது மட்டுமல்ல அழைப்பே இல்லை. இறைவனுக்கோ ஒரே கோபம் மாமனுக்கும் மருமகனுக்கும் இடையே வளர்ந்துள்ள கசப்பைத் தீர்த்து வைக்க மகளே புறப்படுகிறாள். தக்கன் வேள்வி நடத்தும் இடத்துக்கு. அங்கு அவளுமே அவமதிக்கப்படுகிறாள் தந்தையால். அதனால் தன்னுடலையே தீக்கிரையாக் குகிறாள் தாக்ஷாயணி. பின்னர் இறைவன் அருளால் இமவான் மகளாகப் பிறந்து வளர்ந்து பேதைப் பருவம்

எய்துகிறாள். பரமனை அடையக் கருதித் தவச்சாலைப் புகுந்துத் தவக்கோலம் கொள்கிறாள். தவத்திற்கு இரங்கிய இறைவன் "இளமுலையே! நீ எனது வார்த்தையைக் கேட்காமல் தக்கன் வேள்விக்குச் சென்றாய். கொண்ட புருஷனின் சொல்லைத் தட்டியபாவம் நீங்கினால்தான் உன்னை மணப்பேன்" என்கிறார். அம்மையும், "நானோ பேதைச் சிறுமி, பாவம் தீரும் வழியை அருள வேண்டும்" என்று வேண்டுகிறாள் அவரும் "திருவோத்தூர் என்னும் தலத்துக்குச் சென்று என்னை நோக்கித் தவம் செய்" என்கிறார். அப்படியே செய்து இளமுலை நாயகி இறைவனை மணந்து கொள்கிறாள். அம்மையின் திருஉரு அழகான தொன்று பேதைப் பருவத்திலே தவம் புரிந்து பெதும்பைப் பருவத்திலேயே இறைவனை மணந்து கொண்டவள் அவள். மங்கைப் பருவத்தில் மணாளனை மணந்து கொண்ட நங்கையாக மற்றைய கோயில்களில் காட்சி தருபவளே இந்தத் தலத்தில் இளவயதில் இறைவனை மணந்த பேதையாக நிற்கிறாள்.

சம்பந்தர் பாடிய பதிகம் ஒன்றைத் தவிர இப்பதியைப் பாடிய பெருமக்கள் பலர். 'நிலவு புகழ் திருவோத்தூர்' என்று பட்டினத்தடிகள் பாடினார். 'சீத மலர்மென் சோலை சூழ் திருவோத்தூர்' என்று சேக்கிழார் பாடுகிறார். தலபுராணம் ஒன்றும் பாடப்பட்டிருக்கிறது. விரிவாக காஞ்சிக்குத் தெற்கே பதினெட்டு மைல் தொலைவிலேயே இருப்பதால் அன்பர்கள் சென்று 'இளமுலையாம் ஆத்தாள் தனைப் பணிந்து, அன்பால் துதித்து, அருள் படிந்து கூத்தாடியதாள் உளத்து இருத்தி மீளலாம்'.

# 43. அல்லிக்கேணி அழகன் சாரதி

பார்த்தனுக்கு அன்று கண்ணன் செய்த கீதை உபதேசம் பாரில் உள்ள மக்களுக்கு எல்லாம் இன்று பயன்படுகிறது. 'பலன் கருதாது உன் கருமத்தைச் செய்யக் கற்றுக் கொள்' என்று கீதாசாரியனான கண்ணன் பார்த்தனுக்குக் கூறியிருக்கிறான் அன்று. கீதோபதேசம் செய்ய நேர்ந்த சந்தர்ப்பம் பாரதக் கதையிலேயே ஓர் அழகான கட்டம் அதைக் கீதையிலேயே விரிவாகக் குறிப்பிட்டிருந்தாலும், மிகவும் ரத்தினச் சுருக்கமாக அழகான வெண்பாக்களில் கூறுகிறார். பாரதம் பாடிய பெருந்தேவனார் குருக்ஷேத்திரத்திலே பாண்டவர் படையும் கௌரவர் படையும் அணிவகுத்து நிறுத்தப்பட்டு இருக்கின்றன. அப்போர்க்களத்துக்கு அர்ச்சுனன் வருகிறான் தேரூர்ந்து தேரை நடத்துபவன் கண்ணன். பாண்டவரில் ஒருவனான அர்ச்சுனன் எதிர்ப்பக்கத்தில் இருக்கும் உறவினர்களையும் படைவீரர்களையும் பார்த்த உடனே இத்தனை பேர்களையும் கொன்று குவித்துத்தான் நாடாட்சி செய்ய வேண்டும் என்றால் அந்த அரசு அவசியம் வேண்டியதுதானா என்ற எண்ணுகிறான். உள்ளத்தில் ஒரு சோர்வே ஏற்படுகிறது. அவனுக்கு கையில் உள்ள வில் நழுவுகிறது. தேர்த்தட்டின் மீதே திகைத்து இருக்கிறான்.

*"உற்றாரை எல்லாம்*
*உடன்கொன்று அரசாளப்*
*பெற்றாலும் வேண்டேன்*
*பெருஞ்செல்வம் - சொலத்தாழ்ந்து*

*வான்தடக்கையில் நெகிழ*
*வாளா இருந்திட்டான்*
*தேர்த்தட்டின்மீதே திகைத்து*

என்று ஆரம்பிக்கிறார் பெருந்தேவனார். பூபாரம் தீர்க்கப் பிறந்த புயல் வண்ணனான கண்ணன் இந்த நிலையில் பார்த்தனைப் பார்க்கிறான். அவனுக்குக் கீதோபதேசமே செய்கிறான். 'இவ்வுலகில் ஒவ்வொரு மனிதனும் தான் செய்யும் காரியங்களுக்குத் தானே கர்த்தா என்று எண்ணிக் கொள்வதனால் தானே இத்தனை மனக்கஷ்டம். ஆக்கி, காத்து, அழிப்பவன் இறைவன். ஆதலால், செய்யும் காரியங்களையெல்லாம் அவனே செய்கிறான் என்று மட்டும் எண்ணத்தெரிந்துவிட்டால் எவ்வளவு கஷ்டங்கள் மனிதன் மனத்தில் இருந்து நீங்கிவிடும். மேலும், கருமங்களின் பலாபலன்களைச் சிந்திப்பதும் மனிதன் செய்ய வேண்டிய செயல் அல்லவே. பலன் கருதாது பணி செய்ய மனிதன் கற்றுக் கொள்ள வேண்டுமே. ஆதலால் பார்த்தா! நீ உன் கருமத்தைச் செய். பலாபலன்களைச் சிந்தியாதே என்று உபதேசிக்கிறான் பார்த்தசாரதியான கண்ணன். அப்படி உபதேசம் பண்ணியவன் எல்லாம் அண்டங்களிலும் அவனே நிறைந்திருக்கிற தன்மையை விளக்கத்தனது விசுவரூபத்தையே காட்டுகிறான். இதையுமே சொல்கிறார் பெருந்தேவனார்.

*"பிறப்புநிலை கேடு*
*இவையாவான் பாவம்*
*அறத்தினோடு ஐம்பூதம்*
*ஆவான் உணற்கரிய*
*வானாவான் மண்ணாவான்*
*மன்னுயிர்கள் அத்தனையும்*
*தான்ஆதல் காட்டினான்தான்".*

இந்த உபதேசத்தைக் கேட்டு, இந்த விசுவரூபத்தைத் தரிசித்தபின், பார்த்தனது மயக்கம் தெளிகிறது. போர் ஏற்கிறான். போரில் பகைவர்களையெல்லாம் வென்று வாகை சூடுவதற்குக் காரணமாயிருந்தவனும் அவன்தானே. ஆம், அந்த பார்த்தசாரதியாம் கண்ணன்தானே. அந்தப் பார்த்தசாரதி கோயில் கொண்டிருக்கும் இடம் தான் சென்னையின் ஒரு பகுதியான திருஅல்லிகேணி அங்கு தான் செல்கிறோம் இன்று.

மகாவிஷ்ணு எடுத்த அவதாரங்கள் பத்து ஒவ்வொரு அவதாரத்திலும் அவர் கொண்ட கோலங்கள் பல. அதில் பார்த்தனது சாரதியாய் இருந்து தேரோட்டியது கிருஷ்ணா வதாரத்தில் கிருஷ்ணனுக்கு என்று பல கோயில்கள் இருந்தாலும் பார்த்தசாரதிக் கோலத்துக்கு என்று இருப்பது இக்கோயில் ஒன்றே ஒன்றுதான். மேலும், ஒரு விசேஷம் இக்கோயிலில். அரங்கநாதனைக் காணக் கோயில் என்னும் ஸ்ரீரங்கம் செல்லவேண்டும். வேங்கடேசனைப் பார்க்க, திருமலை என்னும் வேங்கடமலைமேல் ஏற வேணும் வரதராஜனைக் காண பெருமாள் கோயில் என்னும் காஞ்சிக்கே போக வேணும். இன்னும் நரசிம்மனைக் காண அஹோபிலமும், ராமனைக் காண அயோத்திக்குப் போக வேண்டும். ஆனால் இந்தப் பஞ்சமூர்த்தியை இந்தத் திருவல்லிக்கேணி கோயில் ஒன்றிலேயே கண்டு விடலாம். அங்கு பார்த்தசாரதியைத் தொழச் சென்றால் பஞ்ச பாண்டவர்க்காகத் தூது சென்ற பார்த்தசாரதி கோயிலிலே பஞ்சமூர்த்திகளையும் ஒருங்கே வழிபாடு செய்ய வகை செய்திருக்கிறார்களே அதுவே ஒரு பெரிய விசேஷம் தானே.

இந்தக் கோயிலைப் படத்தில் பார்த்தாலும் சரி நேரில் சென்று கண்டாலும் சரி, கோயில் முன்னால் சந்நிதிக்கு நேர் எதிரே இருக்கும் புஷ்கரணியைப் பார்க்காமல் இருக்காது.

அதுவே ஆதியில் அல்லி மலரும் கேணியாயிருந்து பின்னர் விரிந்து பெரிய தெப்பக்குளமாக இருக்க வேணும். இதனையே கைரவணி புஷ்கரணி என்று நீட்டி முழக்கிச் சொல்கிறது ஸ்தல புராணம். இந்த புஷ்கரணி தீர்த்தம் கங்கையை விடப்புனிதம் என்று கூறும் தல வரலாறு. இத்திருக்குளத்தில் மீன்களே வசிப்பதில்லை. யாரோ ஒரு முனிவர் இக்குளக்கரையில் தவம் செய்யும்போது குளத்தில் உள்ள மீன்கள் துள்ளி விளையாடி அவர் தவத்தைக் கலைத்ததென்றும் அதனால் கோபமுற்ற முனிவர் இக் குளத்தில் மீன்களே இல்லாமல் போக என்று சபித்ததாகவும் கதை. இந்தப் புஷ்கரணியில்தான் பார்த்தசாரதியின் தெப்போற்சவம் ஏழு நாட்கள் நடைபெறுகிறது சிறப்பான திருவிழா.

இனி கோயிலுள் நுழையலாம். கோயிலின் முன்புள்ள மண்டபங்களைக் கடந்துதான் மகா மரியாதை வாயிலுக்கு வரவேணும். இந்த வாயிலுக்கு மேல்தான் முகத்துவாரக் கோபுரம் இருக்கிறது. ஐந்து அடுக்கும் ஏழு கலசமும் கொண்ட கோபுரம் புதுப்பிக்கப் பட்டிருக்கிறது. சில வருஷங்களுக்கு முன்னமேயே இதைக் கடந்து இன்னும் உள்ளேயிருக்கும் தொண்டரடிப்பொடி வாசலையும் கடந்துதான் பார்த்தசாரதியைச் சேவிக்கும் முன்பே மற்றவர்களையெல்லாம் தரிசித்து விட வேணும் என்று. ஆகவே, பார்த்தசாரதியை வலமாகச்சுற்றி வணங்க வேண்டியவர்களை வணங்கி விடலாம் முதலில் சந்நிதி வாயிலிலிருந்து தென்பக்கம் திரும்பியதும் நம்மை ஆட்கொள்ள இருப்பவள் வேதவல்லித்தாயார். இவள் சர்வாங்க சுந்தரி. ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீமத் நாராயணனோடு கூடிய மகா லக்ஷ்மி பூலோகத்தில் பிருந்தாரண்யம் என்னும் இந்தத் திருஅல்லிக்கேணிக்

கரையிலே பிருகு மகரிஷியின் பர்ணசாலையருகே ஒரு சந்தன மரத்தடியிலே பெண் மகவாகத் தோன்றுகிறாள். அவளை எடுத்து வேதவல்லி என்று பெயரிட்டு வளர்க்கிறார் பிருகு மகரிஷி. இவள் மங்கைப் பருவம் அடைந்தபின் இவளைக் கண்டு காதலித்து மணம் புரிந்து கொள்கிறான் மந்நாதன். இவனைக் கண்டு 'இவனே என்நாதன்' என்று வேதவல்லி மிக்க நாணிக்கேணி கூறியதால் இவன் மந்நாதன் என்று பெயர் பெற்று இங்கேயே தங்கிவிடுகிறான். கொஞ்சம் சவுகரியமாகக் காலை நீட்டியே படுத்தும் விடுகிறான். இந்த மந்நாதனுக்கு ஒரு தனி சந்நிதி இக்கோயிலின் உள்ளேயே. இந்த 'ஒரு வல்லி தாமரையாள் ஒன்றிய சீர்மார்பனையே திருவல்லிக்கேணி வந்து கண்டு' தொழுதார் பேயாழ்வார்.

இனி நாம் வணங்க வேண்டியவர் தெள்ளிய சிங்கமாம் நரசிங்கப்பெருமானையே. இவர் பார்த்தசாரதியின் கர்ப்பக் கிருஹத்துக்குப் பின்பு மேற்கு நோக்கியவராம் யோக நிலையில் இருக்கிறார். இவர் இந்த பிருந்தாரண்யத்திலே அத்திரி மகரிஷிக்குப் பிரத்தியக்ஷம் ஆன அவசரத்திலே இருக்கிறார் என்பது புராண வரலாறு இந்தக் கோவிலுக்குள்ளே ராமன் எப்படிக் குடி புகுந்தான் என்பதற்கும் ஒரு வரலாறு உண்டு. சகிபதர் என்னும் முனிவர் பாண்டாரம் என்னும் மலையில் தவம் கலைகிறது. ஆண் மகவு பிறக்கிறது. அந்த ஆண் மகனை விட்டு விட்டுப் பிரிந்து விடுகிறன்றனர் முனிவரும், தேவ கன்னிகையும். குழந்தை மரத்திலிருந்து கொட்டிய தேனை உண்டே வளர்கிறது. மதுமான் என்றே பெயர் பெறுகிறது. இந்த மதுமானுக்குத் தரிசனம்தர அன்று மாயமானை விட்டுச் சென்ற ராமன் இங்கு எழுந்தருளியிருக்கிறார். அனுமனோடு சீதா லக்ஷ்மண பரத சத்ருக்கன சமேதனாக

இத்தனை பேர்கள் இங்கு வந்திருக்கும்போது அந்தக் கருடவாகனர் கஜேந்திர வரதராஜனைச் சும்மா இருக்க விடுவார்களா? ஸப்தகே என்ற மகரிஷி அவரை வரவழைக்கிறார். இங்கே அவருக்கும் ஒரு தனி சந்நிதி. இவ்விதமே மந்நாதன், நரசிம்மர், ராமர், வரதர் எல்லோருமே வந்து சேர்ந்திருக்கிறார்கள். இந்த கோயிலுக்கு இவர்களைத் தவிர ஆண்டாள், அனுமன், ஆழ்வார்களுக்கு எல்லாம் தனித்தனி சந்நிதி உண்டு.

ஆண்டாள் சந்நிதிப் பக்கத்திலிருந்து பார்த்த சாரதியின் கர்ப்பக்கிருஹத்தின் மேல் உள்ள ஆனந்த விமான சேவை செய்துவிட்டு பார்த்தசாரதியைத் தரிசிக்க விழையலாம். மூலத்தானத்தில் கம்பீரமாக முறுக்கிய மீசையே நீண்டுயர்ந்து தோற்றத்தில் காட்சி அளிப்பவனே வேங்கட கிருஷ்ணன் கர்ப்பக்கிருஹத்தில் நிற்கும் மூலமூர்த்தியை வேங்கடகிருஷ்ணன் என்றும் உற்சவ மூர்த்தியைப் பார்த்தசாரதி என்றும் அழைக்கிறார்கள். திருமலைமேல் நிற்கும் அம் மாதவனைக் கண்டு தொழச் சென்ற சுமதி என்ற தொண்டைமான் சக்கரவர்த்தி உள்ளத்தில் ஓர் ஆசை. 'உன்னை எத்தனையோ கோலங்களில் எல்லாம் காண்கிறேனே அன்று பார்த்தனுக்குச் சாரதியாய்த் தேர் ஊர்ந்தபோது எந்தக் கோலத்தில் இருந்திருப்பாய் என்று நான் காணவேண்டாமா?' என்று மிக்க ஆதங்கத்தோடேயே பிரார்த்தித்துக் கொள்கிறார். அவருடைய பிரார்த்தனைக்கு இரங்கி பிருந்தாரண்ய க்ஷேத்திரமான இந்தத் திருஅல்லிக்கேணியில் திருவேங்கமுடையானே, பார்த்தசாரதியின் கோலத்தில் எழுந்தருளுகின்றான் என்பது கதை. பார்த்தசாரதி தனியே வரவில்லை அண்ணன் பலராமன், தம்பி சாத்தகி, மனைவி ருக்மினி, மகன்

பிரத்யும்நன், பேரன் அநிருத்தன் சமேதனாகக் குடும்பத்தோடேயே இங்கு வந்திருக்கிறான். பார்த்தனுக்குத் தேரோட்டியாய் எழுந்த அவசரம் ஆனதால் சக்கர ஆயுதட் இல்லை இடது கையில். வலது கையில் சங்கு உண்டு. ஆம்! வெற்றியை ஊதி அறிவிக்கச் சங்கும் அவசியம்தானே. இடது கைவரத முத்திரையோடு இலங்குகிறது. மிக்க அழகோடு ருக்மினி பக்கத்திலே நிற்கிறாள். சிசுபாலனை மணக்க இருந்த அவளை அவள் விருப்பப்படியே சகோதரர் பலராமன் சாத்தகி முதலி யவர்கள் துணைக்கொண்டு தேரில் தூக்கிக் கொண்டு வந்து மணம் புரிந்து கொண்டவன் அல்லவா கண்ணன். ஆதலால் இத்தலத்திலே ருக்மினி கல்யாண உத்சவமும் சிறப்பாக நடைபெறுகிறது. மூலமூர்த்திக்கு முன்னால் உத்சவ மூர்த்தமாக நிற்பவனையே பார்த்தசாரதி என்கிறார்கள். இவர் ஸ்ரீ தேவி பூதேவி என்ற உபய நாச்சிமார்களோடேயே எழுந்தருளியிருக்கிறார். 'கண்ணன் என்னும் கருந் தெய்வம்' என்பதற்கேற்ப நல்ல கரியதிருமுக மண்டலம், நல்ல வசீகரமான திருமேனி முகத்தில் எல்லாம் போரில் ஏற்பட்ட வடுக்கள். ஆடை அணிகலன்களைப் பற்றியோ கேட்கவே வேண்டாம். எல்லாம் ஒரே வைரமயம். உத்சவர் கரத்தில் தேரோட்டுவதற்கு உரிய சாட்டை உண்டு என்பார்கள். அதையெல்லாம் நகைகள் மறைத்துவிடும். மூலவர் இடையிலேயிருந்து ஒரு கத்தி தொங்கும். பார்த்தனுக்குத் தேரோட்டும்போது ஆயுதமே எடுப்பதில்லை என்று சத்தியம் செய்து கொடுத்திருந்தானே அப்படி இருக்கக் கத்தியை இடையில் சொருகி இருப்பது சரிதானா? என்று எண்ணுவோம். நாம் இதற்குக் கீதாச்சாரியனாய் ஞானயோகத்தை விளக்கும்போது 'அஞ்ஞானம் வேர் ஊன்றி நெஞ்சில் எழும் ஐயங்களை ஞானவாளால் அறுத்துயோக நிலைகொள் பார்த்த! எழுந்து

நில்' என்று கண்ணன் கூறியதை நினைத்து, பார்த்த சாரதியின் இடையில் இருப்பது அந்த ஞானவாளே என்று கொண்ட நம் சந்தேகமுமே நீங்குந்தானே.

இந்த அல்லிக்கேணி நிற்கும் அமுதனைப் பேயாழ்வார், திருமழிசை ஆழ்வாரும், திருமங்கை மன்னனும் பாடி மகிழ்ந்திருக்கிறார்கள். முன்னவர் இருவரும் ஆளுக்கு ஒரு பாட்டே பாட, திருமங்கை ஆழ்வார் மட்டும் பத்துப் பாட்டுகள் பாடியிருக்கிறார். இவர் 'பற்றலர் வீயக்கோல் கையில் கொண்டுபார்த்தன் தன்தேர்முன் நின்றனை முடிதுறந்து இராவணவதம் முடித்த இராவணாந்த கனையுமே பாடுகிறார். இதோடு விடுகிறாரா?

*"பிள்ளையைக் கீறி வெகுண்டு*
*தூண்புடைப்ப பிறை எயிற்று*
*அனல்விழிப் பேழ்வாய்*
*தெள்ளிய சிங்கம் ஆகிய*
*தேவை, திருவல்லிக்கேணி*
*கண்டேனே"*

என்று அழகிய சிங்கரையுமே பாடுகிறார். ஆனையின் துயரம் தீரப்புள் ஊர்ந்து ஆழிதொட்ட கஜேந்திர வரதனே தென்னன் தொண்டையர்கோன் செய்த நன்மயிலைத் திரு அல்லிக்கேணியில் நிற்கிறான் என்றும் அறுதியிட்டு உரைப்பார். ஆழ்வார்கண்ட அல்லிக்கேணியான் அழகன் அமுதன், ஆதியான் என்பதையெல்லாம் அறிகின்றன போது, நாமும் சென்று தொழுது அவனது கிழே அதைக் கேட்டு வீடுபெறுவது என்றே நினைக்கத் தோன்றுகிறது.

# 44. மறைக்காட்டு மணாளர்

பல வருடங்களுக்கு முன்னர் தந்தையாரோடு பணிபுரிந்த நண்பர் ஒருவர் அங்குள்ள ஜில்லா போர்டில் பணிபுரிந்தார். அச்சமயம் நிதி நிலைமை திருப்திகரமாக இல்லாதலால் ஆரம்பப்பள்ளி நடத்துவது சிரமமாக இருந்தது. அச்சமயத்தில் அவ்வூரிலுள்ள பெரிய மனிதர் களாவது அல்லது பஞ்சாயத்து போர்டில் பணிபுரியும் அன்பர்களாவது பணம் கொடுத்து சேர்க்க முன்வரவில்லை. அதுசமயம் பள்ளியை மூட வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டதும் திருப்பணந்தாளிலுள்ள ஆதீனத் தலைவர் பள்ளியை ஏற்று நடத்த முன்வந்தார். அப்பள்ளியைத் திறந்து வைக்க என் நண்பரையே அழைத்தார். அதுசமயம் அந்த நண்பர் பள்ளியை மூடியபோதிலும், அண்ணா ராலேயே பள்ளியைத் திறந்து வைக்க ஏற்பாடு செய்தார். இச்செய்தியை என் நண்பர் அதனை நினைவுகூர்ந்தார். என் நண்பர் இப்படி அவராகவே இருந்து பள்ளியை மூடவும் திறக்கவும் செய்ததுபோலவே ஒரு நிகழ்ச்சி ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் நடந்தது நினைவுக்கு என் தந்தைக்கு வந்தது.

பள்ளியை மூடியும், மறுபடியும் திறக்கவும் செய்த ஒரு நண்பரால் முடிந்தது என்றால் ஞானசம்பந்தராலும், நாவுக்கரசராலும் வேதாரண்யத்திலுள்ள ஆலய முகப்பு வாயிலிலிருந்த மூடிய கதவைத் திறக்கவும், மூடவும் செய்துள்ளது மிகவும் பாராட்டத்தக்கதாகும். நான்கு வேதங்களாலும் பூசித்து பேறு பெற்ற இடமாதலால் வேதாரண்யம் - திருமறைக்காடு என்று பெயர் பெற்றது.

இவ்கோவிலில் இருப்பவர் மறைக்காடரும் துணைவியர் யாழைப் பழித்த மொழியாளும் மக்களால் போற்றப் படுகின்றனர். அப்பரும், ஞானசம்பந்தரும் இத்தலத்துக்கு வந்த நாளில் வேதங்களால் பூசித்து திருகாப்பு செய்த கதவைத்தான் அப்பர் அடிகள் கீழ்வருமாறு திறக்குமாறு பாடலை பாடுகிறார்.

*"பண்ணின் நேர் மொழியாள் உமை பங்கரோ!*
*மண்ணினார் வலஞ்செய் மறைக் காடரோ!*
*கண்ணினால் உமைக் காணக் கதவினை*
*திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே!"*

என பத்து பாடல்கள் கதவைத்திறந்து வைத்திருக்கிறார். திறந்த கதவை அப்படியே திறந்திருக்க விடாது பின்னர் முன்பிருந்தது போலவே, கதவினை அடைக்கவும் சம்பந்தர்

*"சதுரம் மறைதான் துதிசெய்து வணங்கும்*
*மதுரம் பொழில் சூழ் மறைக்காட்டு உறைமைந்தா*
*இது நன்கு இறைவைத்து அருள் செய்க எனக்கு உன்*
*கதவம் திருக்காப்புக்கொள்ளும் கருத்தாலே!"*

என தமது பதிகத்தில் பாடியுள்ளார்.

இங்குள்ள மணலெல்லாம் லிங்கமாகவும், ஜலம் எல்லாம் தீர்த்தமாகவும் கருதப்படுகின்றன. இங்குள்ள கடல் வேதமென்றே கருதப்படுகிறது. அதனால் இத்தலத்தையே ஆதிசேது என்பர் சீதையை மீட்கச்சென்ற ராமன் முதல் முதல் அணைகட்டத்தேடி எடுத்த இடம் இதுதான். அதுசமயம் அங்கு வசித்து வந்த பறவைகளும் பிராணிகளுமே வேதவன ஈஸ்வரரிடத்திலே ஆட்சேபத் திருக்கின்றன. அவரும் அக்காரியத்தில் ஈடுபட்டுச் சேதுவைத் தேவிபட்டணத்தருகே கட்டுவது எளிது, மேலும்

நல்லது என கூறியிருக்கிறார். இது காரணமாகவே ராமனும் சேதுவில் அணைகட்டினார்.

இலங்கையில் இராவணனை வதம் செய்து திரும்பிய ராமன் ராமநாதரை பிரதிஷ்டை செய்து வழிப்பட்டதும் இங்கேதான் தலபுராணம் கூறுகிறது. அதோடு ராமரை பிடித்திருந்த பிரம்மஹத்தி தோஷமும் இந்த ஆலயத்தில் உள்ள வீர ஹத்தி வினாயகரை வழிபட்ட பின்னரே நீங்கியது என்பர்.

திருவாரூரில் தேர் அழகு என்பது போல், வேதாரண்யத்தில் விளக்கு அழகு என்பது பழமொழியே வழங்கப்பட்டது. இத்தகு சிறப்பு கொண்ட தலத்தை அப்பர் பெருமான் தமது திருத்தாண்டகத்திலே மறைக் காட்டுரையும் மணாளனை புகழ்ந்துபாடியிருக்கிறார்.

*"மூரி முழங்கு ஒலிநீரானான் கண்டாய்*
*முழுத்தழல்போல் மேனி முதல்வன் கண்டாய்*
*ஏரிநிறைந்தனைய செல்வன் கண்டாய்*
*தன்னடியார்க்கு இன்பம் விளைவிப்பான் கண்டாய்*
*ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்*
*அண்ணாமலை உறையும் எம் அண்ணல் கண்டாய்*
*வாரிமதகளிறே போல்வான் கண்டாய்*
*மறைக்காட்டு உறையும் மணாளன் தானே"*

எனும் பாடலை எத்தனை தரம் பாடினாலும் உளம்பூரிக்கத் தானே செய்கிறது. இத்தலத்துக்கு அருணகிரியார் இங்குள்ள முருகனைக் குறித்து திருப்புகழில்

*"கோதில் தமிழ்க்காண கும்பமுநிவற்காகமணம்*
*செய் கோலம் அளித்து ஆளும் உம்பர் கோனே!*
*கோணத்தான் வணங்கி கோடி மறைக்காடமர்ந்த - பெருமானே"*

என பாடல் ஒன்றில் பாடியுள்ளார்.

# 45. பாண்டிக் கொடுமுடி

எப்படி வைணவர்களுக்கு ராமநாமம் உயர்ந்ததோ அவ்வளவு சிறந்தது நமச்சிவாய என்ற பஞ்சாட்சர மந்திரம். அந்த மந்திரத்தின் ஆதிகர்த்தாவாகிய சிவபெருமானைவிட உயர்ந்தது. அதனால்தான் பஞ்சாட்சரத்தைச் சைவபெரு மக்கள் ஓதிஓதி வழிபடுகிறார்கள். "காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தம்மை நன்னெறிக் குய்விப்பது அந்த நாமம் தானே" என ஞானசம்பந்தர் கூறியிருக்கிறார்.

"*கற்றுணைப் பூட்டியோர் கடலில் பாயச்சினும்*
*நற்றுணையாவது நமச்சிவாயவே*"

என அப்பர் பாடியிருக்கிறார். மாணிக்கவாசகரோ,

"*நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க*"

என தம் திருவாசகத்தில் பாடியிருக்கிறார். இவர்கள் யாவரையும் விஞ்சிவிடும் விதத்தில் சுந்தரர் நமச்சிவாய பதிகம் பாடியதிலே

"*இறைவா! உனை நான் மறந்தாலும்*
*சொல்லும் நா நமச்சிவாயவே*"

என நினைவூட்டுகிறார். அதனால்தானே பிறவாதபேறு எல்லாம் எனக்கு எளிதில் சித்தியாகிவிடுகிறது என எக்களிப்போடு பேசுகிறார்.

"*மற்றுப்பற்று எனக்கு இன்றி நின் திருப்பாதமே மனம் பாவித்தேன்*
*பெற்றலும் பிறந்தேன் இனிப் பிறவாததன்மை வந்தெய்தினேன்*
*கற்றவர் தொழுதேத்தும் சீர்க்கறை ஊரில் பாண்டிக்கொடுமுடி*
*நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே*"

எனச் சுந்தரர் பாடியுள்ளார். பல்லவ மன்னன் அப்பரை கல்லில் கட்டி கடலில் எறிந்தபோது நமச்சிவாயப் பதிகம் பாடியிருக்கிறார். சுந்தரரோ காவிரிக்கரையில் உள்ள பாண்டிக் கொடுமுடி கோயிலுக்குவந்து அங்கு இறைவனை வணங்கித் தொழும்போதே நமச்சிவாயப் பதிகம் பாடியிருக்கிறார். இக்கோயில் காவிரியின் மேற்கரையில் உள்ளது. காவிரிகரைபுரண்டு போவதைக் கண்டுதானே மணிவாசகர், "அரிய பொருளே! அவிநாசி அப்பா! பாண்டிவெள்ளமே" என்று இறைவனைக் கூவி அழைக்கிறார்.

ஒரு சமயம், ஆதிசேடனுக்கும் வாயுவுக்கும் போட்டி நிகழ்ந்தபோது வாயுவின் வேகத்தினால் ஆதிசேடனின் தலையில் உள்ள 5 மணிகள் வேறு சிதறியிருக்கின்றன. அவைகளில் வைர மணியே இத்தலத்தில் விழுந்ததாக கூறப்படுகிறது.

யாவராலும் கண்டுகளித்த கோயில்களில் சூரியன் கோபுரவாயில் கொடிமரம், நந்தி முதலிய எல்லாவற்றையும் கடந்து கருவறைவந்து இறைவனை தழுவிஇருக்கிறான் வருடத்தில் இரண்டு மூன்று நாட்கள் ஆனால் ஒரு தலத்திலும் இறைவியை அவன் பூஜித்ததாக இல்லை.

இத்தலத்தில் மட்டும் ஆவணி, பங்குனி மாதங்களில் 3 அல்லது 4 தினங்கள் சூரியன் ஒளி முறையே இறைவன் அம்பாள் இருவர் பேரிலுமே விழுகின்றது. இப்படி சூரிய ஒளிபடும்படி கோவில் கட்டிய சிற்பிகள் எத்தனை கைதேர்ந்தவர்களாகவும், கற்பனை உடையவர்களாகவும் இருந்திருக்க வேண்டும் என்று மட்டும் எண்ணினால் நம்மை அறியாமலேயே நமது தலை அந்த சிற்பிகளுக்கு

வணங்கும். இத்தலத்துக்கு சமயக்குரவர்கள் நான்கு பேரும் வந்திருக்கிறார்கள். பாடல்கள் புனைந்துள்ளார்கள். ஏன், கபிலரும் பாடிய பாடல் ஒன்று பெற்றிருக்கிறது. 11-ம் திருமுறையில் இரட்டை மணிமாலையில் அகத்துறையில பாடப்பட்டது. ஒரு பெண் கொடு முடியாரிடம் காதல் கொண்டு வாடுகிறாள். அப்பெண்ணின் தாய் இறைவனிடம் சென்று இப்படி அவள் நாளுக்கு நாள் மெலிந்து வாடி நையவிடலாமா என்று கேட்கிறாள். இதுவே பாட்டாக வருகிறது கபிலதேவநாயனாரது வாக்கில் நிறம் பிறிதாய் உள்மெலிந்து நெஞ்சுருகிவாளா புறம்புறமே நான்போக்குவாளோ - புறம் படுமுடியாய் பாய்நீர் பரந்து பாண்டிக்கொடுமுடியாய்! என்றனகொடி" பாடலைப் பாடிப்பாடி மகிழலாம். இங்குள்ள முருகனை அருணகிரியாருடன் சேர்ந்து 'குரு எனச் சிவனுக்கு அருள் போதா? கொடுமுடிகுமரப்பெருமாளே' எனப்பாடி பரவி விட்டு திரும்புவோம்.



# 46. திருப்புத்தூர் திருத்தளிநாதர்

இறைவனின் தாண்டவத் திருவுருவங்கள் ஏழு என்பர். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து செயல்களே இறைவன் செய்கிறான். ஒவ்வொரு செயலைச் செய்யும்போது ஒவ்வொரு தாண்டவம் புரிகிறான் என்றும் அறிவோம். ஐந்து கிருதயங்களுக்கும் ஐந்து தாண்டவக் கோலம்தானே இருத்தல் வேண்டும். ஏழு என்ன கணக்கு? என்று நீங்கள் கேட்பீர்கள். ஐந்து செயல்களுக்கும், ஐந்து தாண்டவம் அதில் காத்தலே இரண்டு கூறாய்ப் பிரித்து இன்பக் காத்தல் இரண்டு கூறாய்ப் பிரித்து இன்பக் காத்தல், துன்பக்காத்தல் என்று பாகுபாடு பண்ணி ஐந்தை ஆறாக்கியிருக்கிறார்கள். பின்னர் எல்லாச் செயல்களையும் ஒருமிக்கச் செய்யும் ஆனந்தத் தாண்டவமே இத்தாண்டவ வடிவங்களுக் கெல்லாம் சிகரமாகிறது இத்தாண்டவ வடிவங்களே இறைவனே தன் துணைவியாம் பார்வதிக்குக் கூறியதாக வரலாறு.

*"மாதவர் பரவும் ஆனந்த நடனம்*
*வயங்குறு சந்தியா நடனம்*
*காதலி! நின்பேர்க் கௌரி தாண்டவனே*
*கவின்பெறு திரபுர நடனம்*
*ஓதுமாகாளி தாண்டவம், முனிதாண்டவம்*
*ஓடும் உலக சங்கார*
*மேதகு நடனம் இவை இவை நாம்*
*விதந்த தன்னுமம் என்று உணர்தி"*

என்பது பாட்டு இவற்றில் கௌரி தாண்டவத்தை அன்னை பார்வதியின் வேண்டுகோளுக்காகவே ஆடிக் காட்டியதாக ஐதீகம். அது காத்தல் தாண்டவத்தில் இன்பக் காத்தலே விளங்கும். அன்னைக்காக ஆடிய தாண்டவத்தில் இன்பக் காத்தல் இல்லாதிருக்குமா? தில்லைப் பொன்னம்பலத்தில் ஆனந்த தாண்டவத்தையும், மதுரை வெள்ளியம் பலத்திலே சந்தியா தாண்டவத்தையும், திருக்குற்றாலத்துச் சித்திர சபையிலே திரிபுர தாண்டவத்தையும், திருவாலங்காட்டு ரத்தின சபையிலே காளி தாண்டவத்தையும் புரிகிறார் என்று அந்தந்தத் தல வரலாறுகள் கூறும். அப்படியானால் கௌரி தாண்டவம் ஆடிய தலம் எது? இதை ஆராய்ந்தால் கௌரி தாண்டவம் ஆடிய இடம்தான் திருப்புத்தூர் சித்சபை என்று கண்டோம். இங்குள்ள சித்சபையில் இன்று நின்று நடனம் ஆடுபவர் ஆன்ந்த நடராஜர் தான் சிவசக்தியான கௌரி பெருமானோடு கூட, அவள் தன் ஊடல் தீர்க்க இந்தத் தாண்டவத்துக் கதை. கௌரியம்மையார் தலம் ஏழு என்பதும் ஒரு வரலாறு. இந்தத் தாண்டவக் கோலம் ஒன்று இன்று சென்னைப் பொருட்காட்சி சாலையில் இருக்கிறது. காஞ்சிபுரத்தை அடுத்த கூரம் என்ற இடத்திலிருந்து எடுக்கப்பட்டது என்று தெரிகிறது. நான்கு கைகளுடனும் வலது கையில் தடியையும் இடது கையில் பாம்பையும் ஏந்திய கோலம் இன்னும் ஒரு கரம் அபயகரம், மற்றொன்று கஜஹஸ்தம். முயலகன் பேரில் ஊன்றிய திருவடி எடுத்த பொற்பாதம் கழன்று ஆடாத நிலை. இத்தகைய அற்புதக் கோலத்தில் ஆடிய தலமே திருப்பத்தூர் அத்தலத்துக்கே செல்கிறோம் நாம் இன்று.

தமிழ்நாட்டில் திருப்புத்தூர்கன் இரண்டு ஒன்று ராமநாதபுரம் மாவட்டத்தில், மற்றொன்று வட ஆற்காடு மாவட்டத்தில் இரண்டில் பாடல் பெற்ற தலம் ராமநாதபுரம்

மாவட்டத்தில் உள்ளதே. இந்த ஊர் காரைக்குடி ஸ்டேஷனிலிருந்து நேர் மேற்கே பதினைந்து மைல் தொலைவில் இருக்கிறது. மதுரைக்கு வடகிழக்கே 40 மைல் தூரம் மதுரையிலிருந்து செல்ல விரும்பினால் ஒன்று சொந்தக்கார் இருக்க வேண்டும் இல்லை, பஸ் பிரயாணத் தோடு திருப்தி அடைய வேண்டும். காரைக்குடியிலிருந்து காரில் சென்றால் வழியில் குன்றக்குடி முருகனையும், பிள்ளையார்பட்டிப் பிள்ளையாரையும் தரிசித்து விட்டே செல்லலாம். பிள்ளையார்பட்டிக்கும் திருப்பத்தூருக்கும் இடையே நான்கு மைல் தூரம் தான். மெயின் ரோட்டை ஒட்டியே கோயில் இருக்கிறது. இந்த ஊரில் அன்று கோட்டை இருந்திருக்க வேண்டும் இன்று இருப்ப தெல்லாம் இடிந்த மதில் சுவர்கள் தாம். கோயில் கிழக்கு நோக்கியிருக்கிறது சுவாமி கோவிலுக்கு நேராக ஒரு கோபுர வாயிலிலும், அம்பாள் சந்நிதிக்கு நேராக ஒரு கோபுர வாயிலும் இருக்கின்றன. கோயில் பெரிய கோயில் அல்ல, கோயில் திருவண்ணாமலை ஆதீனத்தார் மேற்பார்வையில் தான் இருக்கிறது. கோயில் வாயிலில் ஒரு கீற்றுக் கொட்டகை இருக்கும் அதைக் கடந்தே கோயிலினுள் நுழைய வேணும். கோயிலின் வடக்குப் பிரகாகரத்தில் பைரவர் சந்நிதி மேற்குப் பார்க்க இருக்கிறது. இங்கு பைரவர் வரப்பிரசித்தி உடையவர் இந்தக் கோயிலில் திருமால் திருமகள் சந்நிதி, அகத்தீஸ்வரர் சந்நிதிகள் எல்லாம் உண்டு நடராஜர் சிவகாமி எல்லாம் இருக்கிறார்கள் என்றாலும் அங்கிருப்பவர் ஆனந்த நடராஜரே கௌரி தாண்டவர் அல்ல. இத்தலத்தில் அம்மை சிவகாமி இக்கோயிலில் இருக்கும் செப்புச் சிலைகளில் உயர்ந்தவை, சிறப்பானவை, ராமர், சீதை, இலக்குமணர் சிலைகள் தாம் இவை எப்படி இந்தச் சிவன் கோயிலுக்கு வந்தன என்று தெரியவில்லை. எங்கேயோ புதையுண்டு கிடந்தவைகளை

எடுத்து வைத்திருக்கிறார்கள். இங்கேதான் வான்மீகர், அகத்தியர், திருமகள், இந்திரன் மகன் சயந்தன் எல்லாம் வழிபட்டதாக வரலாறு. ஆண்டுதோறும் சித்திரை மாதம் முதல் வெள்ளிக்கிழமை சயந்தன் பூசை நடக்கிறது. வெளிப்பிரகாரத்தில் மேல் பக்கத்தில் சப்த மாதர், தல விருட்சமான கொன்றை மரம் ஆகியவை இருக்கின்றன. இத்தலத்துக்கு அப்பர் வந்திருக்கிறார், சம்பந்தர் வந்திருக்கிறார்.

*"மின் காட்டும் கொடி மருங்குல்*
*உமையாட்கு என்றும்*
*விருப்பவன் காண்; பொருப்புவலிச்*
*சிலைக்கை யோன் காண்,*

*நன் பாட்டுப் புலவனாய்ச்*
*சங்கம் ஏறி நற் கனகக்*
*கிழி தருமிக்கு அருளி*
*னோன் காண்,*

*பொன் காட்டக் கடிக் கொன்றை*
*மருங்கே நின்ற*
*புனக் காந்தள் கைகாட்டக்*
*கண்டு வண்டு,*

*தென் காட்டும் செழும் புறவில்*
*திருப்பத்தூரில்*
*திருத்தளியான் காண்*
*அவன் என் சிந்தையானே!"*

என்பது அப்பர் தேவாரம். மதுரையில் சோம சுந்தரக் கடவுள் தருமிக்குப் பாட்டெழுதிக் கொடுத்துப் பாண்டியனிடம் பொற்கிழி பெறவைத்த வரலாறெல்லாம் கூறப்பட்டு இருக்கிறது தேவாரத்தில். சம்பந்தரும் ஒரு பதிகம் பாடியிருக்கிறார்.

*"வெங்கள் விம்மு வெறியார்*
*பொழில் சோலை*
*திங்களோடு திளைக்கும்*
*திருப்புத்தூர்க்*
*கங்கை தங்குமுடியார்*
*அவர் போலும்*
*எங்கள் உச்சி உறையும்*
*இறையாரே!"*

என்பது சம்பந்தர் தேவாரம்.

இந்தக் கோயிலில் கல்வெட்டுக்கள் நிறைய இருக்கின்றன. கேரள சிங்க வள நாட்டுப் பிரமதேயமான திருப்புத்தூர் என்றும் கொழுவூர் கூற்றத்து பிரம தேயமான திருப்புத்தூர் என்றும் இவ்வூர் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டு இருக்கிறது. திருக்கற்றளிப்பட்டாரர் ஸ்ரீ தளிப்பரமேசுரர் திருத்தணியாண்டநாயனார், கைலாசமுடைய நாயனார், திருத்தளிப் பெருமானடிகள் என்று இறைவன் குறிக்கப்பட்டிருக்கிறான். நடராஜரைக் கூத்தாடு தேவர் என்று குறித்திருக்கிறார்கள். காமக் கோட்டமுடைய நாச்சியார் திருப்பள்ளியறை நாச்சியார் என்று அம்பிகை குறிப்பிட்டிருக்கிறாள். இந்தக் கல்வெட்டுக்களிலிருந்து கிடைக்கும் தகவல்களே அனந்தம். கோயில் விளக்குக்கு நாற்பது கழஞ்சு பொன் கொடுத்தது, விளக்கெரிக்க ஐம்பது ஆடுகள் வழங்கியது கோயில் திருவிழாவுக்கு நெல் அளித்தது, கோயிலுக்கு நெல்லும் பொன்னும் ஒரு வணிகன் அளித்தது எல்லாம் தெரிகின்றன. திருப்புத்தூர் சபையார் ஜெயங்கொண்ட விண்ணகராழ்வார் கோயிலில் கூடி நரலோக வீரன் சந்நிதி என்று கோயிலில் ஏற்படுத்தியது தேவாரம் பாடத் தானம் வழங்கியது முதலிய தகவல்களுமே கிடைக்கும்.

ஆளுடைய பிள்ளையால் சம்பந்தர் சந்நிதியில் பூஜைக்குப் பொருள் கொடுத்தது பாண்டியன் ஸ்ரீ வல்லபதேவன் அரசி உலக முழுதுடையாள் கோயில் மடைப்பள்ளி கட்டியது கணிகை ஒருத்தி கோயில் திருவிழாவுக்காக ஒரு திருவுருவம் எடுப்பித்தது. இன்னும் எண்ணற்ற தகவல்கள் நமக்கு இந்தக் கல்வெட்டுகளிலிருந்து கிடைக்கும். அவகாசம் இருப்பவர்கள் இத்தலத்துக்கு வடமேற்கே பதினைந்து மேல் தொலைவில் உள்ள பிரான்மலைக்கும் சென்று திரும்பலாம். பிரான்மலை வேள்பாரி இருந்து அரசாண்ட இடம் என்பர். அதனைக் கொடுங்குன்றம், கொடுங்குன்றேசரும், குயிலமிர்த நாயகியும் அங்கே கோயில் கொண்டிருக்கிறார்கள். சம்பந்தர் பாடியிருக்கிறார்:

*"வானில் பொலிவு எய்தும்மழை*
*மேகம் கிழித்து ஓடிக்*
*கூனற்பிறை சேரும் குளிர்*
*சாரல் கொடுங்குன்றம்*
*ஆனிற் பொலி ஐந்தும்*
*அமர்ந்தாடி உலகேத்தத்*
*தேனிற் பொலி மொழியாளொடு"*

என்பது சம்பந்தர் தேவாரம். கோயில் மலை அடிவாரத்தில் இருக்கிறது. மலைமேல் ஏறிச் சென்றால் அங்கு பைரவர் சந்நிதியும் கல்யாணக் கோலத்தில் இருக்கிறார். தேவ சபை என்று ஒரு மண்டபமும் இருக்கிறது. பிரான் மலையில் உள்ள முருகன் அருணகிரியாரது திருப்புகழ் பாடும் பெருமை பெற்றவன். இவர்களையும் கண்டு வணங்கி விட்டுத் திரும்பலாம்.

# 47. சிக்கல் சிங்காரவேலர்

மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் எம் பெருமானை குராமரத்தின் அடியில் சனகாதி முனிவர்களுக்கு உபதேசம் செய்திருந்ததைக் கண்டார். சிவபெருமான் சிவத்தொண்டு செய்யவே இவரைப் பூமியில் பிறப்பிக்கச் செய்தலால் சிக்கெனப் பிடித்தார். ஆனால் மணிவாசகர் எம்பெருமானைச் சிக்கெனப் பிடித்ததாகப் பாடியுள்ளார். இந்த சிக்கலில் மாட்டிக் கொண்ட எம்பெருமானின் குமாரன் சிங்கார வேலனைப் பற்றிய நிகழ்ச்சியைப் பார்ப்போம். இங்குள்ள வேலவர் மிகவும் நல்லவராயிற்றே! இவர் ஏன் தந்தையைப் போல் சிக்கலில் மாட்டியுள்ளார் என ஐயம் தோன்றியது அங்கு விசாரித்ததில் சிக்கிக் கொண்டவர் சிங்காரவேலவர் அல்ல என்பது புரிந்தது. அவருடைய தந்தையரான வெண்ணெய் லிங்கேசுவரரே அங்கே சிக்கிக் கொண்டு தரிசனம் தருவதாக கூறினார்கள்.

வசிஷ்டர் இங்குள்ள ஆலய குளக்கரைக்கு வந்துள்ளார் பால் குளத்தில் உள்ள நீரை எடுத்துக் காய்ச்சி நிறைய வெண்ணெய் எடுத்து இருக்கிறார். அதையே லிங்க வடிவில் பூசையும் செய்திருக்கிறார். அதனால் எம்பெருமானை அங்கேயே விட்டுவிட்டுச் செல்ல வசிஷ்டருக்கு மனமில்லை. உடனே அந்த வெண் ணெயால் ஆன இலிங்கத்தைப் பெயர்த்தெடுக்க முயற்சித்தார். ஆனால் அவரோ பிரதிஷ்டை செய்த இடத்திலேயே சிக்கிக் கொள்கிறார். பாவம், வசிஷ்டர் ஏமாற்றத்துடன் ஊர் திரும்பினார். இப்படி இந்த வெண்ணெய் பிரான் சிக்கிக்

கொண்ட இடமே சிக்கல் எனும் தலமாகும். அதோடன்றி இவரது குமாரன் சிங்காரவேலரும் எத்தனையோ பக்தர்கள் உள்ளத்திலே சிக்கிக் கொண்டிருக்கிறார். இப்படி ஒரே சிக்கல் மயம் தான் அங்கு இப்பொழுது செல்வோமே!

ஒவ்வொரு மாதமும் கிருத்திகையன்று சிங்கார வேலவர் தம் மனைவியர் இருவருடன் எழுந்தருளியுள்ளார். இக்கோவில் கோட்செங்கண் சோழனால் கட்டப்பட்டது. இது மாடக் கோவிலாக கட்டப்பட்டுள்ளது. அங்குள்ள மூலவரான வெண்ணெய்பிரானை தரிசித்தி விட்டு வர வேண்டும். இங்குள்ள சிங்காரவேலவர் அழகான திருவுருவு கொண்டவர். மூன்று அடி உயரமே உடையவர் என்றாலும் கம்பீர கோலத்துடன் நிற்கிறார். இந்த சிங்காரவேலனைத் தரிசித்தி விட்டு, மலையைவிட்டு இறங்கி கீழ்தளத்தில் கோவில் கொண்டிருக்கும் வேல் நெடுங்கண்ணி அம்மனை தரிசிக்கலாம். சூரபத்மனை முருகன் சம்ஹாரம் செய்ய கிளம்பியிருக்கிறார் அவரிடம் அப்போது படைகள் இருந்தாலும் முக்கியமான வேல் இருக்கவில்லை. இதனை உணர்ந்த அம்மையார் வேல் நெடுங்கண்ணி ஓடோடி வந்து தம் மகனாம் வேலவருக்கு வேல் ஒன்றைக் கொடுத்தார். அந்த வேலால் தானே சூரனை வதைத்திருக்கிறார். அதனால் சிக்கலில் வேல் வாங்கி செந்தூரில் சூரனை வதம் செய்தார். சிக்கலில் சூரனை வதம் செய்ய புறப்படும் முந்தைய நாள், தாயிடம் வேல் வாங்குவது அவ்வூர் மக்கள் விழாவாகக் கொண்டாடுகின்றனர். அதை விட சிறப்பானது சிங்காரவேலவர் முகத்தில் வியர்வை அரும்புவது எங்குமே காணக் கிடைக்காத காட்சியாகும்.

இக்காட்சியைக் காணவே கந்தசஷ்டி விழாவிற்கு லட்சக்கணக்கான பக்தர்கள் கூடுவதை இன்றும் காண முடிகிறது.

# 48. கல்லூரி விழாவில் கலந்து கொண்டு முடிவுரை கூறியது

ஒரு சமயம் எனது நண்பர், கல்லூரியில் நடந்த விழாவிற்கு பேச வரும்படி அழைத்திருந்தார். அடியேன் அங்கே சென்றதும் கரும்பலகையில், "கம்பன் கண்ட ராமனில் சிறப்பாயிருப்பது அவனது அறிவா, ஆற்றலா, அழகா" என எழுதியிருந்ததைக் கண்டதும் எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை. எதற்கு என்னை தலைப்பு கூறாமலே அழைத்துள்ளனர் என என் மனம் வேதனைப் பட்டது.

இந்த 3 தலைப்பிலும், நன்கு தேர்ச்சி பெற்ற தமிழ் மாணவர்கள், கம்பராமாயணத்தில் பலவித ரஸமான மேற்கோள்கள் காட்டி, தங்களது ஆராய்ச்சி திறமையை வெளிப்படுத்தினர். முடிவில், வெகு சிரமத்தோடே அடியேனது கருத்தை கூற முற்பட்டேன்.

கம்பன் ராமனை, 'அறிவின் உம்பரான்' எனக்கூறி உள்ளது உண்மைதான் என்ற போதிலும், அறிவுடமை அவனிடத்தில் சிறப்பாய் அமைந்திருந்தது என கம்பர் கூறியதாக எங்கும் காணவில்லை. அப்படி கருதி இருந்தால், "நாயக! நீயே பற்றி நல்கலைபோலும்" என்று மாயமானை வேண்டி, சீதை கண்ணீர் வடித்ததும், உடையை வரிந்து கட்டிக் கொண்டு, தம்பியின் எச்சரிக்கையும் கேளாது, மான் பின்னே ராமன் ஓடினான் என்று கூறியிருப்பானோ? மேலும், வாலி மீது அம்பெய்தி வீழ்த்தியதும், வாலி கேட்ட கேள்விகளுக்குத் தகுந்த பதில்

சொல்ல இயலாமல் ராமன் திணறுவதைக் கண்ட இலக்குவன் நொண்டி சமாதானம் கூற வேண்டி நேரிட்டது. இதனால், ராமனிடத்து அறிவு சிறந்து இருந்தது எனக் கூற வாய்ப்பில்லை என்றேன்.

அடுத்து, ராமன் எவ்வளவு அழகனோ, அந்த அளவுக்கு ஆற்றல் உடையவனே தாடகை, கரன், கும்பகர்ணன், இராவணன் போன்றோர்களைப் போரில் வீழ்த்தியது என்ன அவ்வளவு எளிதானதா? சோடை போன ஆற்றலா அவைகள் இராது. சீதையை மணம் முடிக்க சிவதனுசுவை அனாயசமாக எடுத்து முறித்தானே, மராமரத்தையும் ஒரே அம்பினால் துளைத்தவனாயிற்றே. இருந்தபோதிலும் இந்த ஆற்றல் எல்லாம் புகழுடையதாக அமைய சீதா தேவியின் கற்புதானே துணை நின்றது. தனது கற்பு எனும் கனலால் தானே இராவணன் வெந்திருக்கிறான். சீதை எனும் அமிழ்தால் செய்த நஞ்சல்லவா இராவணனைக் கொன்றிருக்கிறது. ஆதலால் கம்பன் கண்ட ராமனிடம் ஆற்றல் சிறந்திருக்கிறது எனக் கூற வாய்ப்பில்லை என விளக்கமளித்தேன்.

இராமனது அழகை நினைத்தால், கம்பனே விம்மி பெருமிதம் கொண்டு விடுகிறான்.

ஆடவர் பெண்மையை அவாவும் தோள்கள் உடையவன் என்றல்லவா காவியத்தில் கூறுகின்றான். புய வலிமையைக் கூற வரும்போது, 'அலை உருவக்கடல் உருவத்து ஆண்தகை" என்றல்லவா புகழ்ந்துள்ளான் கம்பன். ராமனைக் காணும் சூர்ப்பனகைக் கூட, அவனது செந்தாமரைக் கண்ணிலும் செங்கனி வாயிலும், வளமைமிக்க தோளிலும், அவன் வடிவிலும் தானே மயங்குகிறாள். நிரம்பச் சொல்வானேன். "மையோ,

மரகதமோ, மறி கடலோ, மழை முகிலோ! ஐயோ இவன் வடிவு என்பதோர் அழியா அழகு உடையான்" எனக் கம்பனே ராமனது அழகை வர்ணிக்கிறான்.

ஆதலால் கம்பன் கண்ட இராமனில் சிறந்து விளங்குவது அவனது அழகே என தீர்ப்பைக் கூறியதும் இது கம்பனது வெற்றியல்ல, ராமனது வெற்றி அல்ல அழகினது வெற்றி தான் இது. இந்நிலவுலகிலே அழகு தருகின்ற வெற்றியை, அறிவோ, ஆற்றலோ தருவதில்லை என்பதற்கு இதைவிட சிறந்த ஆதாரம் வேண்டுவதில்லை. இத்தகு அழகின் வெற்றியை இன்னும் அனுபவிக்க வேண்டு மானால், அவனது மருமகனான முருகனிடமே இதனைப் பற்றி தெரிந்துக் கொள்ள வேண்டுமாயின், அருணகிரி யாரது பாடலான "விழையும் மனிதரையும்" எனத் துவங்கும் பாடலில் பின்பகுதி 4 அடிகளிலும் பாடியுள்ளது, கம்பன் கூறும் ராமனது வர்ணனையை விட விஞ்சி விடும் விதத்தில் உள்ளதைக் காணலாம். பாடல்

*"எழுதரிய அறுமுகமு மணி நுதலும், வயிரமிடை*
*யிட்டுச் சமைந்த செஞ்சுட்டி கலக்கலன்களும் - துங்கநீள்பன்*
*னிருகருணை விழி மலரு மிலகுபதினிருகுழையும்*
*ரத்நக் குதம்பையும் பத்மக்கரங்களும், செம்பொனூலும்*
*மொழி புகழுமுடை மணியு மரை வடமு மடியினையு*
*முத்தச் சதங்கையும், சித்ரச்சிகண்டியுஞ், செங்கை வேலும்,*
*முழுதுமழகிய குமர கிரிகுமரியுடனுருது*
*முக்கட் சிவன் பெறுஞ் சற்புத்ரவும்பர்தந் - தம்பிரானே"*

என்று தன் உள்ளத்தினால் அழகு ஒழுக எழுதிப் பார்க்க நினைத்தது, கம்பனது ராமன் அழகை விவரித்ததையும் விஞ்சி விடுகிறது. கம்பரோ, ஆயிரம் கண்கள் அவனது அழகைக் காண படைத்திலனே என்று தான் கூறினார். அருணகிரியாரோ, முருகனது அழகைக் காண 4000 கண் படைத்திலனே எனப் பாடியுள்ளது கவனிக்கற் பாலது.

# 49. செங்காட்டாங்குடி உடையான்

திருத்தொண்டர் பெரியபுராணம் எழுதியவர் சேக்கிழார். அறுபத்துமூன்று நாயன்மாரது சரித்திரத்தை வரலாற்று முறையில் எழுதியிருக்கிறார். தெய்வம் மணக்கும் செய்யுள்களில் அதைவிட பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டக் கதைகளைச் சொல்கிறார் அவர். அந்தப் புராணத்தில் வரும் நாயன்மார்கள் எல்லோருமே அவரவர் கடைப்பிடித்த காரியத்தில் எத்தனை இடையூறு வந்தாலும் அத்தனைக்கும் ஈடுகொடுத்து வெற்றி கண்டவர்கள் செயற்கரிய செயல்கள் பல செய்தவர்கள். இவர்களில் திருத்தொண்டின் உறைப்பிலே தலைநின்றவர் சிறுத்தொண்டர். அவரது வரலாறு ரஸமானது; ஏன்! கொஞ்சம் பயங்கரமானதும் கூட, பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் படைவீரர்களில் ஒருவராகச் சேர்ந்து படிப்படியாக உயர்ந்து சேனாதிபதியாக உத்தியோகம் ஏற்கிறார் பரஞ்சோதி. மகேந்திரவர்மனது மகனான நரசிம்மன் என்னும் மாமல்லனுக்கு உற்ற துணைவனாகப் பணியாற்றுகிறார். காஞ்சி வட்டாரத்தில் சளுக்க மன்னன் புலிகேசி செய்த அட்டூழியங்களுக்குப் பழிவாங்க, மாமல்லன் சளுக்கர்கள் மீது படையெடுத்துச் சென்றபோது, படையை முன்னின்று நடத்திய வீரர் பரஞ்சோதி. சளுக்கர் தலைநகரமான வாதாபியைத் தீக்கு இரையாக்கி வெற்றி கண்டார்.

*"மன்னவர்க்குத் தண்டுபோய்*
*வடபுலத்து வாதாபித்*
*தொன்னகரம் துகளாகத்*
*துளைநெடுங்கை வரைபகைத்துப்*
*பன்மணியும் நிதிக்குவையும்*
*பகட்டினமும் பரிசுதொகையும்*

*இன்னன எண்ணில் கவர்ந்தே*
*இகலரசன் முன் கொணர்ந்தார்"*

அவர் என்று சேக்கிழார் பாராட்டுகிறார். இப்படிப் போருக்குச் சென்ற வீரர் எல்லாம் பலப்பல பொருள்கள் கொண்டு வர, சேனாதிபதி பரஞ்சோதியார் மட்டும் வாதாபிக் கோட்டை வாயிலில் இருந்த கணபதியைக் கைப்பற்றிக் கொணர்ந்து தம் சொந்த ஊராகிய திருச்செங்காட்டாங்குடியில் ஒரு கோயில் கட்டிப் பிரதிஷ்டைச் செய்து விடுகிறார். வாதாபிப் போரில் இரு தரத்து மக்களும் மற்ற உயிரினங்களும் பட்ட துயரையெல்லாம் அறிந்து அன்றே சேனாதிபதிப் பதவியை உதறிவிட்டு, துறவு பூண்டு தம் ஊரிலேயே தங்கி விடுகிறார், மனைவி வெண்காட்டு நங்கையுடனும், மைந்தன் சீராளனுடனும். இப்படித்தான் 'தம் பெருமான் திருத்தொண்டுசிறுத்தொண்டர்' என்ற பெயரோடு வாழ்ந்து வருகிறார் செங்காட்டாங்குடியில் இவரது தொண்டின் சிறப்பை உலகுக்கு உணர்த்த விரும்புகிறார் இறைவன். பைரவ வேடத்துடன் வந்து சேருகிறான், சிறுத் தொண்டரிடம் தன்னை உத்தராபதியான் என்று அறிமுகம் செய்து கொள்கிறான். அமுது செய்தருள வேண்டும் என்று கேட்ட சிறுத்தொண்டரிடம், 'ஒரு தாய்க்கு ஒரு மகனாக, அங்கம் பழுதில்லாத மைந்தன் ஒருவனை, அறுத்துக் கறி சமைத்துத் தந்தால் உண்போம்' என்கிறான். பள்ளி சென்ற பாலன் சீராளனையே அழைத்து வந்து, சிறுத்தொண்டரும், வெண்காட்டு நங்கையும் அரிந்து கறி சமைக்கிறார்கள். உத்தராபதியாரை உள்ளே அழைக்கிறார்கள். எழுந்தருளிய அவரோ, உடன் உண்ணப் பிள்ளையை அழைக்க வேண்டுகிறார், 'இப்போது அவன் உதவான்' என்று சொல்லிப் பார்த்தும் கேளாததால் அவர் விரும்பிய படியே வெளியே சென்று 'மைந்தா! வருவாய்! என்று அழைக்கிறார்' சிறுத்தொண்டர் நங்கையும், 'செய்ய மணியே சீராளா! வாராய் சிவனார் அடியார் யாம் உய்யும் வகையால், உடன்

உண்ண அழைக்கின்றார்' என்றே ஓலமிடுகின்றார் அப்பொழுதே சீராளன் பள்ளியிலிருந்து ஓடிவருபவன் போல ஓடி வருகிறான். வந்த உத்தரா பதியாரும் மறைந்து ரிஷபாரூடராகக் காட்சி அளிக்கிறார். என்னே இவர் தம் திருத்தொண்டின் சிறப்பு? வாளால் தன் மகவையே அரிந்து சிவனடியாருக்கு ஊட்ட முனைகின்ற தொண்டு செய்தவர் தான் சிறுத்தொண்டர் என்னும் அரிய பெரிய தொண்டர். அவர் பிறந்து வளர்ந்த பதியே திருச்செங்காட்டாங்குடி அந்தப் பழங்குடிக்கே செல்கிறோம்.

திருச்செங்காட்டாங்குடி, தஞ்சை ஜில்லாவில் திருவாரூர் மாயூரம் ரயில் பாதையில் தன்னிலம் ஸ்டேஷனுக்குக் கிழக்கே ஒரு மைல் தொலைவில் இருக்கும் சிறிய ஊர். நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து வண்டி வைத்துக் கொண்டு செல்லலாம். தஞ்சை ஜில்லாவில் கொம்பில்லாத மொட்டை மாடுகள் பூட்டிய வில் வண்டிகள் தான் பிரசித்தமானவை ஆயிற்றே. இல்லை கார் வசதி உடையவர்கள் எல்லாம் அந்த நன்னிலம், நாகப் பட்டிணம் சாலையில் திருப்புகலூர் போய் முடி கொண்டான் ஆற்றின் மீது சமீப காலத்தில் கட்டியிருக்கும் பாலத்தைக் கடந்து கண்ணபுரம் வழியாகவே போகலாம். இந்தத் திருப்புகலூர் கண்ணபுரத்தில் உள்ள கோயில்களுக்குமே நான் இனிப் போகப் போகிறோம். ஆதலால் நேரே விறுவிறுவென்றே வண்'டியையோ காரையோ நன்னிலம் ஸ்டேஷனுக்கு நேர் கிழக்கே எட்டு மைல் தொலைவில் உள்ள திருமருகலுக்கே தட்டி விடலாம். அதுதானே செங்காட்டாங்குடிக்குப் பழைய பாதை, செங்காட்டாங்குடி போகுமுன் திருமருகலில் கோயில் கொண்டிருக்கும் மாணிக்கவண்ணரையும், வண்டுவார்குழலியையுமே தரிசித்து விடலாம். இந்த மருகலுக்கு வந்து இறைவனை வணங்கிய அப்பர்,

*"பெருகலாம் தவம்; பேதமை தீரலாம்:*
*திருகலாகிய சிந்தை திருத்தலாம்:*
*பருகலாம் பரம் ஆயதோர் ஆனந்தம்;*
*மருகலான் அடி வாழ்த்தி வணங்கவே"*

என்று பாடியிருக்கிறாரே, தவத்தால் பெறும் பேற்றையும், பேதைமை தீர்வதை விட, திருகிக் கொண்டே இருக்கும் சிந்தையைத் திருத்திக் கொள்ளலாம் என்றல்லவா கூறுகிறார் அப்பர். ஆம்! சிந்தையைத் திருத்தத் தெரியாமல் தானே பெரிய அவதிக்குள்ளாகிறோம் நாம். ஆதலால் மருகல் சென்று திருகும் சிந்தையைத் திருத்திக் கொண்ட பின்னரே மேல் நடக்கலாம், மருகல் கோயிலில் இறைவன் இருப்பது ஒரு கட்டு மலை மேலே; சோழன் செங்கணான் கட்டிய மாடக் கோயிலில் ஒன்று இது. இங்கிருக்கும் மாணிக்க வண்ணர் சுயம்புமூர்த்தி, இம்மூர்த்திவரப் பிரசாதி என்பதை விஷம் தீண்டி இறந்த செட்டிப் பிள்ளையை ஞானசம்பந்தர் உயிர்ப்பித்தருளிய கதையிலிருந்து தெரிந்து கொள்கிறோம். கதை இதுதான்; செட்டியார் மரபைச் சேர்ந்த இளைஞன் ஒருவன்; அவன் மாமன் மகளை வேறு ஒருவனுக்குக் கட்டிக் கொடுக்க அவளது பெற்றோர் முனைகின்றனர். ஆனால் காளையும் கன்னியுமோ நல்ல இளங்காதலர்கள். ஆதலால் அவன் தன் காதலியைக் கூட்டிக் கொண்டு ஊரைவிட்டே புறப்படுகிறான். மருகல் வந்து இரவில் ஒரு திருமடத்தில் தங்குகிறார்கள் இருவரும். இளைஞனை அன்றிரவு பாம்பு தீண்டி விடுகிறது. அவன் உயிர் துறந்து விடுகிறான். செட்டிப் பெண்ணோ கதறித் துடிக்கிறாள். அப்போது ஞானசம்பந்தர் அந்தத் தலத்துக்கு வந்து சேருகிறார். பெண்ணின் துயரை அறிகிறார், பாடுகிறார்.

*"சடையாய் எனுமால், சரண்நீ எனுமால்*
*விடையாய் எனுமால், வெருவா விழுமால்*
*மடையார் குவளை மலரும் மருகல்*
*உடையாய் தகுமோ இவள் உள் மெலிவே!"*

என்று தான் கேட்கிறார். மருகல் உறை மாணிக்கத்தை விடம் தீண்டிய செட்டி உயிர் பெற்று விடுகிறான். மருகல் கோயிலில் பார்த்து அனுபவிக்க வேண்டிய சிற்ப வடிவங்கள் இல்லை, ஆனால் தெற்கு வாயிலுக்கு எதிர்ப்புறம் சீராளன் படித்தப் பள்ளி இருக்கிறது. அந்தப் பள்ளியில் இன்றைய தேவஸ்தானம் ஆபீஸ் இருக்கிறது. அதையும் பார்த்து விட்டு மேற்கு நோக்கி இரண்டு மைல் சென்றால் செங்காட்டாங்குடி வந்து சேரலாம்.

*"உருகுமனத் தடியவர்கட் கூறும் தேனை உம்பர்பணி*
*முடிக்கணியை உண்மை நின்ற, பெருகு நிலைக் குறியாளர்*
*அறிவு தன்னைப் பேணிய அந்தணர்க்குமறைப்பொருளைப்*
*பின்னும் முருகுவிரி நறமலர் மேலயற்கும் மாற்கும்*
*முழுமுதலை மெய்த்தவத்தோர் துணையை வாய்த்த*
*திருகுகுழல் உமை நங்கை பங்கன் தன்னைச்*
*செங்காட்டங்குடி யதனிற் கண்டேன் நானே."*

என்று பாடியிருக்கிறார். நாமும் அவருடன் சேர்ந்தே பாடி, வாய்த்த திருக்குழலியை வணங்கி உள்ளே செல்லலாம். இனி மேற்கு நோக்கி நடந்து மகா மண்டபத்தையும் கடந்து அர்த்த மண்டபத்துக்குச் சென்றுகோயிலுள் இருக்கும் இறைவனையும் வணங்கலாம். வணங்கும்போதே ஓதுவார், ஞானசம்பந்தர் பாடிய பதிகத்திலிருந்து

*"நுண்ணியான், மிகப் பெரியான்,*
*நோவுளார் வாய்உளான்*
*தண்ணியான், வெய்யான்*
*தலைமேலான், மனத்துளான்*
*திண்ணியான் செங்காட்டாங்*
*குடியான், செஞ்சடைமதியக்*
*கண்ணியான், கண்ணுதலான்*
*கணபதீச் சுரத்தானே"*

என்ற பாட்டைப்பாடுவார். இந்தச் செங்காட்டாங் குடியுடையானைக் கணபதீச்சுரத்தான் என்று கூறுவானேன்

என்று கேட்கத் தோன்றும் நமக்கு. கஜமுகாசுரன் என்பவன் தேவர்களுக்கு இடுக்கண் செய்ய, அவனை ஒழித்துக் கட்ட, சிவகுமாரரான விநாயகர் யானை முகத்துடன் அவதரித்து அவனைக் சம்ஹரித்திருக்கிறார். இந்தக் கஜமுகாசுரனை சம்ஹரித்தபோது அவனது இரத்தம் செங்காடாய் பெருகிய காரணத்தால் செங்காட்டாங்குடி என்ற பெயர் நிலைத்தி ருக்கிறது. இந்தப் பழி நீங்க இத்தலத்தில் இறைவனைக் கணபதி வழிபட்ட காரணத்தால் கணபதீச்சுரர் என்று பெயர் பெற்றிருக்கிறது. இப்படிக் கணபதீச்சுரம் என்று அமைத்த காரணத்தால் தானோ என்னவோ, வாதாபி கணபதியும், தமிழ்நாட்டுக்குள், 'முதல் முதல் இந்தத் தலத்திலேயே புதைந்திருக்கிறார், சேனாதிபதியார், பரஞ்சோதியார் துணைக் கொண்டு இன்னும் இத்தலத்துக்கு எத்தனை எத்தனையோ பெயர்கள் அத்தனையையும், விவரிக்கப் புகுந்தால் அதுவே ஒரு பெரிய 'ராமாயணம்' ஆகும். கணபதீச்சுரத்தானை வணங்கிக் கொண்டு நிற்கும்போதே பக்கத்தில் ஒருவர் வந்து நிற்பார். அவர் யாரென்று உற்று நோக்கினால் அவரே சிறுத்தொண்டர் என்று அறிவோம். கூப்பிய கையோடு, தம் மனைவி வெண்காட்டு நங்கை, பையன் சீராளன் எல்லோரையும் கூட்டிக் கொண்டே வந்திருப்பாரா அவர். ஆம்! செப்புச் சிலை வடிவத்தில்தான். அவரது முகத்திலோ சாந்தி தவழும், பணிவும் வளிதமும் ஒருங்கே தோன்றக் கைகூப்பி நிற்கும் கோலம் அழகு வாய்ந்தது. பிள்ளைக் கறியமுதுக் கதையைப் பற்றிக் கொஞ்சம் நஞ்சம் சந்தேகம் உள்ளவர்களும், இத்தகைய பக்தர் எதையும், அருமைச் சீராளனையுமே இறைவனுக்கு அர்ப்பணிக்கத் தயங்க மாட்டார் என்பதையுமே காண்போம் நாம். சீராளன் திருவுரு எவ்வளவு அழகானதாக உள்ளது. அறுத்து கறி சமைத்த பிள்ளையைத் திரும்பவும்

அவசரத்தில் தானே பிசைந்து உருவாக்கியிருக்க வேண்டும் எப்படியும் பிள்ளை உயிர் ஓவியமாக நிற்கின்றானே, அது போதாதா? இனிதான் தென் பக்கமுள்ள சந்நிதிக்கு வந்து உத்தராபதி ஈசுவரரைக் காணவேணும், நின்ற கோலத்தில் இருக்கும் பைரவமூர்த்தம், இவ்வடிவம் உருவானதைப் பற்றி ஒரு கதை. ஐயடிகள் காடவர்கோன் விருப்பப்படி சிற்பிகள் உத்திராபதியார் சிற்ப வடிவை உருக்கி வார்க்க முயன்று வெற்றி காணவில்லை. அந்தச் சமயத்தில் ஒரு சிவயோகி வந்து குடிக்கத் தண்ணீர் கேட்டு, சிற்பிகள் கொடுத்த கொதிக்கின்ற கருவையே உண்டு செப்புக் சிலையாக நின்றுவிட்டார் என்பார்கள். உண்ண வந்து அமர்ந்தவர் நின்று கொண்டே இருந்திருப்பார் என்று எண்ணிய நிர்வாகிகள் அவரையே இருந்த கோலத்திலும் புதிதாக ஒரு வடிவம் வார்த்து வைத்திருக்கிறார்கள். இந்த உத்தராபதி ஈசுவரர் சந்நிதிக்கு எதிரே தான் அவர் வந்து முதலில் தங்கியிருந்த அத்திமரம். மரத்தைப் பார்த்தாலே அது எவ்வளவு பழைய மரம் என்று தெரியும், இனிவெளிப் பிரகாரத்துக்கு வந்து மேற்கு நோக்கி, நடந்தால், வாதாபி கணபதியை தரிசிக்கலாம். இத்தலத்திலே நிறைய விநாயகர்கள் தல விநாயகர், வேண்டும் விநாயகர், இங்கு ஒரு விசேஷமும் உண்டு. வாதாபி கணபதி, உத்திரா பதியார், அம்பிகை எல்லோருக்குமே இரண்டிரண்டு, கைகள் தாம். இவையெல்லாம் கூர்ந்து கவனிக்கத் தக்கவை.

மேலப் பிரகாரத்துக்கு வந்து வடக்கே திரும்பினால் இத்தனை சிரமப்பட்டு இத்தலத்துக்கு வந்து இவ்வளவு நேரம் சுற்றியதும் வீண் அல்ல என்று காண்போம். இங்கு தான் நவதாண்டவமூர்த்திகள் நிற்கிறார்கள், நல்ல கற்சிலை உருவிலே. சிவதாண்டவம் ஏழு என்பர் ஒரு சிலர், இல்லை அது பதினாறு வகை என்பர் இன்னும் சிலர். அது தவறு

தாண்டவத் திருவுருவம் நூற்றுஎட்டு என்பர் சிற்ப நூல் வல்லார். ஒரு கணக்கிலும் சேராமல் நவதாண்டவம் என்று எழுதியிருக்கும். அங்கே இருப்பது என்னவோ எட்டுப் பேர்கள் தான். புஜங்கலளிதர், கஜசம்ஹாரர் ஊர்த்துவ தாண்டவர் என்று காலசம்ஹாரர், கங்காளர், பிக்ஷாடனர், திரிபுரசம்ஹாரர், பைரவர் என்பவர்களே அவர்கள். இவர்களுடன் உத்திராபதியாரையும் சேர்த்தே ஒன்பது என்று கணக்கிட்டிருக்கிறார்கள். இவர்களில் நால்வரே தாண்டவத் திருவுருவினர்; மற்றவர் தாண்டவத் திருவுருவினர்; போகட்டும்; இந்த விவாதம் எல்லாம் நமக்கு வேண்டாம். இருக்கும் சிலாவடிவங்கள் அத்தனையும் அழகு வாய்ந்தவை. அழகுக்கு அஞ்சலி செய்து அமைதி பெறலாம் அவர்களில் இருவரையே பார்க்கிறீர்கள், முன் பக்கத்தில் இக்கோயிலில் இன்னொரு விசேஷம், காலையில்தொழுதால் இப்பிறப்பின் துயர் அகலும், மாலையில் தொழுதால் ஏழ்பிறப்பின் வெந்துயரம் எல்லாம் விடும் என்பர். ஆதலால் மாலை வேளையே செல்லுங்கள்.

இக்கோயிலில் 32 கல்வெட்டுக்கள் இருக்கின்றன. சோழ மன்னர்கள் விஜயநகர மன்னர்கள் செய்த திருப்பணிகள், ஏற்படுத்திய நிபந்தங்கள் எல்லாவற்றையும் விரிவாகக் கல்வெட்டுக்கள் கூறும். இவர்களில் முக்கிய மானவன், ராஜராஜ சோழன் காரியஸ்தனான தென்னவன் மூவேந்த வேளான் என்பவனே. அவன்தான் கோயிலின் பெரும் பகுதியைத் திருப்பணி செய்திருக்கிறான். இன்று கோயில் கோபுரம் எல்லாம் திரும்பவும் திருப்பணி செய்ய வேண்டிய நிலையில் இருக்கிறது. தென்னவன் மூவேந்த வேளான் திரும்பவும் அவதரிக்க மாட்டான். ஆதலால் திருப்பணி செய்ய வேண்டியவர்கள் தமிழ் மக்களே என்பதை மட்டும் ஞாபகமூட்டி, விட்டு நான் விடை பெற்றுக் கொள்கிறேன்.

# 50. நாலாயிரதிவ்யப் பிரபந்தம் தோன்றிய வரலாறு

சிதம்பரத்துக்கு பக்கத்தில் வீர நாராயணபுரம் எனும் வைணவ க்ஷேத்திரத்தில் நாதமுனிகள் என்ற யோகி ஆழ்வார்களுக்குப் பின்தோன்றிய வைஷ்ணவ ஆச்சார்ய பரம்பரையிலே முதன்மை ஸ்தானம் பெற்று வாழ்ந்தவராவார். சங்கீத நிபுணரும் கூட. குடும்ப சகிதமாய் வட மதுரை, பிருந்தாவனம், துவாரகை, கோவர்த்தனம், அயோத்தி, பத்ரிகாச்ரமம் முதலிய தலங்களை தரிசித்த பின்னர் தென்னாட்டில் அகோபிலம், திருப்பதி, காஞ்சி, ஸ்ரீரங்கம் முதலிய தலங்களை தரிசித்துவிட்டு கும்ப கோணத்தில் சாரங்கபாணியைத் தரிசிக்க வந்து நிற்கிறார். அப்பொழுது அங்கு வந்த வைணவ யாத்ரீகர் ஒருவர்

*"ஆராஅமுதே அடியேன் உடலம் நின்பால் அன்பாயே*
*நீராய் அலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே*
*சீலர் செந்நெல் கவரி வீசும் செழுநீர்த்திருக்குடந்தை*
*ஏரார் கோலம் திகழக் கிடந்தாய் கண்டேன் அம்மானே"*

எனத்துவங்கும் நம்மாழ்வார் பாடலைப்பாடினார். பாட்டிலும் பாடல் பொருளிலும் உள்ளம் பரவசமாகி மெய்மறந்து நிற்கிறார் நாதமுனிகள்.

கடைசியில் யாத்ரீகர் "குருகூர்ச்சட கோபன் குழல் மலியச் சொன்ன பாயிரத்துள் இப்பத்தும் மழலை தீர்வல்லார் காமாநோக்கியர்க்கே" எனப்பாடி முடித்தார்.

யாத்ரீகரை நோக்கி, இப்பிரபந்த முழுதும் தங்களுக்கு பாடவருமோ என நாதமுனிகள் கேட்க யாத்ரீகர் அந்த பத்து

பாடல்களுக்குமேல் தமக்குத் தெரியாது என்றார். அன்று முதல் நம்மாழ்வார் பாடல்களை எல்லாம் சேகரிக்க முயன்றார். நம்மாழ்வார் அவதரித்த குருகூர் வருகிறார். நம்மாழ்வாரின் சீடராக இருந்த மதுரகவி ஆழ்வாருடைய பரம்பரையிலே வந்த ஒருவரைக் கண்டு பிடித்து நம்மாழ்வார் பாடல்களைச் சேகரித்து அதன் மூலமாகவே ஏனைய ஆழ்வார்கள் பாடிய பாசுரங்களையும் சேகரித்து நாலாயிர திவ்யப் பிரபந்தமாகத் தொடுக்கிறார். அவ்வாறு தொகுத்தப் பாடல்களே, நாலாயிர திவ்யப் பிரபந்தம் என வழங்கலாயிற்று.

அந்த நாதமுனிகளை இப்பணியில் ஈடுபடுத்தியவன் ஆராவமுதன் ஆவான். தில்லையில் சைவப்பரம்பரையிலே திலகமாக விளங்கிய வ.த. சுப்ரமணிய பிள்ளையை தோற்றுவித்து, அங்கு தில்லை தீட்சதர்கள் தங்கள் சம்வாதத்தில் எடுத்துக்காட்டிய திருப்புகழ்பாடல் "தாதுமாமலர் முடியாலே" எனத் துவங்கும் பாடல் ஒன்றில் 7-வது அடியாகிய,

*"வேதநூன்மறை வழுவாமே தினம்*
*வேள்வியால் புனை மூவாயிர மேன்மை வேதியர்*
*மிகவே பூசனை - புரிகோவே"*

வரும் கருத்தைக் கேட்ட மாத்திரத்தில் மனம் ஈர்க்கப்பட்டு அன்று முதல் தம் வாழ்நாளைத் திருப்புகழ் ஓலைச் சுவடிகளைச் சேகரிப்பதில் முழு மூச்சோடு உழைத்து தந்த பாடல்களே இன்று நம் எல்லோராலும் போற்றியும் பாடியும் வருவதற்கு காரணமான தில்லை நடராசப்பெருமானே ஆவான்.

அதனால்தான் நாராயணனும் நடராசப்பெருமானும் சேர்ந்தே தரிசனம் தந்து நம் அனைவரையும் மதத்துவேசமின்றி வாழ வகை செய்யவே காட்சி அளிக்கிறார்கள் போலும்.

# 51. திருவாசகத்தின் சாரங்கள்

மலம் என்பது முன்று வகைப்படும் : மாயை, கர்மம், ஆணவம் என்பதாகும். மலம் இகத்தில் மட்டும் தான் இடம் பெறும். அதுவே பரத்திலோ பரசொரூபமாக மென்மை யுறுகிறது. உதா : இகத்தில், திருப்பாற்கடல் கடைந்த போது, ஆலகால எனும் விஷம் தோன்றியதை, சிவனாரிடத்து பரத்திலே ஸ்ரீகண்டமாக திகழ்கிறது.

மேலும் ஒரு உதாரணம்: பாம்பின் பல்லில் உள்ள விஷம் அதற்கு அலங்காரம். அதே விஷம் மற்ற உயிர்களுக்கு விஷமாகத் தோன்றி, மரணத்தை விளைவிக்கிறது. ஆகையால் இப்பிரபஞ்சம் அமிர்த சொரூபமாகவும், மலமாகவும் மாறி மாறி அமைகிறது. உடல் வளர்ச்சிக்குப் பயன்படுகிற பகுதியாகவும் பிரிவுபடுகிறது, அந்த பயன்படாத பகுதியே மலமாகும். அது உடலினின்று நீங்காவிடில், உயிருக்கே ஆபத்து. நாம் உண்ணும் உணவு அமிர்தமாக இருந்து, பிறகு அதுவே மலமாகிறது. நாம் சுவாசிக்கும் காற்று உள்ளே புகுந்ததும் பிராணவாயு என்றும், வெளிவிடும் காற்று கரியமில வாயு என்றும் எனப்படுகிறது. நாம் பருகும் பானங்களும் உடலுக்கு பயன் பட்டான பிறகு, சிறுநீராக வெளியே வருகிறது. அதுவும் மலமே; உலகிலுள்ள எல்லா வஸ்துக்களும், அமிர்த மாகவும், மலமாகவும் மாறி மாறி அமைந்து வருவது வெளிப்படை. வாழ்க்கையை அழிக்க வல்லது மலம்.

<u>பிரபஞ்சத்திற்கு மற்றொரு பெயர் மாயை</u> ஜீவராசிகள் பலகோடி பிறவிக்ளில் பரிணமித்துப் பக்குவமாய் கொண்டு

வரும்போது, மாயா சக்தியானது, தாயின் நிலையிலிருந்து அந்த ஜீவாத்மாவைப் பேணி வருகிறது. அப்படி ஜீவாத்மாவைப் பக்குவப்படுத்தும் நிலையிலிருக்கும் மாயையை மலம் எனலாகாது. உதா : தாயின் கர்ப்பத்தில் சிசு உருவாகிறது, அப்படி உருவெடுப்பதற்குத் தாயின் கர்ப்பம் போற்றுதற்குரிய துணையாகிறது, கரு முற்றிலும் வளர்ச்சியடைந்த பிறகு, கர்ப்பத்தினின்றும் வெளியே சிசுவாக வரும்போது, வளர்ந்த கர்ப்பமானது சிசுவிற்கு மலமாகிறது. அம்மலத்தினின்று வெளியேறாவிடில் கரு அழிந்து போய் விடும். இதே விதத்தில் மாயை எனும் பிரகிருத்தாய, ஜீவாத்மாவைப் பரமாத்மாவோடு சேரும் தருவாயில், மாயையானது மலம் எனும் பெயர் பெறுகிறது. அவ்விதம் நிகழாவண்ணம், ஜீவாத்மா உலக மாயையில் உழன்று கொண்டேயிருக்குமானால், மறுபடியும் மாயை எனும் வசத்தில் அகப்பட்டு, பிறவி எடுத்துக் கொண்டே வருகிறது, இதனைத் திருப்புகழில், அருணகிரியார் "எழுகடல் மணலை அளவிடின் அதிகம் எனதிடர்பிறவி" முடியாப் பிறவிக் கடல் என்றும் வர்ணிக்கிறார். இதையேதான் மணிவாசகரும், புல்லாய், பூடாய், புழுவாய், மரமாய் - என வர்ணித்துள்ளார்.

<u>கர்மம் :</u> பிரபஞ்சம் முழுவதுமே கர்ம சொரூபம். இது ஜீவாத்மாவின் முன்னேற்றத்திற்கு துணை போகிறது, மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரணத்தாலும் நிகழ்வது கருமம். ஆத்மா, பரமாத்மாவோடு லயமாகிற போது கர்மம் முடிவடைகிறது, அத்தருணத்தில் அதற்கு மலம் எனும் பெயர் வருகிறது.

<u>ஆணவம் :</u> அணு என்னும் அடிச்சொல்லில் இருந்து பிறந்தது ஆணவம். ஜீவாத்மா முதலில் ஒரு சிறு

அணுவாகப் பரிணமித்து, பிறகு தன்னை ஒரு நுண்ணிய உயிராக எண்ணிக் கொள்வது ஆணவம். இறுதியில் பரமாத்மாவோடு ஒன்றுபடும்போது ஆணவம் அழிந்து போகிறது. கடலை நோக்கி கீழே விழுந்து கொண்டிருக்கும் ஒரு மழைத்துளிக்கு வடிவம் இருக்கிறது. கடலில் விழுந்ததும், மழைத்துளி எனும் ஆணவம் அல்லது நாமரூபம் அதற்கில்லை. ஆகவே ஆணவம் எனும் மலத்தை விட்டு பரத்தில் லயமாவது ஜீவாத்மாவின் குறிக்கோள்.

நீரினின்றும் எடுத்துப் போட்ட மீனானது, கரையில் போட்டதும், தன்னுடைய சொந்த இடம் அல்ல என்று துள்ளி குதிக்கிறது. பிறகு சதுப்பு நிலத்தை எட்டிவிட்டால், சிறிது ஆறுதல் பெறுகிறது, அங்கு கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொண்டபிறகு மேலும் தப்பிக்க முயல்கிறது. பிறகு சேற்றுக்குள் வந்து விழுந்தால் இன்னும் கொஞ்சம் நிம்மதி அடைகிறது, அடுத்த எத்தனத்தில் அதன் அருகாமையில் உள்ள ஆழமற்ற நீர்நிலையை எட்டுகிறது. அதன் விளைவாக அதற்கு இன்னும் சிறிது உயிர்வருகிறது. பிறகு அதன்மூலம் சிற்றோடைக்கிடைத்ததும், தனக்கு உய்வு கிடைத்ததாக நினைக்கிறது பெரிய ஆற்றில் போய் சேர்ந்ததும், சிறிதும் கவலையின்றி இருக்கிறது. அதன் மூலமாய் அந்த ஆற்றில் நீர் கடலில் கலந்ததும், தனக்கேற்ற வீடு பெற்றதாகிறது. கடவுளிடத்தில், இருந்து பிரிந்து பிரபஞ்ச வாழ்வுக்கு வந்த மனிதன், அந்த மீனின் நிலையில் இருக்கின்றான். தெய்வீகத்தைப் பெற்றதும் அவன் அல்லனிடன்றும் விடுபடுகிறான்.

"மெய்யே உன் பொன் அடிகள் கண்டு வீடுற்றேன்" என்பது அவன் அடைகின்ற முடிந்த நிலை. அதுவரை

மனிதன் கரையேற உதவும் நிலைகளுக்கு நல்ல துணையாவது திருவாசகம் போன்ற நூலேயாகும்.

மணிவாசகர் நான்கு தகுதிகளையும் பெற்றவராவார்.

1 அரசனிடத்தில் மந்திரியாக இருந்தமையால், புவி ராஜனாய் விளங்கியது, யாவர்க்கும் வெளிப்படை.

2 திருவாசகம் எனும் நூலை, உலகினர்க்கு வழங்கியதால் கவிராஜன் எனப்பட்டார்.

3 அவர் வாழ்ந்த பெருவாழ்வு, அவரை தவராஜன் ஆக்கியது.

4 அவர் பெறுதற்கரிய பக்தியை பெற்றதினால், பக்தராஜனாக விளங்கினார்.



மாணிக்கவாசகர்



வ.த. ஸுப்ரமண்யப் பிள்ளை
1846-1909



வ.சு. செங்கல்வராயப் பிள்ளை
1883-1971



அ தணிகைவேலன



ஸ்ரீ அருணகிரிநாதர்

நூலாசிரியா

சிவ அ தணிகைவேலன அவாகள செனனை புரசைககடுதத குயபபேடடையில 1955-ம ஆணடு திருபபுகழ மாமணி மு அருணகிரி அவாகளுககும திருமதி சுசிலா அமமையாருககும மூதத மகனாகப பிறநதவராவாா தன தநதையாரினமூலம ஸ்ரீவளளிமலை திருபபுகழ சசசிதானநத சுவாமிகளை மானசீக முறையில குருவாக ஏறறவா அனனாரது தநதையாருடன பல காலம திருபபுகழ பாடி வருபவா மூவா தேவாரததிலும திருவாசகம உளபட பனனிரு திருமுறைகளிலும மிகுநத பறறுடையவா இநநூலில அருணகிரியாரது வாககு ஞானமணம வீசுவதை உணர முடிகிறது பெணமைககுப பெருமை சோதத சேககிழாரின உளளககிடககை நனகு பளிசசிடுகிறது கதிாகாமததைபபறறிய செயதிகள மிகவும ரசிததுப படிககும பாணியில அமைநதுளளது மணிவாசகரைபபறறிய அரிய கருததுககள பரிமளிககினறது ஒரு தனிசசிறபபாகும பேரூரைபபறறிய செயதிகளை சிவனடியே சிநதிபபோாககு மிகவும உரம ஊடடுவாதாக அமைநதுளளது மதுரையில இறையவா காலமாறி ஆடியதை வெளளியமபலததில பாாபபவாககு மதுரை செனறு காணத துடிககும விதததில கடடுரை உளளது மேலும பறபல அரிய ஆனமீகச செயதிகள அடககியுளள இநநூல நனனூல என கருத முடிகிறது